
கமலா ஒரு பாடம்
கற்றுக் கொள்கிறுள்...


மீனுவின் சின்னப் பிள்ளை மணி அடிக்கடி நழுவ விடும் பொம்மைகள் எல்லாம் கீழே கமலாவின் வீட்டில் வந்து விழும்.




மணி! இன்னெரு பொம்மையைக் கீழே போட்டுத் தொலைத் தாயா, போக்கிரி!


கமலாவின் வீட்டில்
மீனுவிடம் மணியின் பொம்மை களைக் கொடுத்து விடுகிறது தானே!
கொஞ்சம் இருங்கள். முதலில் அவனுக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும்...


அதற்குப் பிற்பாடு
பார்! இப்போது ஒரு சவுக்கத்தைப் போடுகிறுர்கள்.
(யோசிக்கிறுள்) இதற்கு ஏது இவ்வளவு சுத்தம் — ஆச்சரியமா யிருக்கே...


மீனுவின் வீட்டில்
கமலா! மணியின் பொம்மைகளையா திருப்பித் தர வந்திருக்கிறீர் கள்..
ஆமாம் — உங்கள் சவுக்கத் தைக் கூடத் தான் — அதோடு உங்களை ஒரு கேள்வி கேட்க வந்தேன் —


இவ்வளவு சுத்தமா எப்படி வெளுக்கிறீர்கள்? சொல்லுங்கள். நீங்கள் அடித் துத் துவைக்கும் சத்தம் கூடக் கேட்பதில்லையே
நான் அடித்துத் துவைப்பதில்லையே, காரணம், ஸன்லைட் சோப் உப யோகிக் கிறேன்


அடித்துத் துவைப்பதனுல் நாலிழைகள் அறுந்துவிடும், ஆகவே துணிகள் விரைவில் கிழிந்து போகும்"


அடித்துத் துவைத்த துணி பூதக் கண்ணுடி மூலம்


ஸன்லைட் சோப்பின் செழிப்பான நுரை, அடித்துத் துவைக் காமலேயே, சுத்த மாக சலவை செய் கிறது-அதன் மூலம், ஆடைகளின் ஆயுளை யும் நீடிக்கச் செய் கிறது


உண்மைதான்! அடித்துத் துவைக் காமலேயே, ஸன்லைட் சோப் துணிகளைப் பளிச் சென்று வெளுக் கிறது — ஆகவே, துணிகள் நீடித் திருக் கின்றன; பணமும் எனக்கு மிச்சமாகிறது!


SUNLIGHT
SOAP
Reward!
SUNLIGHT SOAP

பொருளடக்கம்

Vol. XXVII] துன்முகி௵ வைகாசி௴ 21௳ ஜூன் 3, 1956. [No. 18



"மித்திரன்" வாரப்பதிப்பில் வெளிவரும் கதைகளில் பெயர்கள், சம்பவங்கள் எல்லாம் கற்பனையே; அவை யாரையும் குறிப்பிடுவன அல்ல







பார், பார்! சமயப் பற்றில்லா சமுகம் தறிகெட்டு ஓடுவது போல!

கார் ஓட்டத் தெரியாத பையனொருவன், ஏதோ விஷமம் செய்து ஒரு லாரியைக் கிளப்பி விட்டான், ஸர்வோதய புரத்தில்!

வாழிய செந்தமிழ் — சுதேசமித்திரன் — வாழ்க நற்றமிழர்

வாரப்பதிப்பு



# சுபிட்ச சர்வோதயம்

ஸ்ரீணக்கடலான ராமபிரானுக்கு ராஜ்ய பட்டாபிஷேகம் கோலாகலமாக நடந்து முடிகிறது. அதை யடுத்து பலஸ்ருதி கூறி ராமாயண மஹா காவ்யத்தைப் பூர்த்தி செய்கிறார் வால்மீகி. இந்த பலஸ்ருதியிலே ராமராஜ்யம் எவ்வளவு சீரும் சிறப்புமாகத் திகழ்ந்தது என்பது பற்றி மிகவும் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அத்தகைய லக்ஷணங்கள் பொருந்திய மற்றொரு ஆட்சி இன்று வரை வேறொன்றும் நடைபெறவில்லை என்று சரித்திரம் சான்று பகர்கின்றது. ஆகவேதான், சிறந்த ஒரு நல்லாட்சிக்கு உதாரணமாக 'ராம ராஜ்யம்' என்று கூறுகிறோம். மஹாத்மாவின் கனவும் ராமராஜ்யமே!

இன்றும் சில மகனீயர்கள் ராமராஜ்யக் கனவை நனவாக்க முயன்று வருகின்றனர். 'நகரங்களுக்குள் எல்லாம் சிறந்ததாக'க் கருதப்பட்ட காஞ்சீபுரத்தில் லக்ஷ்யங்களில் எல்லாம் சிறந்ததாகக் கருதப்படும் ராமராஜ்யத்தை நிறுவப் பிரயாசைப்படும் பெருந்தலைவர்கள் கூடி தங்கள் முயற்சிக்கு ஆதரவும், ஆலோசனையும் கோரினார்கள். சென்ற வாரம் காஞ்சியில் நடைபெற்ற சர்வோதய சம்மேளனம் பற்றித்தான் குறிப்பிடுகிறோம். சர்வோதயத்தின் முழு மலர்ச்சி ராம ராஜ்யம் என்பதுதான் அத்தலைவர்களின் பூரண நம்பிக்கை.

சம்மேளனத்துக்குத் தலைமைவகித்த ஸ்ரீ அப்பாசாகிப் பட்டவர்த்தன் சிறந்த சமூகப் பணியாளர். அவர், தாங்கள் ஸ்தாபிக்க நினைக்கும் சர்வோதய சமாஜம் எப்படியிருக்கும் என்று தெளிவாகக் கூறியுள்ளார். அந்த சமாஜத்தில் எத்தகைய ஹிம்ஸைக்கும் இடமிராதாம். எல்லோரிடையேயும் மகிழ்ச்சி பொங்கிய வண்ணமிருக்குமாம். பூதானம், கிராமத் தொழில்கள், அஹிம்ஸாதர்மம் ஆகியவைகளைக்கொண்டு இத்தகைய சிறந்த சமாஜத்தை உருவாக்கமுடியும் என்று அவர் அறிவுறுத்தியிருக்கிறார். மேலும், "சர்வோதய சமாஜத்தில் தனிப்பட்ட யாருக்கும் சொத்துரிமை இருக்காது; இந்த உரிமையைத் துறக்க ஜனங்களைத் தயார் செய்யுமுன் அவர்கள் வட்டிக்குப் பணம் கொடுப்பதை முதலில் நிறுத்தவேண்டும்" என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

மக்கள் வாழ்வு சீர்படுவதற்கான வழிகளைப் பேசியவர்களில் ராஜாஜியும் ஒருவர். கடவுள் பக்தியை வளர்த்து, பணச் செலவைக் கூடியவரை தடுக்கவேண்டிய அவசியத்தை அவர் வலியுறுத்தி

தனே, பணமே அடியோடு வெறுத்துத் தள்ளத் தக்கதொரு விஷயம்; அது வெறும் மாயை என்று அடித்துப் பேசியிருக்கிறார். இழிதொழில் என்று இன்று கருதப்படும் தோட்டித் தொழில் முதல், உயர்ந்த தொழிலாகக் கருதப்படுவதுவரை அனைத்தும் சம அளவு பெருமையுள்ளனவே என்றும் ஸ்ரீ பட்டவர்த்தன் பட்டவர்த்தனமாகப் புகன்றுள்ளார்.

சர்வோதய சம்மேளனத்தில் வெளியான மேற்குறித்த உபதேசங்கள் எல்லாம் தற்போதைய நவீன யுகத்திற்கு ஒத்தவைதானா என்று நம்மில் பலர் வியப்புறலாம். இக்கருத்துக்களை அடியோடு அலட்சியம் செய்யவும் அநேகர் முற்படலாம். ஆனால், ஆழ்ந்து சிந்தித்துப் பார்ப்பவர்களின் முடிவு அவ்வாறு இராது. நமது முன்னோர்கள் வாழ்வைப் பெரிதாக எண்ணியவர்களல்ல. அதை விட உன்னதமான ஆத்மீக வாழ்வில் அவர்கள் சாஸ்வதமான சாந்தி கண்டவர்கள். என்றாலும், இந்நாடு சமீப காலத்தில் சுய நினைவு இழந்து வெளியாரின் பகட்டான வாழ்வில் பெரு மோகம் கொண்டது. 'லோகாயத வாழ்வில் விஞ்ஞானம் அபரிமிதமாக வளர்ச்சி பெறலாம்; ஆனால் அதனால் மனிதனுக்கு சாந்தி வாராது; அவனுடைய அல்லலைத்தான் அது பெருக்கும்' என்ற உண்மையை கிழக்கு நாட்டுப் பேரறிஞர்கள் மட்டுமின்றி மேலைநாட்டு மேதாவிகளும் உணர்ந்து வெளிப்படையாகக்கூற முற்பட்டுள்ளனர். ஆகவே, நமது முன்னோர்கள் வாழ்ந்த ஆத்மீக வாழ்வு உயர்ந்ததே என்பது வெள்ளிடை மலையாகத் தெளிவாகிறது. ஆயினும், நமது பாரத சமுதாயத்தை திரும்பவும் புராதனமான உத்தம வாழ்வுக்குத் திருப்புவது என்பது அவ்வளவு எளிதான காரியமன்று. அதிலும், மக்கள் அனைவரையும் ஏககாலத்தில் உத்தம ஜீவனத்துக்கு உயர்த்துவதென்பது சாதாரண காரியமல்ல. இத்தகைய லக்ஷ்ய வாழ்க்கையில் பூரண நம்பிக்கை கொண்ட தனிப்பட்ட சிலர் இந்தக் கொள்கையை வாழ்ந்தே காட்டுவது சாத்தியமாகலாம். இத்தகைய லக்ஷ்ய புருஷர்கள் சிலரேயிருப்பினும், அவர்களால் நாளடைவில் சூழ்நிலை மாறியே தீரும்; அதற்கேற்ப மக்கள் வாழ்வும் மலர்ச்சி பெறுவது திண்ணம். ஆனால், இது சிறுகச் சிறுக நடக்கக்கூடிய ஒரு காரியமே. ராம ராஜ்யத்தில் விருப்புகொண்டு, அந்த இலக்குக்கு வழியமைக்க முற்பட்டிருக்கும் சர்வ சேவா சங்கத்தினர், இம்மகோன்னத லக்ஷ்யத்தை மக்கள் மனதில் அடிக்கடி நினைவுறுத்திவரும் பணியை மேற்கொண்டுள்ளதற்கு நாம் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவர்களாவோம். சுபிட்ச சர்வோதயம் மலர இறைவன் அருள்வானாக!

# காற்றுவாக்கிலே.

## திருவிளையாடற் புராணம்!

அரசாங்கத்தில் உயர் அதிகாரப் பெரும் பதவிகளுக்கு அவசர ஆட் திரட்டல். ஆயிரமாயிரம் கோடிச் செலவில் வகுத்திருக்கும் அபிவிருத்தித் திட்டங்களை அமுலாக்க அவசியமாயிருக்கும் காரியம். பாமரர் நிலை உயரவே திட்டங்கள். சமதர்ம சமுதாய அமைப்பே அரசாங்கத்தின் லட்சியம். ஆனால் இந்த வேலைகளுக்கு ஆள் சேர்ப்பதில் மட்டும் கடுமையான நிபந்தனைகள். மனுச் செய்பவர் இப்போதே நல்ல சம்பளம் வாங்குபவராய், பெரிய வருமானமுள்ளவராயிருக்க வேண்டுமாம். "தாராளமாக"ப் பணத்தைச் செலவிடத் தெரிந்தவரே "அபிவிருத்தி வேலை"களில் ஈடுபட லாயக்கு என்பது அரசினரின் அபிப்பிராயமாயிருக்கலாம். ஆட்சேப, சமாதானங்கள் அன்றாடம் பறந்த போதிலும் பல்லாயிரக்கணக்கில் மனுக்கள் வந்து குவிந்துவிட்டதாகக் கூற்று. ஏன் வராது? எப்பேர்ப்பட்ட பதவிகள்? அதிகாரம், அந்தஸ்தை விட்டுத்தள்ளுங்கள். குபேரபுரி சம்பத்தல்லவா கையில் கொஞ்சும்? யாருக்குத்தான் ஆசையிருக்காது?

பொதுப் பணத்தை அரசாங்க அதிகாரிகள் நிர்வகிக்கும் லட்சணம் தணிக்கை அறிக்கையில் அம்பலமாகியது. . . பண விரயம், ஒழுங்கீனம், ஊதாரித்தனம், முட்டாள்தனம், முறை பிசகல், முழுமோசம் அத்தனையும் வெட்டவெளிச்சம். பொதுப் பணத்தில் "வாண வேடிக்கை"!

அரசாங்கப் பணத்தைக் கொண்டு தனிப்பட்ட முறையில் விருந்துகள், கேளிக்கைகள். அறுநூறு ரூபாய் செலவே அனுமதிக்கப்பட்டிருந்தும் வெளிநாட்டுப் பெண்டிருக்குக் கோலாகல விருந்தளிப்பதில் இரண்டாயிரம் ரூபாய் ஏப்பம். அன்னிய மாணவர் குழுவுக்கு ஒன்றுக்கு நான்கு முறை உபசாரம். துப்புக் கெட்டவனுக்கு இரட்டைப் பங்கு! அரசாங்க உபசரிப்புகள் நடத்த விசேஷ அலங்கார மாளிகையிருந்தும் சொந்த வீடுகளிலேயே அதிகாரிகள் அறுசுவையுண்டி ஏற்பாடுகள்; அதில் ஆளுக்கு ஐம்பது ரூபாய் வரை செலவு! யார் சொன்னது இந்தியா ஏழை நாடென்று?

அயல் நாடுகளில் நம் தூதராலயங்களிலோ செலவில் "சின்ன புத்தி"யே கிடையாது. அடுத்த வீட்டு நெய்யே, என் பெண்டாட்டி கையே—பழமொழி பொய்யாகக்கூடாதல்லவா? பத்தாயிரம் ரூபாய் வாடகையில் ஆறு ஆண்டுகளுக்கு முன் எடுத்துக்கொண்ட கட்டிடத்தில் இன்னமும் குடிபுகவில்லை. காலி வீட்டுக்கு வாடகை கொடுப்பதிலேயே லட்ச ரூபாய் நஷ்டம். கோர்ட் ஏலத்தின் மூலம் ஐந்தரை லட்சம் ரூபாய்க்கு வாங்கிய மனைக்கு லட்ச ரூபாய்க்கு மேல் தரகுக் கூலி. எந்த விதத்திலும் யாருக்கும் தரகுப் பணம் கொடுக்கக்கூடாது என்று அரசாங்கம் எச்சரித்திருந்தும் இந்தப் பரிவு. கடன் வாங்கியும் பட்டினி என்ற கதையாக மனை வாங்கியும் அதை உபயோகிக்க முடியாமல் பாழாகி வருவது வேறு விவகாரம்.

அதிகாரியின் மனைவிக்கு சொகுசான மோட்டார், அரசாங்கச் செலவில்! சர்க்கார் பணத்தில் நான்கு வருஷங்களில் மூன்று புதுக் கார்கள் வாங்கல். ஒவ்வொரு முறையும் அரசாங்க அங்கீகாரமின்றியே அவை விற்பனை. ஒரு நாள் கூட உபயோகிக்காமல் ஒரு காரின் பட்டா உறவினருக்கு மாற்றம். வேற்றிடத்துக்கு மாற்றப்பட்டவர் சொந்த முறையில் நடத்திய பிரிவுபசாரச் செலவு சர்க்கார் கணக்கிலேற்றம். ஓட்டைப் படகை வாங்க ஒன்றரை லட்சம் ரூபாய் விரயம். வாங்கும் போதே கெட்டுப்போய்க் கிடந்த படகு. காசைக் கொடுத்து தேளைக் கொட்டிக் கொண்ட சமாசாரம். 'ரிப்பேர்' செய்ய அரை லட்சத்துக்கு மேல் செலவிட்டும் பயனில்லை. கடைசியில் போய்ச்சேர்ந்தது ஓட்டை, உடைசல் விற்பனை ஸ்தாபனத்துக்கே. ஸ்தானீகராலயத்தில் தமது மட்ட ரக வெள்ளிப்பாத்திரங்களைப் போட்டுவிட்டு அங்கிருந்த புதிய, முதல் தரமான சாமான்களைக் கிளப்பிக் கொண்டு கம்பி நீட்டினர் 'சம திருஷ்டி' படைத்த ஒரு மகானுபாவர்!

மலிவான அரிசி கொடுக்க முன்வந்த பேரத்தைக் கண்ணிருந்தும் குருடர்களாய் அதிகார வர்க்கம் கவனியாததால் மூன்று லட்ச ரூபாய் அனாவசியச் செலவு. ஆனால் அதிக விலைக்கு அரிசி பேரம் பண்ணிய பம்பாய்க் கம்பெனியிடமோ அபரிமிதமான அன்பு. பேரத்தையும் ஏற்றுக்கொண்டு வழக்கத்துக்கு விரோதமான சலுகைகளும் கொடுத்தனர். பணம் போனதுடன் மதிப்பும் தொலைந்தது.

ஏழையழுத கண்ணீர் வரிப்பணம், பொதுப்பணம். பொறுப்பற்ற செய்கைகளால் அதில் விரயம். சிறிதும் சிந்தனையின்றி வாரிவிட்டுச் செலவு. முன் யோசனையற்ற காரியங்கள். தலைக்குத் தலை நாட்டாண்மை. அளவுக்கு மீறி நஷ்டம், அசட்டுப்பட்டமும்கூட.

உண்மையைச் சொன்னால் கோபம். நாற்றமடிக்கிறது சர்க்கார் அரிசி வியாபாரம். சென்னைவாசிகள் வருந்தி அறிந்த விஷயம். குழைந்து பசையாகும் அரிசியைச் சோறாக்க என்னதான் யுக்தி சொல்லிக்கொடுத்தாலும், அதைவிட நல்ல சாக்கைக் காணவே முடியாதென மூவாயிரம் ரூபாய் சம்பளக்காரர் காடியாகக் கதறினாலும், அது வாயருகில் போனாலும் குடலைக் குமட்டுகிறது, தவறி உள்ளே சென்றுவிட்டாலோ வயிற்று வலி நிச்சயம் என்றெல்லாம் பெயரும், புகழும் பிறந்துவிட்டால் அந்த "அல்வா" அரிசியிடம் அபிமானமேற்படுவதெப்படி? நெருப்பில்லாமல் புகையாது. மாசுமருவற்ற பண்டமென்றால் கிராக்கி குறைவானேன்? "உதவ"த் திட்டமிட்ட இடங்களிலெல்லாம் "உடும்பு வேண்டாம், கையைவிட்டால் போதும்"

### அட்டைப் படம்.

★

அதோ, அந்தக் கூண்டுக் கிளி 'கீச்சு, கீச்'சென்று கத்திச் சிறகடித்து அலறித் துடிக்கிறதே. . . ஏன்? ஓஹோ, ஜன்னல் படுதாவிலுள்ள அந்தப் பூனையைக் கண்டுதான் 'விழுங்கி ஏப்பம் விட்டுவிடுமோ?' என்று பயந்து துடிக்கிறதோ! இதோ, இன்னொரு 'கிளி' அருகில் இருக்கிறாளே. . . ! இவளையும் ஏதாவது 'பூனை' கவ்விக் கொண்டு போகுமோ. . . ? ஊஹூம், 'குடும்ப'த்தில் நுழைந்து அடிபடுவதற்கு முன்னரே குடும்பக் கலையில் படு தேர்ச்சி பெற்றவளாகத் தோன்றும் இந்தக் கன்னி அந்தக் 'கை பிடிக்கப் போகிறவனை' தன் 'கைக்குள்' அல்லவா அடக்கி வைத்துக்கொள்வாள்...! என்ன இருந்தாலும் படுதாப் பூனை வெறும் மாயை தானே!

இந்த அதியற்புத ஓவியம் 'ஸாகர்' கைவண்ணம் பட்டுப் பொலிகிறது.



★

அமெரிக்க இன்டர்நேஷனல் அண்டர்ரயிட்டர்ஸ் லிமிடெட் கம்பெனியின் சென்னைக் கிளை மானேஜர் ஸ்ரீ எம். சதாசிவ ராவின் புத்திரி குமாரி ஷாலினிக்கும், ஏர்-இந்தியா இன்டர்நேஷனல் பிளீட் இஞ்சினீர் ஸ்ரீ சுரேந்திர பாஸ்லூருக்கும் பார்பாய், ஸான்டா ரொஸில் விவாகம் நடந்தேறியது.

## பிரமுகர் வரிசை:

# நார்டம் ஸிஹானூக்

'விவேகம் மிகுந்த இளைஞர்' என்ற பாராட்டைப் பண்டித நேருவிடமிருந்து பெற்ற கம்போடிய மன்னர், உல்லாஸப் பிரிய ஆசிய மன்னர்களிலிருந்து முற்றிலும் மாறுபட்டவர். இவருக்குக் கடமையுணர்ச்சியும், நியாய புத்தியும் மட்டுமன்றி அரசியலிலும் ஆர்வம் மிகுந்து இருக்கிறது. இந்தியாவின் 'பஞ்சசீல'க் கொள்கையில் அசையா நம்பிக்கையும் விழுந்துவிட்டது. ஆனால், இவையே இவரைப் பதவியிலிருந்து விரட்டின என்றால் ஆச்சரியமல்லவா!

மூன்று கூறான பிரெஞ்சு இந்தோசீனாவில், கம்போடிய ராஜ்யம் நிலைத்து நிற்க அதிக வசதிகள் படைத்தது. இயற்கை வளம் கொழிக்கிறது; கம்யூனிஸ்ட்டுகள் மிகச் சொற்பம்; பௌத்தப் பிரஜைகளனைவரும் ராஜ விசுவாசிகள்.

33 வயதாகும் இவரது பதினான்கு வருட ஆட்சியில் பிரெஞ்சுப் பிடிப்பிலிருந்து விடுபட இடையறாது முயற்சித்தார். மூன்றாண்டுகள் முன்பு நாட்டை விட்டும் வெளியேறினார். அந்நியர் மூட்டை கட்ட முடிவு செய்தவுடன் நாடு திரும்பி, படை திரட்டி, கம்யூனிஸ்ட் தாக்குதலைச் சமாளித்தார்.

ஜினிவா ஒப்பந்தப்படி 1955-ல் பொதுத் தேர்தல் நடத்தியாக வேண்டும். அதற்கு முன்பே மன்னர் உத்தரவுப்படி வாக்கெடுப்பு நடைபெற்றது. 'முழுச் சுதந்திரம் அளிக்கும் வாக்குறுதியை நிறைவேற்றிவிட்டேனா?' என்பது மன்னரின் கேள்வி. எட்டு லட்சம் மக்கள் 'ஆம்' என்றனர். மறுத்தவர் எண்ணிக்கை 1276 தான்!

சர்வதேச சதுரங்கத்தில் கம்போடியா ஒரு பாச்சைக்காயாவதை மன்னர் விரும்பவில்லை. அமெரிக்க ராணுவ உதவியை ஏற்கவில்லை. இதையடுத்து அண்டையிலுள்ள நாடுகளின் பொருளாதார முற்றுகை துவங்கியது. எல்லைச் சண்டைகள் மூண்டன. தன் பொருட்டு நாட்டை நிர்ப்பந்தத்துக்கு ஆளாக்காதிருக்க மீண்டும் மன்னர் தேசாந்திரம் கிளம்பிவிட்டார்!

குதிரைகளை வளர்ப்பதில் இவருக்கு ரொம்பப் பிரியம். ஆர்கெஸ்ட்ராவைத் தாமே தலைமை தாங்கி நடத்துவார். திரைப்பட வசனமெழுதி, பாத்திரமேந்தி நடித்தும் இருக்கிறார்



OOMMEN

# இலங்கை லிகிதம்

பகவான் புத்தர் பரிநிர்வாண மடைந்த 2500-வது வருட விழாக் கொண்டாட்டம் இலங்கையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. இதற்காக ஜப்பான், பர்மா முதலான பௌத்த நாடுகளிலிருந்து பல பிரபல பௌத்தர்கள் விஜயம் செய்திருந்தார்கள். இலங்கையின் ஒவ்வொரு அரசாங்கக் கட்டிடமும், பௌத்தர்களின் இல்லங்கள், தொழில் ஸ்தாபனங்கள் ஆகியவைகளும் பல வர்ண மின்சார தீபங்களினால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. சில இடங்களில் தெரு முழுவதும் பூப்பந்தல் போட்டதுபோல மின்சார விளக்குகள் காட்சியளித்தன. பகவான் புத்தரின் வாழ்க்கையைச் சித்தரிக்கும் வர்ண ஓவியங்கள் தெருவுக்குத் தெரு வைக்கப்பட்டிருந்தன. இரவு நேரங்களில் இலங்கை ஒரு கந்தர்வ லோகத்தைப்போலிருந்ததென்று கூறினால் சிறிதும் மிகையாகாது.

இலங்கை சுதந்திரமடைந்ததன் ஞாபகார்த்தமாக அமைக்கப்பட்டுள்ள சுதந்திர மண்டபத்தில் பிரதம மந்திரி ஸ்ரீ பண்டாரநாயகா பௌத்த தர்மத்தைப் பற்றி ஒரு பிரம்மாண்டமான பொதுக் கூட்டத்தில் பேசினார். ஒருபுறம் பௌத்த தர்மத்தைப்பற்றிப் பேசிக்கொண்டு மற்றொரு புறம் சிறுபான்மையோர்களை நசுக்கும் அதர்மத்தைச் சிங்களவர் அனுஷ்டிப்பதால், அதைக் கண்டிப்பதற்காகச் சில தமிழ்ப் பிரதேசங்கள் புத்த ஜயந்தியைத் துக்க தினமாக அனுஷ்டித்தன.

* * *

அகில இலங்கை முஸ்லிம் லீக் இவ்வாரம் ஒரு அதி முக்கியமான தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது. லீக் தலைவர்கள் கொத்தலாவலை மந்திரி சபையில் பதவி வகித்தபொழுது சிங்களத்தை மட்டும் ராஜாங்க பாஷையாக்கும் யோசனையை ஆதரித்தார்கள். அதே சமயம் தமிழுக்கும் ஆங்கிலத்துக்கும் உத்தியோக அங்கீகாரம் இருக்க வேண்டுமென்றும் சிறுபான்மையோர்களின் அடிப்படை உரிமைகள் அரசியலமைப்புச் சட்டத்தில் சேர்க்கப்பட வேண்டுமென்றும் இரண்டு நிபந்தனை போட்டார்கள். ஸ்ரீ பண்டாரநாயகா மந்திரி சபை இயற்றியுள்ள "சிங்களம் மாத்திரம்" மசோதாவில் இவ்விரண்டு நிபந்தனைகளும் நிறைவேற்றப்படாதபடியினால் அதை நிராகரிப்பதாக முஸ்லிம் லீக் தீர்மானித்திருக்கிறது. சிங்களம் ராஜாங்க பாஷையாக்கப்படுவதைத் தமிழர்கள் மட்டும்தான் எதிர்க்கிறார்களே தவிர முஸ்லிம்கள் எதிர்க்கவில்லையென்று அரசாங்கம் இதுவரையில் பசப்பி வந்ததை முஸ்லிம்கள் முழுப் பொய்யாக்கிவிட்டனர். அத்துடன் தமிழின் பாதுகாப்புக்காக இதர தமிழ் பேசும் மக்களுடன் சேர்ந்து போராட்டத்தில் குதிக்கவும் அவர்கள் தயாராகி விட்டார்கள்.

* * *

பாஷை பிரச்னை பற்றி விவாதிக்க ஸ்ரீ பண்டாரநாயகா இவ்வாரம் கூட்டிய ஒரு மகாநாட்டில் செனட்டர் நடேசன் கலந்துகொண்டு தமிழ் மக்களுக்கு சிங்கள சமூகம் எவ்வளவு பெரிய அக்கிரமத்தைச் செய்யத் திட்டமிடுகிறதென்பதை இடித்துக்காட்டினார். இந்த மகாநாட்டுக்கு வருமாறு பிரதம மந்திரி அனுப்பிய அழைப்பை பிரபல தமிழ்த் தலைவர்கள் நிராகரித்து விட்டனர். சிங்களத்தை மட்டுமே ராஜாங்க பாஷையாக்குவதென்ற தீர்மானத்தை அரசாங்கம் மாற்றிக்கொள்ளத் தயாராயில்லாத வரையில் அவர்கள் கூட்டும் மகாநாட்டுக்குப்போய் என்ன பயன் என்று அவர்கள் கேட்கிறார்கள்.

'சிங்களம் மாத்திரம்' மசோதாவை இன்னும் தீவிரமாக்காவிடில், மொத்தத்தில் இலங்கைத் தீவு சென்னை ராஜ்யத்தின் ஒரு பகுதியாகிவிடுமென்றும் சொல்லிக்கொண்டு ஒரு சிங்களப் பேராசிரியர் உண்ணாவிரதத்தை மேற்கொண்டிருக்கிறார். சிறுபான்மையோர்களை நசுக்கி இருக்குமிடம் தெரியாமல் செய்துவிட வேண்டுமென்ற வகுப்பு வாத வெறி சிங்களவர்களிடம் எவ்வளவு தூரம் வேரூன்றியிருக்கிறதென்பதைக் காட்ட இந்த உண்ணாவிரதம் உதவ வேண்டும்.

* * *

ஜினீவாவில் நடைபெறும் சர்வதேசத் தொழில் ஸ்தாபன மகாநாட்டுக்கு இலங்கை தொழிலாளர்களின் பிரதிநிதியாகச் செல்ல ஸ்ரீ டி. ராமானுஜத்தை இலங்கை அரசாங்கம் நியமித்திருக்கிறது. முன்னாள் இந்தியரும், இப்பொழுது இலங்கைப் பிரஜையுமான ஸ்ரீ ராமானுஜம், சென்ற பல வருடங்களாக கண்டி முனிசிபல் சபை மெம்பராயிருந்து வருபவர். ஸ்ரீ தொண்டமான் தலைமையிலிருக்கும் இலங்கை தொழிலாளர் காங்கிரஸைச் சேர்ந்தவர். இலங்கைத் தொழிலாளர்களின் பிரதிநிதியாக தங்களில் ஒருவரையே நியமிக்க வேண்டுமென ஜனப் அஸீஸ் தலைமையிலுள்ள காங்கிரஸ் கோரியிருந்தது. அதை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவில்லை. ஜினீவாவில் நடக்கும் தொழில் ஸ்தாபன நிர்வாக சபைக் கூட்டத்தில் கலந்துகொள்ள ஸ்ரீ தொண்டமான் இவ்வாரம் ஜினீவாவிற்குப் புறப்பட்டுப் போயிருக்கிறார். தொழிலாளர் பிரதிநிதியாகச் செல்லும் ஸ்ரீ ராமானுஜம், மாதர் காங்கிரஸ் தலைவி ஸ்ரீமதி (டாக்டர்) சரோஜினி ராமானுஜத்தின் கணவராவார்.

* * *

இலங்கை ஜனநாயக காங்கிரஸின் தலைவரான ஸ்ரீ கே. ராஜலிங்கம் கடுமையான சுகவீனத்துடன் சென்ற வாரம் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டார். முதல் இரண்டு தினங்கள் வரையில் அவருடைய நிலைமை கவலைக்கிடமாயிருந்தது. இப்பொழுது ரத்தக் கொதிப்பு தணிந்து, தேக நிலைமை அபிவிருத்தியடைந்து வருகிறது. ஆயினும் இன்னும் இரண்டு வார காலம் அவர் ஆஸ்பத்திரியிலிருக்க வேண்டியிருக்குமென்று வைத்தியர்கள் கூறுகிறார்கள்.

* * *

லண்டனில் காமன்வெல்த் பிரதம மந்திரிகளின் மகாநாடு கூடும் சமயத்தில் ஸ்ரீ ஸி. சுந்தரலிங்கம் லண்டனுக்குச் சென்று, பிரிட்டிஷ் மகாராணியிடம் ஒரு மகஜரைச் சமர்ப்பிக்க திட்டமிட்டிருக்கிறார். சிங்களம் இலங்கையின் ஒரே ராஜாங்க பாஷையாக்கப்படுவதைத் தடுக்க வேண்டுமென, இலங்கையின் ராணியென்ற முறையில் பிரிட்டிஷ் ராணியை ஸ்ரீ சுந்தரலிங்கம் கேட்டுக் கொள்ளுவார். இலங்கையின் உள்நாட்டு விவகாரங்களில் மந்திரி சபையின் விருப்பத்துக்கு மாறாக நடக்கும் அதிகாரம் ராணிக்குக் கிடையாதென்பது உலகறிந்த விஷயமாயிருந்தாலும், இலங்கையில் நடக்கும் அதர்ம ஆட்சியை உலகின் கவனத்துக்குக் கொண்டுவருவதுதான் ஸ்ரீ சுந்தரலிங்கத்தின் இலட்சியமென்று தெரிகிறது.



இலங்கையின் சரித்திரத்தில் வேறு என்றுமே இல்லாதபடி இருபதினாயிரத்துக்கு மேற்பட்ட தமிழ் மக்கள் கொழும்பு நகர மண்டபத்தில் கூடி தமிழ் மொழியைப் பாதுகாக்க உயிர்த்தியாகமும் செய்வதென்று சங்கற்பம் செய்துகொண்டார்கள்.

# ஆசை!

“இதயவாசி”



காலையிலிருந்து விடாது பெய்த மழை, பூமியைக் குளிரவைத்துவிட்டது. ஜில்லென்ற காற்று, உடலுக்கு ஒருவித சோர்வைக் கொடுத்தது. படுக்கையைவிட்டு எழுந்தது முதல் அவசர அவசரமாக வேலைகளைச் செய்தும், அன்று பள்ளிக்கூடத்திற்கு நேரமாகிவிட்டது. பரபரப்புடன் புடவையை மாற்றிக்கொண்டு கிளம்பினேன். ஹால் சுவரிலிருந்த கடிகாரத்தில் மணி ஒன்பதரை அடித்தது.

“லலிதா! பானு அதிர்ஷ்டசாலிதான்! ‘கலைமணி’ சிறு கதைப் போட்டிக்கு அனுப்பிய கதை முதற் பரிசு பெற்றுவிட்டது. இந்தப் பொங்கலுக்கு பானு கேட்ட வெல்வெட் பாவாடையும், சட்டையும் தைத்துவிடலாம். பொங்கலும் கன ஜோராகக் கொண்டாடலாம்.” —மகிழ்ச்சி பொங்க மூச்சுவிடாது கூறினார் அவர். பள்ளிக்கூடம் போகவேண்டும் என்பதை மறந்து ஒரு கணம் அப்படியே திகைத்து நின்றுவிட்டேன்.

என்னுடைய திகைப்பைப் பார்த்த அவர் முகத்தில் புன்முறுவல் பூத்தது. “என்ன லலிதா, அப்படியே நின்றுவிட்டாய்? கதைக்கு எத்தனை பொருத்தமாக படம் போட்டிருக்கிறது, பாரு.” ‘கலைமணி’யைப் பிரித்து என்னிடம் நீட்டினார். ஆவலும் ஆனந்தமும் பொங்க அதை வாங்கிப் பார்த்தேன். பெரிதாக இருந்த, ஜீவன் நிரம்பிய சித்திரத்தின் நடுவில் ‘எழுதியவர் கண்ணன்’ என்றிருந்த வார்த்தைகளை என் நாக்கு தானாகவே உச்சரித்தது. அந்த நான்கு எழுத்துக்களில் இருந்த இன்பம் என் நெஞ்சினுள்ளே சலசலத்தது. உள்ளத்தில் புரண்டுகொண்டிருந்த அன்பு வெள்ளம் உடைப்பெடுத்துக்கொண்டு பெருகியது. ஆர்வமுடன் அவரைப் பார்த்தேன். அவருடைய காந்தக் கண்களில் எல்லையற்ற மகிழ்ச்சி ததும்பிக்கொண்டிருந்தது.

“இந்தக் கதைக்குப் பரிசு கிடைக்கும் என்று எனக்குத் தெரியும்” என்றேன், பெருமிதத்துடன்.

அவர் சிரித்துக்கொண்டார். “நல்ல சமயத்தில்தான் பரிசு கிடைத்திருக்கிறது. பொங்கல் செலவுக்கு என்ன செய்வது என்று வேதனைப்பட்டுக்கொண்டிருந்தேன். சந்தோஷமும், பணமும் சேர்ந்து வந்துவிட்டது. ஜோராகப் பொங்கலை ஜமாய்த்துவிடலாம்” என்றார், சின்னஞ்சிறு குழந்தையைப்போல.

அவருடைய ஒளிவீசும் முகம் என் இதயத்தை அள்ளியது. மனம் நிறைந்த மகிழ்ச்சியினூடே அந்தத் துயர சம்பவமும் நெஞ்சினுள்ளே நிழலாடியது. அவருடைய பேச்சு மன ஆழத்தில் அழுந்திக் கிடந்த நினைவை மேலுக்கு இழுத்து வந்தது. என்னையுமறியாமல் உள்ளம் படபடத்தது. கண்களில் கண்ணீர் கசிந்து இமைகளை நனைத்தது. “பொங்கலுக்கு இன்னும் பத்து நாள் இருக்கிறது. அதற்குள் ஏன் இப்படிக் குழந்தையைப் போலக் குதிக்கிறீர்கள்? வேதனைகளை விட்டுவிட்டு, நிம்மதியாக இருங்கள்” என்று கூறிய நான், ஆயாசத்துடன் அங்கு கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தேன். பள்ளிக்கூடம் போக வேண்டுமென்பதே மறந்துவிட்டது.

“என்ன, லலிதா! சாவகாசமாக உட்கார்ந்திருக்கிறாய்?” என்று கேட்டுக்கொண்டே உள்ளே வந்தாள் சாவித்திரி.

“தலைவலி பொறுக்க முடியவில்லை, சாவித்திரி. அதனால் லீவு லெட்டர் கொடுத்துவிடுகிறேன், என்ன?” என்றேன் அவளிடம்.

அவளுடைய முகத்தில் கவலை படர்ந்தது. “திடீரென்று தலைவலி ஏன் வந்தது? லலிதா! உடம்பைக் கவனித்துக் கொள்ள வேண்டாமா? சரி. லீவு லெட்டர் இரண்டு வரி எழுதிக் கொடுத்து விடு. ஒய்வாகப் படுத்துத் தூங்கு. நான் சாயங்காலம் நேரே இங்கு வருகிறேன்” என்று கூறிய சாவித்திரி, என்னிடமிருந்து லீவு லெட்டரை வாங்கிக் கொண்டு உடனே போய்விட்டாள்.

“நிஜமாகவே தலையை வலிக்கிறதா? அல்லது லீவு எடுப்பதற்காக வெறும் நடிப்பா, லலிதா?” பாதி கிண்டலாகவும், பாதி உண்மையாகவும் கேட்டார் அவர்.

நான் முகத்தைச் சுளித்துக்கொண்டேன். "நடிப்பதற்கு இதுவரை தெரியாது. இனிமேல்தான் கற்றுக்கொள்ள வேண்டும்" என்றேன், பொய்க் கோபத்துடன். என் கணவரின் முகம் வாடிவிட்டது.

"உனக்கு ஓயாத உழைப்பாகிவிட்டது லலிதா! நான் இருப்பதும், இல்லாததும் ஒன்றுதான்! கொஞ்ச நேரம் நிம்மதியாகத் தூங்கு. சரியாகிவிடும்" என்றார் ஆதரவுடன்.

நான் பதில் பேசாது படுக்கையை விரித்துப் படுத்தேன். உண்மையில் எனக்குத் தலைவலியா? இல்லவே இல்லை. மனதில் ஆரவாரமிட்டுக் கொக்கரிக்கும் நினைவு அலைகள் கட்டுக்கு அடங்காமல் பொங்கத் துவங்கிவிட்டன. அதை அடக்க என்னால் முடியாது. அதற்குப் பணிந்துதான் போக வேண்டும்.

பொங்கல்! அந்த நன்னாளை எல்லாரும் எத்தனை ஆனந்தமுடன் எதிர்பார்த்து இன்பம் அனுபவிக்கிறார்கள். ஆனால், நானோ அதை உள்ளத்தில் நெருடும் வேதனையுடன்தான் அனுபவிக்க முடிகிறது. அந்தப் பண்டிகை நாளில் என் மனம் கட்டுக்கு அடங்காமல், கொந்தளிப்பதை என் வாழ்நாட்களில் அகற்றவே முடியாது. பொங்கல் என்ற சொல்லே என்னுள்ளே பயங்கரமாக எதிரொலி செய்கிறது.

* * *

எங்கள் குடும்பத்தில் நான்தான் கடைசிப் பெண். நான் மங்கைப் பருவம் அடைந்தபொழுது, என்னுடைய பெற்றோர்கள் முதுமையின் எல்லையைத் தொட்டுவிட்டார்கள். வயதான காலத்திலே அவர்களுக்குப் பெரும் பாரமாக, கால்கட்டாக நான் வளர்ந்துகொண்டிருந்தேன். என் அண்ணா இரண்டு பேர்களும் டில்லியிலும், பம்பாயிலுமாக வேலையாக இருந்தனர். அவர்கள் மாதாமாதம் அனுப்பும் பணத்தில் எங்கள் மூவருடைய வாழ்க்கை ஓடிக்கொண்டிருந்தது. நானும் எஸ். எஸ். எல். ஸி முடித்துவிட்டு ட்ரெயினிங் ஸ்கூலில் சேர்ந்தேன். எவரும் என்னைத் தடுக்கவில்லை. "காலம் இருக்கும் நிலைமையில், மூவாயிரம், நாலாயிரம் செலவுபண்ணிக் கல்யாணம் செய்ய முடியாது. ஏதோ இரண்டு எழுத்து படித்துவிட்டு, அவள் வரை அவள் பார்த்துக்கொள்ளட்டும்" என்று கூறிவிட்டார் அப்பா.

தாய் மனம் மட்டும் துடித்தது. "உன்னைப் பொறுப்பாக ஒருவன் கையில் ஒப்படைத்துவிட்டால், நான் நிம்மதியாக இருப்பேன்" என்று அம்மா அடிக்கடி அங்கலாய்த்துக்கொள்வாள். என் மனம் எதிலுமே நிலைகொள்ளவில்லை. இளமையின் செழிப்பில் தறிகெட்டு ஓடும் மனதை ஒருவாறு படிப்பில் ஈடுபடுத்தினேன்.

திடீரென்று ஒரு நாள் சின்ன அண்ணா பம்பாயிலிருந்து வந்து சேர்ந்தான். தனியாக வரவில்லை. எனக்குத் தகுந்த வரனைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு, அவரையும் கூடவே அழைத்து வந்திருந்தான். அவரை முதலில் பார்த்தவுடனேயே எனக்கு மிகவும் பிடித்துவிட்டது. சென்னையில் ஒரு கம்பெனியில் வேலையாக இருந்தார். ஒரே வாரத்தில் அம்மா அப்பாவின் பூரண சம்மதத்துடன் எங்கள் விவாகம் நடந்துவிட்டது. என் வாழ்க்கையில் நான் எதிர்பாராமலே, விரும்பாமலே மறு ஏடு புரண்டுவிட்டது. மீதி இருந்த நான்கு மாத ட்ரெயினிங்கை முடித்துவிட்டு, அவருடன் சென்னைக்கு வந்துவிட்டேன்.

கைநிறைந்த சம்பளம்; மனம் நிறைந்த மகிழ்ச்சி; கண் நிறைந்த கணவர்—இவை எல்லாமாக எங்கள் இன்ப வாழ்வைப் பின்னிவிட்டன. நாட்கள் ஒவ்வொன்றாக விழுந்து ஒரு வருடத்தை உருவாக்கிவிட்டன.

ஒரு நாள் மாலை. அன்று ஆபீஸிலிருந்து வரும்பொழுது, மிகவும் மகிழ்ச்சியுடன் வந்தார் அவர். அவருடைய அபரிமிதமான ஆனந்தத்தின் காரணம் தெரியாது விழித்த என்னிடம், "இன்று ஒரு சந்தோஷ சமாசாரம். எங்களுடைய கம்பெனியில் இந்த வருடம் அதிக லாபம்! அதனால் எங்களுக்கெல்லாம் இரண்டு மாத போனஸ் கொடுக்கப்போகிறார்கள். பொங்கல் சேர முந்நூறு ரூபாய் வரும். ஜோராகப் பொங்கலைக் கொண்டாடலாம். உனக்கு என்ன வேண்டும் சொல்லு" என்றார்.

என் மனதிலும் மகிழ்ச்சி ஊற்றுபோலப் பெருகியது. "நான் எது கேட்டாலும் வாங்கித் தருவீர்களா?" என்று கேட்டேன்.

"உனக்கு இல்லாததா? நீ எது கேட்டாலும், வாங்கித் தருகிறேன்."

என் உள்ளத்தில் சிறு வயதிலேயே பிறந்து வளர வழியில்லாது மன ஆழத்தில் மறைந்து கிடந்த அந்தச் சிறு ஆசை, மெள்ளக் கொப்புளித்துக்கொண்டு மேலே மிதந்து வந்தது.

"என்ன லலிதா. யோசனை செய்கிறாய்? பெரிதாக ஏதாவது கேட்கப்போகிறாயா?" என்றார் அவர்.

"ஆமாம். பெரிதாகத்தான் கேட்கப்போகிறேன். எனக்குக் காசு மாலை வேண்டும். வாங்கித் தருகிறீர்களா?" என்றேன், நிதானமாக. அவர் முகத்தில் சிந்தனை தேக்கமிட்டது. "காசு மாலை வாங்க இந்தப் பணம் போதுமா?" என்றார், சந்தேகம் பொங்கும் குரலில். அவருடைய அறியாமையைக் கண்ட எனக்குச் சிரிப்புதான் வந்தது.

"இப்பொழுது மூன்று பவுனுக்குக்கூட காசு மாலை இருக்கிறதே!" என்றேன்.

அவர் அழகிய முகம் மறுபடியும் மலர்ந்துவிட்டது. "மூன்று பவுன் தாராளமாக வாங்க முடியும். கட்டாயம் வாங்கிவிடலாம்" என்றார் அவர்.

அப்பொழுதே எனக்குக் காசு மாலை கிடைத்துவிட்டாற்போல இருந்தது.

பொங்கல் நெருங்கிக்கொண்டிருந்தது. ஒவ்வொரு நாள் மாலையும் அவர் வரவை அதிக ஆவலுடன் எதிர்பார்த்தேன். தினமும் வெறுங்கையுடன் அவர் திரும்பி வரும்பொழுது, எனக்கு மிகவும் ஏமாற்றமாக இருக்கும். பொங்கலன்று எப்படியாவது காசு மாலை போட்டுக்

## தமாஷ் தம்பதி



'வினோபா வந்திருக்கிறாரே, நீங்கள் என்ன தானம் கொடுக்கப் போகிறீர்கள்?'

'என்கிட்ட என்ன இருக்கு? நிலம் இருக்கா, பணம் இருக்கா?......... அறிவு தானம் தான் செய்யலாம் என்று உத்தேசிக்கிறேன்.'

"சரிதான்! ஏதோ கொஞ்சநஞ்சம் இருக்கிறதையும் தானம் செய்துவிடப் போகிறீர்கள்!"

கொண்டுவிட வேண்டும் என்ற அவா என்னுள்ளே பெருகிக்கொண்டிருந்தது.

"உங்கள் போனஸ் பணம் எப்பொழுது வரும்?" என்று அவரிடம் அடிக்கடிக் கேட்டேன்.

"நிச்சயமாகப் பொங்கலுக்குள் வந்துவிடும், லலிதா!" என்று கூறுவார் அவர்.

வெகு நம்பிக்கையுடன் பொங்கல் புது நாளை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தேன். மனம் ஆசை மயக்கத்தில் புரண்டுகொண்டிருந்தது.

பொங்கலுக்கு இன்னும் இரண்டு நாட்கள்தான் இருந்தன. நாம் நினைத்தபடி பொங்கலுக்குக் காசு மாலை வாங்க முடியாது போலிருக்கிறது என்று வாய் விட்டுச் சொல்லிக்கொண்டேன். அதைக் கேட்டுக்கொண்டே வந்த என் கணவர், "இன்று கட்டாயம் பணம் வந்துவிடும், லலிதா. சாயங்காலமோ அல்லது நாளைக்கோ வாங்கிவிடலாம். கவலைப் படாதே!" என்றார். என் இதயத்தில் எழுந்த களிப்பு எல்லை மீறியது.

மாலை நான்கு மணியிலிருந்தே அவரை எதிர்பார்க்கத் துவங்கிவிட்டேன். தெருவைப் பார்த்துப் பார்த்து, என் கண்கள் பூத்துவிட்டன. கடைசியில் ஆறரை மணிக்கு அவர் வந்து சேர்ந்தார்.

அவருக்கு டிபனைக் கொணர்ந்து வைத்த நான், ஆவலுடன் அவர் முகத்தைப் பார்த்தேன். இன்று பணம் வரா விட்டால், பொங்கலன்று காசு மாலை போட்டுக்கொள்ள முடியாது என்ற நினைவு என் நெஞ்சினுள்ளே குறு குறுத்து ஓடியது.

என்னை ஆராய்ந்த அவர் முகத்தில் புன்னகை பூத்தது. மகிழ்ச்சி ரேகை அவரது கண்ணாடிக் கண்களில் பளபளத்தது. "பணம் வந்துவிட்டது" என்று கூறிய அவர், ஒரு கத்தை நோட்டுக்களை எடுத்து என் கையில் கொடுத்தார்.

அதைக் கையில் வாங்கிக்கொண்ட நான், "அப்படியே கடைக்குப் போய் காசு மாலையை வாங்கி வந்துவிடக் கூடாதா?" என்றேன்.

"என்ன அவசரம்? பணம்தான் நம் வீட்டுப் பெட்டியில் ஒரு நாள் இருக்கட்டுமே! நாளைக்கு உன்னையும் அழைத்துக் கொண்டு போய் வாங்கி வந்துவிட்டால் போகிறது" என்றார் அவர்.

என் மனம் அவர் சொன்னதை ஒப்புக் கொள்ளவில்லை. ஆசையின் ஆதிக்கத்தில் கட்டுண்டிருந்த நான் என்னை மறந்துவிட்டேன். "வெள்ளிக்கிழமையை விட்டு, சனிக்கிழமை போய் வாங்குவார்களா? இப்பொழுதே போய் வாங்கி வந்துவிடலாம். வாருங்கள்" என்றேன், பிடிவாதமாக.

"எனக்கு ரொம்ப அலுப்பாக இருக்கிறது, லலிதா! சனிக்கிழமை வாங்கினால் பரவாயில்லை. போட்டுக்கொள்ளப் போவது ஞாயிற்றுக்கிழமைதானே!" என்றார் அவர் மறுபடியும்.

எண்ணி நினைத்த காரியத்தை உடனே முடித்துவிட வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அதனால் நானும் பிடிவாதமாக, "சூடான காபியைச் சாப்பிட்டால் சுறுசுறுப்பாக இருக்கும். நாளைக்கு எனக்கு வீட்டில் வேலை நிறைய இருக்கும். ஆகையால், இப்பொழுதே போய் விடலாம், வாருங்கள்" என்றேன்.

சிறிது நேரம் மௌனமாக சிந்தனை செய்த அவர், "உன் ஆசையைத்தான் கெடுப்பானேன். வா. போகலாம்" என்றார். நான் முன்னாலேயே தயாராக இருந்தேன். இருவருமாக நகைக் கடைக்குப் புறப்பட்டோம்.

நகைக் கடையில் உட்கார்ந்து எனக்குப் பிடித்தமான வகையில் காசு மாலையைப் பொறுக்கி எடுத்துக்கொண்டேன். பில் போட்டுப் பணத்தைக் கொடுத்துவிட்டுக் கடையிலிருந்து வெளியே வரும்பொழுது, மணி எட்டரைக்கு மேலாகிவிட்டது. எனக்குப் பெருமை பிடிபடவில்லை, முதன் முதலில் அன்புக் கணவரின் ஆசைப் பரிசை அடைந்த இன்பம் உள்ளத்தில் கிளுகிளுத்தது.

கணவருடன் சேர்ந்து கொண்டாடப் போகும் முதல் பொங்கல்தான் எத்தனை இன்பமாக இருக்கப்போகிறது! என்ற நினைவில், மனம் இன்பக் கோட்டைகளை வானளாவக் கட்டியது. அதன் போதையில் என்னை மறந்து நடந்துகொண்டிருந்தேன். 'கிரீச்' என்ற சப்தமும், 'ஐயோ!' வென்ற அலறலும் என் செவியில் கூர் சென்று பாய்ந்தன. சுய நினைவு அடைந்தவளாக, பரபரப்புடன் பார்வையை நான்கு பக்கமும் செலுத்தினேன். என் அருகில் இருந்த கணவரைக் காணோம். உள்ளம் உலர்ந்துவிட்டது.

படபடக்கும் இதயத்துடன் சிறு கூட்டம் கூடியிருந்த அந்த இடத்திற்கு இயந்திரம்போல ஓடினேன். நான் எதிர் பாராதது நடந்துவிட்டது. பெரிதாக நின்றுகொண்டிருந்த காருக்கு அருகில் என் அன்பான கணவர் ரத்த வெள்ளத்தில் மிதந்துகொண்டிருந்தார். விபத்து ஏற்பட்ட பிரமையில் சிலையாக நின்று விட்டேன். மனதில் பொங்கிக்கொண்டிருந்த மகிழ்ச்சி மாயமாக மறைந்து, பீதியும், பயமும் முற்றுகையிட்டன. அவர் அருகில், நடுத்தெரு என்பதைக் கூட மறந்து உட்கார்ந்துவிட்டேன்.

"லலிதா" என்று முனகிய அவர், ஏதோ கூற வாயெடுத்தார். ஆனால், அதற்குள் அவருக்கு மயக்கம் வந்துவிட்டது. வலது கையிலிருந்த காயத்திலிருந்து பெருகிய ரத்தம் சிறு குளமாகத் தேங்கி விட்டது. எனக்கு என்ன செய்யவேண்டும் என்று தெரியவில்லை. துக்கம் தொண்டையை அடைக்க, கண்களில் கண்ணீர் மல்கத் திணறினேன். கூடி நின்றவர்கள் ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகப் பேசிக்கொண்டனர்.

"பேசாமல் நின்றுகொண்டிருந்தால் எப்படி? நீங்களும் நானுமாகத் தூக்கிக் காரில் போட்டுக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போவோம், வாருங்கள்" என்று கூறிய ஒருத்தி, என் உதவிக்கு வந்தாள். அவளுக்கு ஏறக்குறைய என் வயதுதானிருக்கும்.

"காரிலா?" என்றேன், தயக்கத்துடன்.

"ஆமாம். சீக்கிரம் வாருங்கள். நேரங் கடத்துவது மிகவும் ஆபத்து" என்றாள் அவள். நிலைமையை உணர்ந்த நானும், அவளும் சிரமப்பட்டு மெள்ள அவரைத் தூக்கிக் காரில் எடுத்துவிட்டோம். அவளே முன் சீட்டில் உட்கார்ந்து வண்டியை ஓட்டத் துவங்கினாள். அப்பொழுதுதான் அவள் உதவிசெய்ய வந்த காரணம் புரிந்தது. அவளால்தான் என் புருஷருக்கு விபத்து ஏற்பட்டது என்பதை உணர்ந்தபொழுது, என் நெஞ்சில் வெறுப்பு அலைமோதியது. என் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகிக் கொண்டிருந்தது.

கார் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குள் நுழைந்தது. நான் காருக்குள்ளேயே உட்கார்ந்திருந்தேன். அவள் இறங்கிப்போய் ஏதோ விசாரித்துக்கொண்டு வந்தாள். சிறிது நேரத்தில் துவண்டு கிடந்த அவரை உள்ளே கொண்டு போய்விட்டார்கள். உடனே காயங்களுக்கு மருந்து போட்டுக் கட்டினார்கள்.

அன்று இரவு பூராவும் நானும் சாவித்திரியும் (அதுதான் அவளுடைய பெயர்) அவர் அருகிலேயே இருந்தோம். தன் நினைவு இல்லாது கட்டையைப்போல கிடக்கும் அவரைப் பார்த்துப் பார்த்து பொருமினேன்.

விதி அழைப்பதுபோல, 'இன்று வேண்டாம்' என்ற அவரை வலுக்கட்டாயமாக அழைத்து வந்தேனே! நானே அவருக்கு யமனாகிவிட்டேனா என்று மனம் புழுங்கியது, புழுப்போல துடித்துக்கொண்டு இரவை ஒருவிதமாகக் கழித்தேன்.

மறு நாள் பொழுது விடிந்தது. 'இன்று நல்ல பொழுதாகப் போகவேண்டும் கடவுளே' என்று என் மனம் பிரார்த்தித்துக் கொண்டது. டாக்டர் வந்து அவரைப் பரிசோதித்துப் பார்த்தார். என் உள்ளம் திக், திக்கென்று வேகமாக அடித்துக்கொண்டது. டாக்டர் என்ன சொல்லிவிடுவாரோ என்ற பயங்கலந்த வேதனை நெஞ்சினுள்ளே கவிழ்ந்தது. அவர் முகத்தையே கண்கொட்டாது பார்த்துக் கொண்டு இருந்தேன்.

என் மனதை உணர்ந்தவர்போல டாக்டர் பேசினார், "உயிருக்கு பயம் ஒன்றுமில்லையம்மா. ஆனால் வலது கை 'ஸெப்டிக்' ஆகிவிடும்போல இருக்கிறது. அதை எடுத்துவிட்டால் நல்லது". இடையில் நிறுத்திய அவர், என் முகத்தைக் கூர்ந்து பார்த்தார்.

இடிவிழுந்தாற்போல மனம் நொறுங்கியது. "கையை எடுத்துவிடப் போகிறீர்களா டாக்டர்?" என்று அலறிவிட்டேன். பக்கத்திலிருந்த சாவித்திரி நான் கூவிய சப்தம் வெளியே கேட்காதவாறு வாயைப் பொத்திவிட்டாள்.

"பதட்டப்படாதீர்கள். கையை எடுக்காவிட்டால் அவருடைய உயிருக்கே ஆபத்து. கையிருந்தும் இனி பிரயோசனப்படாது. யோசித்துச் சொல்லுங்கள். உங்கள் வீட்டில் வேறு யாராவது இருந்தால் அழைத்து வாருங்கள். நானே கையை எடுத்துவிட்டால் அவருடைய உயிரைப்பற்றிய கவலையில்லை" என்று நிதானமாக என் அருகில் வந்து கூறினார் டாக்டர்.

"செய்யுங்கள் டாக்டர். என் வீட்டில் வேறு யாரும் கிடையாது. அவரைக் காப்

பாற்றி விடுங்கள் டாக்டர்" என்றேன் பொங்கிவரும் விம்மலுக்கிடையில்.

"அழாதீர்கள்; நீங்கள்தான் அவருக்குத் தைரியமாகப் பேசி ஆறுதலளிக்க வேண்டும்" என்று கூறிவிட்டு அடுத்த கட்டிலுக்குப் போய்விட்டார் டாக்டர்.

என் மனதில் குமுறி எழுந்த துக்கத்தை அழுது தீர்த்தேன். எந்தப் பொங்கலன்று காசு மாலை போட்டுக் கொண்டு மகிழ்ச்சி வெள்ளத்தில் திளைக்க வேண்டும் என்று நினைத்து நினைத்து இன்பம் கண்டேனோ, அந்தப் பொங்கலன்று காலை என் கணவர் கையை இழக்கப் போகிறார்!

நான் நினைத்தபடி நடக்காவிட்டாலும் இந்தமாதிரி நடக்கவேண்டுமா? காசுமாலை என் நினைவில் உறுத்திற்று. சாவித்திரி எத்தனையோ ஆறுதல் வார்த்தைகளைக் கூறினாள். ஆனால் என் மனம் அதிலெல்லாம் அடங்கி அமைதியடைந்து விடுமா என்ன? அவர் கையை இழப்பதற்கு நான்தானே காரணம்? மனச்சாட்சி என்னைக் குத்திக்கொன்றது.

நாள் பூராவும் அவர் அருகிலேயே உட்கார்ந்து கண்ணீர் வடித்தேன். சுய நினைவேயில்லாது கிடந்தார், அவர். மகிழ்ச்சிக்காகவும் துன்பத்திற்காகவும் காலம் நிற்குமா என்ன? அது விழுந்தடித்துக்கொண்டுதான் ஓடியது.

அருணோதயம் ஆகியது. பொங்கல் நன்னாள்! உலகில் எல்லோரும் ஆனந்தமாகக் கொண்டாடும் அந்த நாளில் நான் மனப் பாரத்துடன், உணர்ச்சியற்றவளாக ஆஸ்பத்திரியில் உட்கார்ந்து இருந்தேன்.

மணி எட்டடித்துவிட்டது. சாவித்திரி காலையில் எழுந்ததுமே வந்துவிட்டாள். அவள்தான் எனக்கு உற்ற துணையாக இருந்தாள். அவரை 'ஆபரேஷன் தியேட்ட'ருக்குள் கொண்டு போகும் போது என் உயிர், உள்ளம், உடல் எல்லாமே துடித்தன. 'காசுமாலை போட்டுக் கொண்டு களிக்காவிட்டாலும், கழுத்தோடு இருக்கும் மாங்கல்யத்தைக் கழற்றுதிருக்க வேண்டும் தேவி!' என்று, உலகைப் படைத்த அன்னையிடம் முறையிட்டுக்கொண்டேன். நேரம் மெள்ள மெள்ள ஊர்ந்தது.

கடைசியில் பதினொரு மணி சுமாருக்கு அவரை வெளியே கொண்டு வந்தார்கள். வலது கையை இழந்து, கட்டையைப் போல் கிடக்கும் அவரைக் கண்டு குமுறினேன்.

என் அருகில் வந்து நின்ற டாக்டர், "இந்த சமயத்தில்தான் உங்கள் தைரியத்தைக் காண்பிக்க வேண்டும். இன்று சாயங்காலத்திற்குள் அவருக்கு நல்ல நினைவு வந்துவிடும். மன அதிர்ச்சி ஏற்பட்டு ஜுரம் வராமல் பார்த்துக்கொள்ள வேண்டியது உங்கள் கடமை" என்றார்.

"ஆகட்டும்" என்று தலையசைத்தேன். சாவித்திரி கொண்டுவந்து கொடுத்த சாப்பாடு எனக்கு விஷமாகக் கசந்தது. என்னை எதிர்பாராமலே பணத்தை தாராளமாகச் செலவு செய்தாள் அவள். உள்ளத்தில் ஆரம்பத்தில் அவள் மீது பொங்கிய வெறுப்பு கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிவிட்டது.

மாலை நான்கு மணிக்கு அவருக்கு நல்ல நினைவு வந்தது. கண்களைத் திறந்து சுற்றும் முற்றும் பார்த்தார். மனத்தை உறுதியாக்கிக்கொண்டு அவர் அருகில் குனிந்து "என்ன வேண்டும்?" என்று கேட்டேன்.

சிறிது நேரம் ஏதோ சிந்தனை செய்த அவர், "நான் ஆஸ்பத்திரியில்தானே இருக்கிறேன்" என்று கேட்டார் மெலிந்த குரலில்.

"ஆமாம்" என்றேன் சுருக்கமாக.

"இன்று என்ன கிழமை?" என்று அவர் கேட்டபொழுது என் இதயத்தில் சுரீ என்ற உணர்ச்சி ஏற்பட்டது.

"ஞாயிற்றுக்கிழமை" என்று முணகினேன்.

அவர் முகம் வாடியது. "பொங்கல், ஆஸ்பத்திரியிலா?" என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டார். நான் பதில் பேசவில்லை. கையை இழந்ததை இன்னும் அவர் உணரவில்லை. உணர்ந்தால்... இந்த நினைவு, கட்டுப் போட்டிருந்த அவருடைய கையில் கொண்டு என் கண்களைப் பதித்தது. என் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்த அவரும் தன் கையைப் பார்த்துக்கொண்டார். அவருடைய கண்களில் கண்ணீர் குளம் போல நிரம்பியது. நெஞ்சு விம்மி விம்மித் தணிந்தது.

"லலிதா, கையை இழந்து உனக்குப் பாரமாகி விட்டேனா?" என்றார் தளர்ந்த குரலில்.

என் நெஞ்சை இரும்பாக்கிக்கொண்டேன். முகத்தில் பலவந்தமாக மலர்ச்சியை உண்டாக்கிக்கொண்டேன்.

"நீங்கள் எனக்கு பாரமா? இப்படியெல்லாம் பேசாதீர்கள். உங்கள் உயிர் மீண்டதே, அதுவே எனக்குப் பெரும் புதையல் கிடைத்தமாதிரி!" என்றேன் ஆதரவுடன்.

"லலிதா! லலிதா!" என்று அரற்றிய அவர், பேசத் தெரியாது திணறினார். அவர் நெற்றியை அன்புடன் வருடினேன்.

"அலட்டிக்கொள்ளாதீர்கள். உடம்பு குணமானதும் பேசிக்கொள்ளலாம்" என்றேன். என்னுடைய ஆதரவிலே அவருடைய உணர்ச்சி கொஞ்சம் அடங்கியது. அவரைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்தேன். அவருடைய உடல் நிலை கொஞ்சம் கொஞ்சமாகத் தேறியது.

"உன்னை நலுங்காது வைத்துக் கொள்ளவேண்டிய நாட்களில் இப்படி உழைக்கிறாயே லலிதா" என்று அடிக்கடி கூறி அங்கலாய்த்துக்கொண்டார் அவர்.

அப்பொழுது என் வயிற்றில் பானு வளர்ந்துகொண்டிருந்தாள். சாவித்திரி, தன்னால் ஏற்பட்ட ஆபத்திற்காக மனங் கசிந்து அவரிடம் மன்னிப்பு கேட்ட பொழுது, அவர் கூறிய பதில் என்னையே சிலிர்க்க வைத்தது.

"நீங்கள் எதற்காக மன்னிப்பு கேட்கிறீர்கள்? நான் செய்த பாவத்தின் பலனை அனுபவிக்கிறேன். லலிதாவுக்குத் துணையாக இருந்து பலவிதத்திலும் உதவி செய்த உங்களுக்கு என் நன்றியை அல்லவா தெரிவிக்க வேண்டும்" என்று கூறினார் அவர். அவருடைய பெருந்தன்மை எனக்குப் பெருமையாக இருந்தது.

நாட்கள் ஒவ்வொன்றாக நகர்ந்தன. அவர் ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டிற்கு வந்து நான்கு மாதங்கள் ஓடிவிட்டன. எங்கள் மனத்துயரை மறக்கச் செய்வதற்கு பானு பிறந்தாள். சாவித்திரியும் எங்கள் குடும்பத்துடன் ஒட்டிக்கொண்டு விட்டாள். 'ராணி' ஹைஸ்கூலில் ஹெட் மிஸ்ட்ராஸாக வேலை பார்த்து வந்த அவளுடைய சிபாரிசினால் எனக்கும் அந்த



மத்ய தமிழ்நாடு ஹிந்தி பிரசாரகர் பயிற்சி முகாம் பட்டமளிப்பு விழா மே மாதம் 14-ந் தேதி மாலை குடந்தை உயர்நிலைப்பள்ளிக்கட்டிடத்தில் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் ஸ்ரீ கக்கன் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் அந்நகர் வியாபாரியான ஸ்ரீ எ. எல். பாலகிருஷ்ணய்யா அவர்களின் குமாரி, பேபி சாந்தியின் பரத நாட்டியமும் நிகழ்ச்சிகளில் இடம் பெற்றது. பேபியின் நடனத்தைப் பாராட்டி ஸ்ரீ கக்கன் நற்சாட்சிப் பத்திரம் வழங்கினார்.

ஸ்கூலிலேயே ஒரு வேலை கிடைத்தது. பானுவைப் பார்த்துக்கொள்ள ஒரு வேலைக்காரியை அமர்த்திக்கொண்டேன். ஒரே நிதானத்தில் நாட்கள் ஓடிக்கொண்டிருந்தன.

அன்று சனிக்கிழமை. அரை நாள் பள்ளிக்கூடம். பகல் ஒரு மணிக்குத் திரும்பி வந்த நான், வீட்டு வேலைகளில் ஈடுபட்டேன். அப்பொழுது "லலிதா இங்கே வாயேன்"—வாசற் பக்கத்து அறையிலிருந்து என் கணவரின் உற்சாகமான குரல் கேட்டது.

"பானு புதிதாக ஏதாவது விளையாடுகிறாளோ என்னவோ?" என்ற எண்ணத்துடன் நான் கொஞ்சம் நிதானமாகவே அவர் இருக்குமிடத்திற்குச் சென்றேன்.

இடது கையில் ஒரு பத்திரிகையுடன், மகிழ்ச்சியால் பூரித்திருந்த அவரைப் பார்த்ததும் எனக்குச் சிறிது ஆச்சரியம் ஏற்பட்டது. பானு தொட்டிலில் நிம்மதியாகத் தூங்கிக்கொண்டிருந்தாள். என்னைக் கண்டதும், "லலிதா, நான் எழுதிய கதை 'தமிழ்க் குரல்' என்ற பத்திரிகையில் பிரசுரமாகியிருக்கிறது" என்றார் பரபரப்புடன்.

நான் திகைப்படைந்து விட்டேன். "நீங்கள் எழுதினீர்களா? எப்படி?" என்று கேட்டேன் ஆவலுடன்.

அவர் முகத்தில் சோகம் கலந்த புன்னகை பூத்தது. "பகல் பூராவும் சும்மா உட்கார்ந்திராமல் இடது கையால் எழுதி எழுதிப் பழக்கிக்கொண்டேன். சின்ன வயதிலேயே கதைகள் எழுதுவதில் எனக்கு ஆர்வமுண்டு. அணைந்திருந்த அந்த ஆர்வத்தை மெள்ளத் தூண்டிவிட்டேன். அதன் பலன் இந்த முதல் கதை!" என்றார் அவர்.

அவரை அப்படியே அள்ளி விழுங்குவதுபோலப்பார்த்தேன். என் உள்ளத்தில் அன்பு வெள்ளம் அமுதமாகப் பொங்கியது. அந்தப் பத்திரிகையை ஆர்வத்துடன் வாங்கிப் பார்த்தேன்.

'கண்ணன்' என்றிருந்த அவருடைய பெயரை உச்சரித்த நாக்கு தித்தித்தது. ஒரே மூச்சில் உட்கார்ந்து கதையைப் படித்தேன். அவருடைய இலக்கிய மேதை என்னுடைய நெஞ்சில் இன்பத்தை வாரி இறைத்தது.

"என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே!" என்றேன் சிறிது தாபத்துடன்.

"கதை பிரசுரமான பிறகு உன்னிடம் சொல்லி, திகைப்பில் ஆழ்த்த வேண்டும் என்றுதான் சொல்லவில்லை. கதை எப்படி?" என்றார்.

"இத்தனை கற்பனை மெருகுடன் எழுதுவீர்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை" என்றேன் உணர்ச்சியுடன்.

அவருடைய கண்களில் மலர்ச்சி பளபளத்தது. "இலக்கியத்துக்கு சேவை செய்யப் படைத்திருந்த கையை வெறும் தொழிலுக்கு அர்ப்பணித்ததைக் கண்டு தமிழன்னை மனம் பொறுக்கவில்லை, கையைப் பிடுங்கிக்கொண்டு விட்டாள்" என்றார் அமைதியாக. என் கண்களில் திரண்ட கண்ணீர், முத்து முத்தாக கன்னத்தில் உருண்டன.

தீவிரமாக இலக்கியத் தொண்டிலே ஈடுபட்டார். விதவிதமான கற்பனைத் திறத்துடன் எல்லாப் பத்திரிகைகளிலும் கதைகளும், கட்டுரைகளும் வெளிவந்தன. எழுத்திற்காகவே பிறந்தவர் என்று பாராட்டுக் கடிதங்கள் குவிந்தன. இரண்டு வருடத்தில் பிரசித்தி பெற்ற எழுத்தாளரின் மனைவியாகி விட்டேன்.

ஆனாலும் பொங்கல் என்றாலே என் மனதில் வேதனை கவிந்து விடுகிறது. அந்தத் துயரச் சம்பவத்திற்குப் பிறகு நான் என்வரையில் பொங்கலைக் கொண்டாடவே இல்லை.

மனதை சிந்தனை வண்டு துளைத்துக் கொண்டேயிருந்தது. கண்களை இறுக மூடிக்கொண்டு சூழ்நிலையை முற்றிலும் மறந்து கிடந்தேன்.

ஃ ஃ ஃ

"நீங்கள் போனதும் போய் படுத்தவள்தான்! இன்னும் எழுந்திருக்கவில்லை" என்ற கணவரின் குரல் காதுகளில் லேசாகக் கேட்டது. சாவித்திரி வந்துவிட்டாள் போலிருக்கிறது என்று எண்ணிய நான், மெள்ள எழுந்து உட்கார்ந்துகொண்டேன். என் அருகில் வந்து நின்ற சாவித்திரி, "லலிதா, உனக்கு இப்பொழுது தலைவலி இருக்காது என்று நினைக்கிறேன். நீ இல்லாமல் எனக்கு ஸ்கூலில் வேலையே ஓடவில்லை, நானும் லீவு போட்டுவிட்டு வந்துவிட்டேன். வா, நாம் எல்லோருமாக சினிமாவிற்குப் போவோம். 'கலைமணி'யில் முதற் பரிசு பெற்ற மகிழ்ச்சியை அனுபவிக்க வேண்டாமா?" என்றாள் ஆனந்தத்துடன்.

உள்ளத்தில் எழும்பிய நினைவு அலைகளை ஒருபுறமாக ஒதுக்கிக்கொண்டேன். 'கடந்த காலத் துன்ப நிழல்களையோ, இன்ப அலைகளையோ எண்ணி இன்று பெறும் ஒரு துளி இன்பத்தையும் வீணாக்கும் சிந்தனைதான் இதயத்தை அரிக்கும் நோய்க் கிருமி. கூடியவரை இதை ஒதுக்கிவிட்டுத்தான் வாழ வேண்டும்' என்று என் கணவர் ஏதோ கட்டுரையில் எழுதியிருந்த மணி வாக்கியங்கள் நினைவிலே மிதந்தன. மனதில் புது தெம்பு பிறந்தது.

"எனக்கு இப்பொழுது ஒன்றும் இல்லை சாவித்திரி. புறப்படு போவோம்" என்று கூறிவிட்டு, சிறுமி பானுவை அலங்கரிப்பதில் ஈடுபட்டேன். அவளும் அதில் பங்கெடுத்துக்கொண்டாள். எங்களை கவனித்துக்கொண்டு உட்கார்ந்திருந்த எழுத்தாளரின் உள்ளத்தில் என்ன கற்பனை ஓடியதோ! முகத்தில் அலாதியானதொரு புத்தொளி வீசிக்கொண்டிருந்தது.

## கல்கத்தா கடிதம்

சௌ. சரோஜினிக்கு,

அநேக ஆசீர்வாதங்கள். கல்கத்தாவில் நாளைக்கொரு சங்கமும், நாழிகைக்கொரு சபையுமாகத் தோன்றி வருகிறது கொஞ்ச காலமாக. கடைசி கடைசியாக உதயமாகியிருப்பது, பக்தஜன சபா. ஆரம்பித்த சூட்டோடு சூடாக ஒரு நல்ல ஆஸ்திக நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார்கள் கடந்த வாரத்திலே. ஸ்ரீ தேவராஜ பாகவதரைக் கொண்டு மூன்று நாட்களுக்குத் தொடர்ந்தாற்போல் கதாகாலட்சேபம் செய்ய ஏற்பாடு செய்திருந்ததைத்தான் குறிப்பிடுகிறேன். சபை புதியதானதாலோ என்னமோ தெரியவில்லை, முதல் நாளன்று கணிசமான கூட்டத்தைக் காணோம். பாகவதரின் கதாகாலட்சேபம் வந்திருந்தவர்களால் நன்கு ரசிக்கப்பட்டது. ஆஸ்திக மகா ஜனங்கள் நிறைந்த கல்கத்தா தென்னிந்தியர் சமூகம், இந்தப் புதிய சபைக்கும் மகத்தான ஆதரவளிக்குமென்று பரிபூரணமாக நம்பலாம்.

ஃ ஃ ஃ

கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்திலே கடந்த வாரத்திலே, வங்கம் தந்த கவிச் சிங்கம் ஸ்ரீ ரவீந்திரரின் நினைவு நாளையும், தமிழ் மறை ஓதிய திருவள்ளுவனார் திருநாளையும் விழாவாகக் கொண்டாடினார்கள்.

ஃ ஃ ஃ

கல்கத்தா தென் இந்திய கிளப் நிர்வாகிகள் தேர்தல் இந்த ஆண்டு உப்பு சப்பில்லாமல் போய்விட்டது. ஏற்கனவேயே நான் எழுதியிருந்தபடி அநேக ஸ்தானங்களுக்குப் போட்டியின்றியே, ஏகமனதாகத் தேர்தல் முடிந்து விட்டது. இந்த நெருக்கடியான கட்டத்திலே நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ள முன் வந்துள்ள அன்பர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

ஃ ஃ ஃ

பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் பழனியிலிருந்து இங்கு வந்துள்ள திரு தேசிகர் திருப்புகழிலிருந்து பல இனிய பாடல்களைப் பாடிக் காட்டினார். வெள்ளிக்கிழமை இரவு மற்றொரு முறை தேசிகரின் இன்னிசையை தேசீய உயர்நிலைப்பள்ளி அரங்கத்திலே கேட்டு மகிழ ஏற்பாடு செய்திருந்தார்கள், சில ஆஸ்திக அன்பர்கள்.

ஃ ஃ ஃ

கல்கத்தா பஜனை சமாஜத்தார் தங்கள் ஆண்டுமலரைக் கடந்த மாதம் வெளியிட்டிருக்கிறார்கள். இந்த வெளியீடு வெகு சிறந்த கட்டுரைகளையும் தன்னகத்தே கொண்டிருக்கிறது. சமாஜத்தாரின் தன்னலமற்ற சேவைக்கு இது ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

—பாலம்.

# நடந்த விஷயம்



என்.சி. ஹரிஹரன்

மிருகேந்திரனுடைய காருண்யம் பன்னிரண்டு வயதுச் சிறுவன் ஒருவனைக் காப்பாற்றியது! அதுவும், தன்னினத்தையே சேர்ந்த இன்னொரு பெண் சிங்கத்தின் பிடியிலிருந்து! அந்தச் சிறுவன் பிச்சு, ராஜனின்—கருணை மிகுந்த அந்தக் கேசரியின் பெயர்தான்!— சமயோசித உதவி இல்லாமல் போயிருந்தால், அவனி வாழ்வையே நீத்திருப்பான்! நல்லகாலம்; ராஜனின் கருணை கடாட்சம் வாய்த்தது.

ராஜன் பிறந்து சில நாட்கள்தாம் ஆகியிருக்கும். அப்போது அதன் தாய் இறந்துவிட்டது. குழந்தை ராஜன் பாவம், இப்போது தாயில்லாத அனாதை! தாய்ப்பாலுக்கும் வழியில்லை! புத்திசாலியாகிய அந்த மிருகக் காட்சிசாலை சூப்பரெண்டு ராஜனின் தாயில்லாத குறையைத் தீர்க்க ஒரு வழி செய்தார். மடி நிறைந்த ஒரு பெண் நாயை ராஜனுக்குப் பாலூட்டி வளர்க்கும் பொறுப்பில் ஈடுபடுத்தினார். வளர்ப்புத்தாயும் வனராஜனும் ஒத்து உறவாடவே செய்தனர் சிலகாலம். ஆனால், மிருக சிகிச்சை வைத்தியர், இரண்டும் தனித் தனியாகப் பிரிக்கப்படவேவேண்டும்; இன்றேல் தாயின் சக்தியை எல்லாம் உறிந்து தீர்த்துவிடுவான், இந்த உத்தம புத்திரன் என்று தீர்மானமாகச் சொல்லிவிட்டார்.

கடைசியாக, காட்சிசாலை சூப்பரெண்டே அந்த சிங்கக் குட்டியைத் தன் வீட்டில் 'செல்ல'மாக வளர்ப்பதென முடிவு செய்துவிட்டார், சுத்தமான பசும்பாலும், சுட்ட ரொட்டியும் கொடுத்து வளர்த்தார் சூப்பரெண்டு. இந்தப் புது உணவில் சீக்கிரமே பழக்கப்பட்டுவிட்டது அந்தச் சிங்கக்குட்டி. சூப்பரெண்ட் வீட்டு நாய்களை விரைவிலேயே வசப்படுத்திக்கொண்டதோடு, வீட்டில் உள் பிராணியாகவும் ஆகிவிட்டான், அந்தப் பயல் ராஜன்!

ராஜன் குழந்தைகளுடன் விளையாடுவதைப் பார்க்கக் 'கண்கோடி வேண்டும்?' 'கண்ணாமூச்சி' விளையாடும்; எறிந்த பந்தை ஓடிப்போய் 'நாய்போல' எடுத்து வரும்!

ராஜன் அசல் சிங்கத்தின் அம்சமாக வளர்ந்துவிட்டான். அவனுடைய உணவு நியமமும் அதற்குத் தகுந்தாற்போல மாறியது. சுட்ட ரொட்டி போய் சமைத்த மாமிசம் வந்தது. போஷாக்குக்காக மீன் எண்ணெயும் சேர்ந்தது. ஆக, ராஜனின் வளர்ச்சியை முன்னிட்டு ராஜோபசாரம் நடந்தது!

கழுத்துப்பட்டை கட்டியிருந்தார்கள் அந்தக் காட்டுப்பிராணி ராஜனுக்கு; ஆனால் கட்டிப்போட்ட நாள்தான் கிடையாது! இப்படிக்கட்டிப்போடாமல் திரியவிடுவது எத்தனை அபாயகரமானது என்பதற்குப் போதிய சான்றாக வாய்த்தது ஒரு சிறிய சம்பவம்:

அது நவராத்திரிகாலம். சூப்பரெண்டின் மனைவியைக் கொலுவுக்கு அழைப்பதற்காக, குங்குமச்சிமிழ் சகிதமாக, கட்டிளங் கன்னியர் சிலர் அந்த வீட்டிற்கு வந்திருந்தனர். வந்திருந்தவர்கள் சில நிமிஷங்கள் வீட்டு வராந்தாவிலேயே காத்திருக்கவேண்டியிருந்தது. சேலையும், சோளியுமாகப் பல வண்ணக் கலவையாகத் திழ்ந்த அந்தப் பாவையரைக் கண்டதும் ராஜனுக்கு என்ன தோன்றிற்றோ, அவர்கள் மீது பாய்ந்தே விட்டான்! கன்னியர் கதிகலங்கிப் போயினர். வீறிட்டு விதிர்விதிர்ப்படைந்து அங்குமிங்கும் ஓடினர். ஒருத்தி கீழே விழுந்து கை ஒடிந்தது. இன்னொரு இளமங்கை சுவரேறிக் குதிக்கவும் தொடங்கிவிட்டாள்! அவள் வெறுமென விளையாடுகிறாளோ என்று எண்ணிய ராஜன், அவளை அணுகி ஆடையை இழுத்துச் சுக்குநூறாக்கத் திருவுளங்கொண்டது!

பெண்ணின் தந்தை சூப்பரெண்டை வாயில் வந்தவாறெல்லாம் வைதார்; மேலதிகாரிகளுக்கு சூப்பரெண்டின் அதிக்கிரமம் பற்றிப் புகார் மனு செய்துகொண்டார். 'ஒரு சிங்கத்தைத் தன் அலுவலக விடுதியில் செல்லப் பிராணியாக வளர்க்க என்ன உரிமையுண்டு?' என்று அவரைச்சுற்றி எங்கும் பேச்சாக இருந்தது.

மேலதிகாரிகள் சிங்கத்தை மிருகக்

மென்று உத்தரவிட்டுவிட்டார்கள். உத்தரவை சிரமேற்கொண்டு நிறைவேற்றி வைத்தார் சூப்பரெண்டு. அதன் இனத்தைச் சேர்ந்த மற்ற சிங்கங்களுடன் ராஜனையும் அடைத்துவைத்தார்கள். சூப்பரெண்டு மட்டும் ராஜனை தினம் தவறாமல் கொஞ்சுவதை விடவில்லை.

ஒரு நாள் மத்தியானம் ஒரு மணி இருக்கும். மிருகக் காட்சிசாலை காவல்காரன் சாப்பிடச் சென்றிருந்தான். அந்த சமயத்தில் உள்ளூர் பள்ளிச் சிறுவன் பிச்சு, மிருகக் காட்சிசாலைக்குள் நுழைந்து அங்குமிங்கும் பார்த்தான். ஒரு கூட்டில் பெண் சிங்கமொன்று படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தது. அதன் அருகே ராஜனும் உறங்கிக்கொண்டிருந்தது. தூங்கும் சிங்கத்தின் மீது சிறு கற்களை எறிந்து பார்த்தான், அந்தப் பன்னிரண்டு வயது இளைஞன். ஊஹூம், அந்தச் சிங்கம் இப்படி அப்படி நகரக்கூட இல்லை! கூண்டுக்கு அருகே போகவிடாமல் தடுக்கும் தடுப்புக்குள் நுழைந்து, ஒரு சிறு குச்சியால் சிங்கத்தின் முதுகில் சுண்டினான்.

சிங்கம் விழித்துவிட்டது; சீறிப் பாய்ந்து சிறுவனின் சிறு கைகளைப் பிடித்துக்கொண்டு பிராண்டியது. பாவம்; பிச்சு கதறினான்! 'ஓ'வென்று அவன் அரற்றுகையில், அந்தச் சிங்கம் அவனை உள்ளிழுக்க முயற்சி செய்து கொண்டிருந்தது!

பிச்சுவின் ஓலம் கேட்டு ராஜன் விழித்துக்கொண்டுவிட்டது. ஒரு கணம் சுற்றிலும் நோட்டம்விட்ட அதற்கு விஷயம் புரிந்துவிட்டது. ஒரே விநாடியில் ராஜன் அந்தப் பெண் சிங்கத்தின் மீது படுவேகமாகப் பாய்ந்து அதை விலக்கியது. இதுதான் சமயமென்று, பிச்சுவும் 'சடக்'கென்று கையை வெளியில் இழுத்துக்கொண்டான். ராஜனுக்கும் அந்தச் சிங்கத்துக்கும் கூண்டுக்குள்ளே கடும் போர்! சிங்கத்தோடு சிங்கம் முட்டி மோதிப் பொருமி உறுமும் பேரொலி கேட்டு, காவற்காரன் ஓடி வந்து பார்த்தான். அவன் கண்ட காட்சி....! பிச்சு பாவம், கையில் இரத்தம் பெருக ஒரு மூலையில் முனகிக் கொண்டிருந்தான்! அடிபட்டுத் தோற்றுப்போன அந்தப் பெண் சிங்கம், பட்ட காயங்களை நக்கிப் பரிதவித்துக் கொண்டிருந்தது! 'உங்கப்பன் மகனே சிங்கம்டா!' என்ற பாவனையில் ராஜன் கம்பீரமாக நிமிர்ந்து பார்த்துக் கொண்டிருந்தது!

பிச்சுவிடமிருந்து விஷயம் அறிந்த காவற்காரன், உடனே அவனை ஆஸ்பத்திரிக்கு அழைத்துச் சென்று காயங்களுக்கு மருந்திட்டு கட்டுப்போட வகை செய்தான். சூப்பரெண்டு ராஜனை அன்போடு தட்டிக்கொடுத்துக் குலாவினார். பிச்சுவின் தந்தை சூப்பரெண்டைச் சந்தித்து, தன் பிள்ளையை எமன் வாயிலிருந்து மீட்ட ராஜனை அவ்வளவு காருண்யமுள்ளதாக வளர்த்ததற்காக அவரை வாயார வாழ்த்தினார். இதில் அதிசயம் என்னவென்றால், சூப்பரெண்டின் வீட்டில் ராஜன் செல்லமாக வளர்ந்தபொழுது, அது மிகவும் அபாயகரமான மிருகமாதலால் அதைச் சுட்டுத் தள்ளவேண்டும் என்று மனுச் செய்து




கே. ஆர். கிருஷ்ணமூர்த்தி

"ஏது. . . இன்று ராத்திரி உங்களுக்குத் தூக்கம் . . . தூக்கம்தான் . . இறக்கை மாத்திரம் இருந்தால் அவளுடன் கூடவே பறந்து போனாலும் போய்விடுவார்கள்! அப்படித்தானே?"

இப்படிக் கிண்டல் செய்தாள் என் மனைவி.

யாரை?

என்னைத்தான்.

"இப்படி உங்களைக் கிண்டல் செய்ய எனக்கு உரிமை இல்லையா என்ன?" என்று உடனேயே கேட்பதுபோல தொனித்தது அவள் என்னைப் பார்த்த பார்வை.

"யார் இல்லை என்கிறார்கள்?" என்று பதில் சொல்லுவதுபோல நானும் அவளைப் பார்த்தேன்.

(இடையில் சிறிது மௌனம்)

"ஆணும் பெண்ணும், அதுவும் புருஷனும் மனைவியுமாக இருந்துவிட்டால், பேச்சுக்குக் கேட்க வேண்டுமா? தனிமையில் என்னென்லாமோ புகுந்துவிடும் பேச்சுக்கிடையில்! வார்த்தைக்கு வார்த்தை அர்த்தம் சொல்ல முடியாதுதான்!" என்றேன் நான்.

"நீங்கள் சொல்லுவது முழுவதும் உண்மையே!" என்கிற மாதிரி நாட்டிய பாஷையில் பதில் கூறிவிட்டு தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டு விட்டாள்.

பரதநாட்டிய பாஷையில் வெட்கத்தைக் குறிக்கும் செயல் இது என்று நினைக்கிறேன்.

அப்படித்தானே?

அதற்குப் பிறகு கௌரி (என் மனைவியின் பெயர் இது) கடைசி வரையில் நாட்டிய சாஸ்திர பாஷையிலேயேதான் என்னுடன் பேசிக்கொண்டு வந்தாள்.

(என்னைக் கேலி செய்துகொண்டுதான் வருகிறாள் என்பது மட்டும் நான் ஊகித்துக் கொள்ள முடிந்தது!)

நானும் அதற்குச் சற்றும் சளைக்காமல் எனக்குத் தெரிந்த மட்டும் பரத பாஷையிலேயே பதில் சொல்லி வந்தேன்!

"நீங்கள் அவள் மேல் வைத்த கண்ணை மட்டும் லகுவில் எடுக்கமாட்டீர்கள் போல இருக்கிறதே" என்று அபிநயம் பிடித்துக் கேட்டாள் ஒரு சமயம்.

"எல்லாம் உன்னால் வந்த வினைதானே! என் மேலா பிசகு?" என்று கேட்பது போல பரத பாஷையில் பதில் சொன்னேன்.

இந்தத் தடவையும் அவள் தன் தலையைத் தொங்கவிட்டுக்கொண்டாள்.

இது பரத பாஷையில் வெட்கத்தைக் குறிக்குமானால் அவள் வெட்கம் அடைந்தாள் என்று வைத்துக் கொள்ளவும்.

(மறுபடியும் சிறிது மௌனம்!)

பா. . மா. . பெயரில் ஏன் இவ்வளவு சிக்கனம்? இரண்டே எழுத்துக்கள்!

இருந்தால் என்ன?

பரவாயில்லை!

அதுவும் சரிதான், சுலபமாக ஞாபகம் வைத்துக்கொள்ள உதவும் பெயர்.

பெயரை மாத்திரம் என்ன? உருவத்தையும்கூட அப்படி எளிதில் மறந்துவிட முடியுமா என்ன?

இப்படி சிறு பிள்ளைகள் எண்ணுவதைப்போன்ற ஒரு எண்ணம் எழுந்தது என் மனசில்.

இச்சிறு எண்ணத்தில் பிரமாதமான குற்றம் ஒன்றும் இல்லைதான். இதைத் துடைக்க விரும்பிய நான், என் முகத்தைத்தான் துடைத்துக்கொள்ள முடிந்தது!

ஆங்கிலக் கவி கீட்ஸும் இப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில்தான், 'அழகான வஸ்துவென்றால், அது எப்பொழுதுமே ஒரு இன்பம்தான்' என்று உணர்ந்து கூறியிருக்கக்கூடும் என்று எண்ணினேன்.

இப்படி நான் எண்ணியது என்னவோ வாஸ்தவம். அதை எப்படி கௌரி கண்டுகொண்டுவிட்டாள்? அவளுக்கா தெரியாது! பரத பாஷையைக் கரைத்துக் குடித்தவளாயிற்றே! ஒரு கண் அசைந்தால் கூட அதற்கும் பரதபாஷையில் ஏதாவது அர்த்தம் கண்டு பிடித்துச் சொல்லுவாள் அவள்.

அப்படிப்பட்டவள் என் மனது எப்படி அசைந்தது என்பதைக் கண் அசைவால் அறிந்துகொண்டுவிட்டது பிரமாதமானதொரு வித்தையா என்ன?

இப்படி என் மனதை சுலபமாக அறிந்துகொண்டுதான் அவ்விதம் என்னைக் கிண்டல் செய்ய ஆரம்பித்துவிட்டாள்.

அன்று மியூஸியம் தியேட்டரில் பந்தநல்லூர் பாமாவின் பரதநாட்டியக் கச்சேரி. என் மனைவியும் நானுமாகப் போயிருந்தோம் அன்றைய நிகழ்ச்சிக்கு.

சங்கீதம், நாட்டியம் இவற்றில் பற்றுக் கொண்டவள் என் மனைவி. அபிநயம் கற்றவள். சங்கீதமும் பயின்றிருக்கிறாள். நன்றாகவும் பாடுவாள். தஞ்சை ஜில்லாவில் பிறந்து வளர்ந்தவளாயிற்றே!

"நாட்டியக் கச்சேரி ஏதாவது ஒன்றை நாம் இருவருமாகப்போய் ஒருதரம் பார்த்துவிட்டு வரவேண்டு"மென்ற ஆசையை அநேக தடவைகள் என்னிடம் தெரிவித்து வந்திருக்கிறாள். அன்றுதான் நாங்கள் இருவருமாக முதல் தடவை ஒரு நாட்டியக் கச்சேரிக்குச் சேர்ந்து சென்றோம்.

பரத பாஷையில் என் மனைவி என்னைக் கிண்டல் செய்வதையும் அதே பாஷையில் நான் பதில் சொல்லி வருவதையும் பக்கத்திலுள்ளவர்கள் பார்த்துச் சிரிக்கப் போகிறார்களே என்று நான் பயந்தே போனேன். நல்லவேளை, அப்படிப்பட்ட நிலைமை ஒன்றும் எங்களுக்கு ஏற்படவில்லை. அந்த மட்டும் எனக்குச் சந்தோஷம்தான். என் மனைவிக்குப் பயமே தெரியவில்லை. அவளுடைய பாஷை வேறு யாருக்கும் தெரியாது என்பது அவளுடைய எண்ணம் போலும்!

எங்களுக்கு ஒரு பக்கத்தில் ஒரு பெண்மணியும், மற்றொரு பக்கத்தில் ஒரு நவ தம்பதிகளுமாக உட்கார்ந்திருந்தனர். அந்தப் பெண்மணி ஏதோ ஒரு கல்லூரியில் ஆசிரியைபோலக் காணப்பட்டாள். முகத்தில் பௌடர் என்னவோ கனமாகத்தான் இருந்தது! வாஸனை ஏற்றப்பட்ட கைக்குட்டை ஒன்றால் முகத்தின் அருகில் விசிறிக் கொண்டிருந்தாள். எவ்வளவு பேர்கள் தன்னைப் பார்த்து மகிழ்கிறார்கள் என்று அடிக்

கடி, இப்படியும் அப்படியுமாகத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே இருந்தாள். வேறு எதையுமே அங்கு அவள் சட்டை செய்ததாகத் தோன்றவில்லை. அவளுடைய வைரத்தோடும், வைர பேசரியும் மின் வெளிச்சத்தில் மினு மினுத்தன.

அப்புது தம்பதிகள், வீட்டில் சாவகாசமாகச் செய்ய வேண்டிய சல்லாபங்களை எல்லாம் நாட்டியக் கச்சேரியில் வைத்துக்கொண்டதுதான் சற்று அசந்தர்ப்பமாகத் தோன்றியது எனக்கு. மற்றபடி அவர்கள் தங்களுடைய உலகத்திலே தான் சஞ்சரித்து வந்தனர்! எங்கள் தர்க்க, குதர்க்கங்களை கவனிக்கவே அவர்களுக்குப் பொழுதில்லை. எங்கள் அபிநய, நாட்டிய பாஷை தொடர்ந்து கொண்டே இருந்தது!

அலாரிப்பு, ஜதிஸ்வரம், வர்ணம் எல்லாம் முடிந்து—அப்பொழுது பாமா பதம் ஒன்றுக்கு அபிநயம் தொடங்கி இருந்தாள்.

பல்லவி

"அதிரூபமான பெண்..உமக்கேற்கவே
நடப்பாள்
அழைத்து வரட்டுமா..சுவாமி.. (அதி)

இப்படி ஆரம்பமான பதம் ஒன்று அது. பைரவி ராகப் பதம் என்று நினைக்கிறேன்.

(பதத்தின் ராகக் குறிப்பு தவறுதலாயின் நட்டுவனர்கள் மன்னிக்கவும்.)

நல்ல பதம் ஒன்றைப் பொறுக்கி எடுத்துத்தான் அபிநயித்தாள் பாமா. ஆடவர்கள் முகமெலாம் மலர்ந்து காணப்பட்டன. என் முகபாவத்தை ஜாடையாகக் கவனித்த கௌரி, மற்றவர்களைப் போலவே நானும் இப்பதத்தில் லயித்து விடாமல் தடுக்கும் பாவனையாக:

பல்லவி

"வேலவரே..உமைத்தேடி ஒரு மடந்தை
விடியும் வரையில் காத்திருக்கும் வகை
என்ன.." (வே)

என்ற பைரவி பதம் வேறொன்றை எனக்கு அபிநயித்துக் காட்டி, "அதைப் போன்றதுதான் இதுவும். பிரமாதமாக இதில் ஒன்றும் இல்லை. வார்த்தைகளில் தான் வித்தியாசம்" என்று அபிநய பாஷையில் என்னை ஆசுவாசப்படுத்த முயன்றாள். பாவம், அவளுக்கு என் மேல் அவ்வளவு பரிவு!

"நீயும் ஒரு பெண், பாமாவும் ஒரு பெண் என்பதற்காகத்தானே என்னை இவ்விதம் கிண்டல் செய்ய ஆரம்பித்திருக்கிறாய்? எவ்வளவு நாட்களாக என்னை இவ்விதம் பழிவாங்க வேண்டுமென்று திட்டம் போட்டு இன்று நிறைவேற்றினாய்? போக்கிரித்தனம் அவ்வளவும் கொண்ட பொல்லாத பெண்ணாக அல்லவா இருக்கிறாய் நீ! பலே! இதற்குத்தான் ஒரு நாள் நாம் இருவரும் மட்டும் தனியாக நாட்டியக் கச்சேரி ஒன்றுக்குப்போய் வரவேண்டுமென்று அடிக்கடி நச்சரித்துக்கொண்டு வந்திருக்கிறாய். இப்பொழுது அல்லவா, உன் அந்தரங்க நோக்கமெல்லாம் எனக்குத் தெரிகிறது" என்று கடுமையாக பரத பாஷையில் பதில் சொன்னேன். அவ்வளவுதான், மறுபடியும் அவள் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டாள். வெட்கம் வந்துவிட்டது அவளுக்கு!

(மறுபடி கொஞ்சம் மௌனம்)

நான் வெற்றி அடைந்துவிட்டதாக சுற்றுமுற்றும் பார்த்தேன். அந்த நவ தம்பதிகள் இன்னும் ஏதேதோ பேசிக் கொண்டேதான் இருந்தார்கள். பேச்சு சுவாரஸ்யத்தில், ஒரு சமயம் தன் இளம் மனைவியை முத்தமிடும் கட்டத்தைக்கூட எட்டிவிட்டான் அந்த யுவன்! அவள் தான் முகத்தைச் சற்று திருப்பிக்கொண்டாள்! அந்த யுவனுக்கு அவ்வளவு லாகிரி கொடுத்தது அவளுடைய பேச்சுக்களாகத் தான் இருக்குமென்பது என்னுடைய சொந்த அபிப்பிராயம். மறு பக்கத்திலிருந்த பெண்மணி அப்பொழுது தியேட்டரிலிருந்த சீலிங் விசிறிகள் மொத்தம் எவ்வளவு என்று அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்ததைப்போலத் தோன்றியது எனக்கு. அவள் உண்மையில் என்ன நினைத்திருக்கக்கூடுமென்று நான் ஆராய்ச்சி செய்யவில்லை அப்பொழுது.

அடுத்தபடியாக,

பல்லவி

"ஸ்வாமிக்கு சரி..எவரே..கிருஷ்ண
ஸ்வாமிக்கு சரி..எவரே.." (ஸ்வா)

என்ற பதம் ஆரம்பமாகியது.

"இப்பொழுது என்ன சொல்லுகிறாய்? சொல்லு பார்க்கலாம். கம்மென்று இருக்கிறாயே! உன்னைப் போன்ற பெண்களையே நம்பக்கூடாது" என்று ஆரம்பித்தேன் நான்.

"போனால் போகிறது. இவ்வளவு நேரம் உங்களை நான் வதைத்துவிட்டேன். இந்த ஒன்றிலாவது ஜயித்துவிட்டுப் போங்கள்" என்று பச்சாதாபத்துடன் கூறினாள் கௌரி.

அடுத்தபடியாக, "தெருவில் வாரானோ என்னை சற்றுத் திரும்பிப் பாரானோ" என்ற பதத்திற்கு அபிநயம் ஆரம்பமாகும் என்று ஒலிபெருக்கி அறிவித்தது. கௌரி என் பக்கமே திரும்பவில்லை அப்பதத்தின் அபிநயம் முடியும் வரை. மற்றொரு முறை மௌனம் தொடங்கு முன், கச்சேரி முடிவடைந்து வீடு திரும்பிவிட்டோம்! (எங்கள் பரத பாஷைப் பேச்சும் நின்றுவிட்டது. கச்சேரி முடிவடைந்ததும்.)

அன்று பௌர்ணமி. நல்ல நிலவு காய்ந்து கொண்டிருந்தது. அப்பொழுதெல்லாம் பேபி டாக்ஸி பட்டணத்தில் அவ்வளவாகக் கிடைக்காது. ஆட்டோ ரிக்ஷாவும் அநேகமாகக் கிடையாது. அதனால் ரிக்ஷாவில் இருவருமாக ஏறிக் கொண்டோம்.

"இன்று கச்சேரி எப்படி?" என்றாள் கௌரி.

"அதை நீதான் சொல்லேன்" என்றேன் நான்; ரிக்ஷாக்காரன் அதற்குள் "எங்கே போவணுமுங்க" என்றான்.

"ராயப்பேட்டைக்கு" என்றேன் நான்.

"பந்தநல்லூர் பாமாவை உனக்குத் தெரியுமோ?" என்றேன் நான் கௌரியைப் பார்த்து.

"உங்களுக்குத் தெரியுமோ சொல்லுங்களேன்" என்றாள் அவள்.

"இவள் தான் மாயவரம் பாப்பாவின் ஒன்றுவிட்ட தங்கை. அதாவது பாப்பாவின் சித்தி பெண்" என்றேன்.

"உங்களுக்கு அவளுடைய உறவினர்கள் யார் யார் என்பதெல்லாம்கூட தெரிந்திருக்கிறது. ஆமாம், பாப்பாவை உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றாள் என் மனைவி.

"எப்படித் தெரியுமா? பாமாதான் என்னிடம் சொன்னாள்!" என்றேன் நான் சாவதானமாக.

"பாமாவா?" என்று ஆச்சரியத் தொனியில் கேட்டாள் அவள்.

"நான் நினைத்தது சரியாப் போச்சு" என்றுதான் அவள் மனதில் எண்ணியிருக்கவேண்டும். அதை அப்பொழுது அவள் வெளிக்காட்டவில்லை.



"ஆமாம், பாமா தான் சொன்னாள். அவள் சொல்லி இப்போது மூன்று வருஷங்கள் இருக்கும்" என்றேன் நான்.

"மூன்று வருஷங்களுக்கு முன், பாமாவை எங்கு பார்த்தீர்கள்?" என்று கேட்டாள் கௌரி.

"அதுவா... அப்பொழுது நான் 'பாதக் கலை' என்ற கலைப் பத்திரிகை ஒன்றின் விசேஷ நிருபராக, பந்தநல்லூர் சென்று, பாமாவைப் பேட்டி கண்டேன். அந்த பேட்டியின் போது தான் அவள் இந்த விவரத்தை என்னிடம் தெரிவித்தாள்" என்றேன் நான்.

"நீங்கள் பலே பேர்வழிதான்! ஒன்றும் தெரியாதவர் போல இவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தீர்களே?" என்றாள் அவள்.

"விஷயம் தெரிந்தவர்கள் எப்பொழுதுமே கம்மென்று தான் இருப்பார்கள். பாரேன் இந்த ரிக்ஷாக்காரனை..நாம் பேசிக்கொண்டு வருவது அவ்வளவையும் ஒன்றுவிடாமல் கேட்டுக்கொண்டே, பசுப் போல இருக்கிறான். நாம் இன்று பேசுவதைக் கேட்பது போல எவ்வளவு சதிபதிகள் பேச்சை அவன் கேட்டிருப்பான் என்று யோசித்துப் பார்" என்றேன்.

அதற்குள் ரிக்ஷாக்காரன், "நீங்கள் சொல்லுவது சரிதானுங்க. நானும் எவ்வளவோ ஜோடிங்க பேசிக்கொள்ளுவதை எல்லாம் கேட்டிருக்கேனுங்க. கடைசியா, உலகமே இப்படித்தான் என்று முடிவு கட்டிக்கிட்டு சும்மா இருந்துடறதுதான் பழக்கமுங்க" என்றான் அவன்.

"அதைத்தான் நானும் சொல்றேன்" என்றேன் நான்.

"பாமாவைப்பற்றி என்ன? சொல்லுங்களேன்" என்றாள் அவள் மறுபடியும். மேலும் விவரம் அறியத்துடித்தது அவள் உள்ளம் என்பது எனக்குத் தெரிந்துவிட்டது.

நான் ஆரம்பித்தேன்: "இன்று வெள்ளிக்கிழமை தானே? அன்றும் வெள்ளிக்கிழமைதான். மங்களஸ்நானம் செய்திருந்தாள் பாமா. தலைமயிரை நன்றாக ஆத்தி, கர்நாடக சம்பிரதாயப்படி மயிரை அள்ளி நாஸூக்காக சொருக்குப் போட்டிருந்தாள். நெற்றியிலோ கம்பீரமான குங்குமப்பொட்டு. கிராமத்தில் வசிக்கும் பெண்ணுக்கு நெற்றிப் பொட்டு சற்று பெரிதாக இருந்துவிட்டால் என்னவாம் என்பதுபோல இருந்தது அதன் தோற்றம். மூக்கில் மூக்குத்தியோ, காதில் தோடோ காணப்படவில்லை. இருந்தாலும் அந்த பொட்டிட்ட முகத்தில்தான் என்ன களை! என்ன குளுமை! என்ன அமைதி! இந்த முகத்துக்குத்தான் என்ன இவ்வளவு வசீகரம்! முகத்தில் பௌடர் இல்லைதான். அதற்காக வசீகரம் சிறிதும் குன்றவில்லை.."

இப்படி நான் வர்ணித்துக்கொண்டே போனேன். "போறும், போறும், நிறுத்துங்கள், நாம் வீட்டுக்குப் போய் சாப்பிட்டுக்கொண்டே பாக்கியை எல்லாம் பேசிக்கொள்ளலாம். எனக்கு பசி எடுக்க ஆரம்பிக்கிறது" என்று என் வர்ணிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டாள்.

அதற்குள் ரிக்ஷா ஒரு கல்லின் மேல் ஏறி இறங்கியது. ஏதோ என்று பயந்து போனவள் போல என் மேல் சாய்ந்துகொண்டுவிட்டாள் கௌரி.

ரிக்ஷாக்காரன், "நடுவில் ஒரு நொடி, இருட்டில் தெரியலிங்க. பயப்படாதீங்க, வேறொண்ணுமில்லிங்க" என்றான்.

"இந்த நொடி எனக்குச் சாதகமான நொடிதான்" பரவாயில்லை என்று நினைத்துக்கொண்டேன் நான்.

கடைசியாக வீட்டு வாசலில் ரிக்ஷா வந்து நின்றது.

நான் வீட்டுக்குள் முதலில் சென்றேன். ஒன்றுமே அறியாதவள்போல என்னைப்




பதினேழு பதினெட்டு வாரங்களில் ஜியார்ஜ் பெர்னட் ஷா என்பவரின் பெயரே வராமல் எழுத்துலகம் எழுதிவிட்டது சிரமமான காரியம் என்றுதான் எண்ணிப் பார்க்கும்போது தோன்றுகிறது. ஏனென்றால் இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய உலகத்தில் ஷா ஒரு ராட்சஸ உருவம். அவர் இலக்கியம் எப்படியானாலும் அவர் உருவம் நிரந்தரமானது—இந்தத் தலைமுறைகளின் சரித்திரத்தில் தப்ப முடியாதது. மற்ற எந்த ஆசிரியரையும் பற்றித் தெரிவதைவிட ஷாவைப் பற்றி எல்லோருக்குமே பொதுவாகப் பல கதைகள் தெரியும்.

"மனிதன் முன்னேறுவதற்காக என்று பாடங்கள் கற்பிக்கிற உத்தேசத்துடன் ஷேக்ஸ்பியர் தன் நாடகங்களை எழுதவில்லை. நான் அந்த உத்தேசத்துடன் எழுதியதால், நான்தான் பெரிய நாடகாசிரியன்" என்று ஷாவே சொல்லிக்கொண்டார். இதே கட்சியை, ஷாவுக்குப் பல வருஷங்களுக்கு முன், டால்ஸ்டாய் என்கிற மகானும் ஒரு இடத்தில் வற்புறுத்தியிருக்கிறார். "ஷேக்ஸ்பியர் நாடகங்களால் யாருக்கும் எவ்வித லாபமும் இல்லை. ஆனால் ஹாரியட் பீச்சர் ஸ்டௌ எழுதிய 'மாமா டாமின் குடிசை' என்கிற நாவலினால் அமெரிக்க நீக்ரோ இனத்துக்கே லாபம். எனவே இந்த நாவல் ஷேக்ஸ்பியரின் நாடகங்களைவிட உயர்ந்த இலக்கியம் என்றே நான் கருதுகிறேன்" என்று சொன்னார் டால்ஸ்டாய். அவரே எழுதிய 'போரும் அமைதியும்' என்கிற நாவலினாலும் உலகத்து மக்களுக்கு ஷேக்ஸ்பியர் நாடகங்களால் ஏற்பட்ட லாபத்தைவிட ஒன்றும் அதிக லாபம் ஏற்பட்டுவிடவில்லை என்று தான் சொல்லவேண்டும். மஹான்கள் ஊருக்கொருவர், தலைமுறைக்கொருவர் என்று பலர் இருந்திருக்கிறார்கள்—இன்னும் இருந்து வருவார்கள். ஆனால் போரும் அமைதியும் போன்ற நாவலையோ, ஷேக்ஸ்பியர் நாடகங்களையோ சிருஷ்டிக்கக் கூடியவர்கள் நூறு வருஷத்திற்கொரு முறை ஒரு பாஷையில் தோன்றினாலும் கூட மனிதர்களே அதிருஷ்டசாலிகள் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஜார்ஜ் பெர்னார்டு ஷாவுக்குக் கிடைத்த பெருமைகளில் பாதிக்கும் அதிகமாகவே அவர் தானாகவே தெரிந்தே தேடிக் கையைத் தட்டுங்கடா என்று தரை மகாஜனங்களைத் தூண்டிவிட்டு அடைந்ததுதான். நாடகாசிரியராக அவர் புகழ் ஏறத் தொடங்கிய காலத்தில், ஒரு நாள் லண்டனில் ஒரு பெரிய கொட்டகையில், ஒரு நாடகத்தின் முடிவில், ஆசிரியர் மேடை மேல் ஏறிப் பேச வந்தாராம். அந்த சமயம் மற்றவர்கள் எல்லோரும் ஆவலுடன் காத்திருக்க, சபையில் ஒருவன் மட்டும் ஆசிரியர் ஷாவை "உள்ளே போ! வெட்கமாக இல்லையா?" என்று விரட்டினானாம். ஷா

வது சரி என்றுதான் எனக்கும் தோன்றுகிறது. இந்தக் குப்பையை எழுதிய நானும், அதைக் குப்பை என்று அறிந்துகொண்ட நீயும் மட்டும் இந்த சபையில் கூடியிருக்கும் ஆயிரக்கணக்கான முட்டாள்களுக்கு மத்தியில் அறிவாளிகளாக இருந்து என்ன பயன்?" என்றாராம் ஷா.

'ஆர்டர் ஆஃப் மெரிட்' எனும் கௌரவப் பட்டத்தை அவருக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் அளித்தபோது அவர் சொன்னார்: "இந்தக் கௌரவத்தை நான் எனக்குப் பல வருடங்களுக்கு முன்னரே கொடுத்துக்கொண்டுவிட்டேனே" என்று.

"வயதாக ஆக நான் கிழவனை விரும்பவில்லை. ஒவ்வொரு வருஷத்திற்கும் இளைஞனாகவே விரும்புகிறேன்" என்றார் ஒரு சமயம்.

அவருக்கு நோபல் இலக்கியப் பரிசு (ஒரு லட்ச ரூபாய்) கிடைத்தபோது, முதலில் வாங்கிக்கொள்ளவே மறுத்துவிட்டார். வற்புறுத்தியதன்பேரில் இந்தக் கையால் வாங்கி அந்தக் கையால் ஆங்கிலோ—ஸ்வீடிஷ் இலக்கிய ஸ்தாபனம் என்கிற ஸ்தாபனத்துக்கு அளித்துவிட்டார்.

ஃ ஃ ஃ

மார்க் ட்வெயின் என்கிற அமெரிக்க ஹாஸ்ய ஆசிரியரை அலெக்ஸாண்டர் கிராஹம் பெல் என்பவர் அணுகித் தான் ஒரு புது யந்திரம் (டெலிபோன்) கண்டுபிடித்திருப்பதாகவும், அதன் மூலம் நூறு கஜத்துக்கப்பாலிருப்பவரிடம்கூடப் பேசலாம் என்றும் கூறி, அந்த இயந்திரத்தை உற்பத்தி செய்து விற்க ஐநூறு டாலர் பணம் கொடு என்று கேட்டாராம். "நூறு கஜத்துக்கப்பால் இருப்பவர்களுடன் பேசுவதாவது! மடத்தனம்! அயோக்கியத்தனம்!" என்று அந்த விஞ்ஞானியை விரட்டிவிட்டுக் கையிலிருந்த ஐநூறு டாலரை ஒரு கடைக்கார நண்பரிடம் பங்காகக் கொடுத்தாராம். அந்தக் கடை நாலு மாதத்தில் மூடியாகிவிட்டது. "அந்த ஐநூறு டாலரை கிராஹம் பெல்லுக்கு அன்று கொடுத்திருந்தால், நான் இன்று லட்சாதிபதியாக இருப்பேன்" என்று இருபது வருஷங்களுக்குப் பிறகு சொன்னார் மார்க் ட்வெயின். "ஆனால், லட்சாதிபதி ஹாஸ்ய எழுத்தாளனாக இருக்க முடியுமா? முடியாது பாருங்கள்! அதனால் தான் அன்று நான் பணம் தரவில்லை" என்றும் கூறினாராம்.




அண்ணன் தம்பிகளுக்குள் பொருமை ஏற்படும். நாத்தனர் மதனிகளுக்குள் பொருமை ஏற்படும். ஓர்ப்படிகளுக்குள் பொருமை ஏற்படும். ஆனால் அக்கா, தங்கைகளுக்குள் பொருமை ஏற்படுமா? அதுவும் ஏற்படத்தான் செய்தது மீனுவின் விஷயத்தில்.

மீனு தன் தம்பிக்குச் சாதம் போட்டுக்கொண்டிருந்தாள். ராஜம்மாள் மீனுவின் கைக்குழந்தையைச் சீராட்டிக்கொண்டிருந்தாள். 'சார், தந்தி' என்ற குரல் கேட்டுக் கையிலெடுத்த பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டு அவசரமாக வெளியே வந்தாள் மீனு. "தந்தி என்றவுடன் நடுங்காதே! கமலு தான் அடிக்கடி தந்தியடிப்பாள்" என்று பெருமையுடன் சொல்லிக்கொண்டே தந்தியை வாங்கிக்கொண்டான் கோபு. "அம்மா! கமலு நாளைக்கு ராத்திரி வண்டியில் வருகிறாளாம்" என்றான் கோபு.

"அப்போ நீ நாளைக்குச் சரியான நேரத்தில் ஸ்டேஷனுக்குப் போய் அவளை அழைத்து வந்துவிடு. உன் சுபாவப்படி நிதானமாகப் போகாதே. குழந்தை அலைந்துவிடுவாள்" என்றாள் ராஜம்மாள் பிள்ளையிடம், பரபரப்பு அடைந்தவளாக.

கமலு முதல் பிரசவத்திற்காக வந்த இரண்டு வருடங்களுக்குப் பிறகு இப்பொழுதுதான் மறுபடியும் பிறந்தகத்துக்கு வருகிறாள். கேட்க வேண்டுமா தாயாரின் சந்தோஷத்துக்கு! "மீனு, நீ இருக்கிற அறையை ஒழித்துவிடு. கமலு வந்தால் படுக்க வசதியாக இருக்கும்" என்றாள் அவள். அவர்களுடைய வீட்டிற்குள் அதுதான் நல்ல காற்றோட்டமான அறை. 'கமலு வருவதற்காக என் சௌகர்யத்தைக் குறைத்துக்கொள்ளச் சொல்லுகிறாளே அம்மா! எப்பொழுதுமே கமலுவின் பேரில்தான் ஆசை அம்மாவுக்கு' என்று எண்ணினாள் மீனு. ஆனாலும் அதை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் "அதற்கென்ன அம்மா, அப்படியே செய்தால் போச்சு" என்றாள்.

மறு நாள் சாயந்திரம் வாசலில் கார் வரும் சப்தம் கேட்கும்பொழுதெல்லாம் ராஜம்மாள் வாசலுக்குப் போய் எட்டி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தாள். ஒருவாறு ஏழு மணிக்கு சப்தமின்றி ஒரு டாக்ஸி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கின கமலுவைப் பார்த்து ஸ்தம்பித்துப் போனாள் மீனு. "வாடா கண்ணு ரமா" என்று சொல்லித் தன் பேத்தியை வாரியணைத்துக்கொண்டு, "ஏம்மா கமலு, இளைத்துப்போயிருக்கு உடம்பு!" என்று கேட்ட வண்ணம் உள்ளே அழைத்துச்சென்றாள் ராஜம்மாள் மகளை. குறும்புக்காரனான கணபதி டாக்ஸியைத் தொடப்போனான்.

"இந்த மாதிரி நாட்டுப்புறம் போல் நடந்து கொள்ளாதே என்று உனக்கு எத்தனை தரம் சொல்வது?" என்று மீனுவின் ஐந்து வயதுக் குழந்தையான கணபதியை விரட்டினான் கோபு. இதற்குள் இரண்டு வயதுக் குழந்தையான ரமா ஓடிவந்து கணபதியின் பின்னலைப் பிடித்து நன்றாக இழுத்துவிட்டாள். அவன் அழுது கொண்டே வந்தான். ஒரு குழந்தை சாதாரணமாகச் செய்யக்கூடிய விஷமமாக இருந்தாலும் கூட, அப்போதைய மனநிலையில் மீனுவுக்குக் கோபமும் துக்கமும் பொங்கின. அழுது கொண்டிருந்த மகனைச் சமாதானப் படுத்திக் கொண்டே உள்ளே வந்தாள்.

வாஸ்தவந்தான். செல்வம் இருக்கும் இடத்தில் தானே குழந்தைகள் சீரும் சிறப்புமாக வாழ முடியும்? தன்னையும் கமலுவையும் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டாள் மீனு. தன் அதிர்ஷ்டக் குறைவை நினைக்கும் பொழுது அவள் கண்களில் நீர் பொங்கியது. அவள் மனத்தில் எண்ண அலைகள் எழுந்தன. ஆம்; அவள் விவாகத்தின்பொழுது அவள் தந்தை மிகவும் சிரம தசையில் இருந்தார். அப்போது அவர்கள் கிராமத்தில் இருந்தனர். புரோகிதமே அவள் தகப்பனார் தொழில். ஆறுமாதச் சாப்பாட்டுக்குக் கிடைக்கும்படியாக நிலம் இருந்தது. எப்படியோ சிரமத்துடன் நான்கு குழந்தைகளுடன் காலந்தள்ளி வந்தார். மீனு தான் மூத்த பெண். அடுத்தவன் கோபு. 'எப்படியாவது கஷ்டப்பட்டு மீனுவுக்குக் கல்யாணம் செய்து முடித்துவிட்டால், கோபு படித்துச் சம்பாதிக்க ஆரம்பித்துவிடுவான் கமலுவின் கல்யாணத்திற்குள்' என்று எண்ணினார் தந்தை சாம்புவையர். ஆனால் தினசரி காலட்சேபத்துக்கே கஷ்டப்படும் நிலையில் மீனுவுக்குக் கல்யாணம் செய்வது என்பது பெரும் பிரச்னையாகவே இருந்

தது. எப்படியோ தன் எளிய அந்தஸ்திற்கேற்றபடி [illegible] தேர்ந்தெடுத்தார். பதினாறு வயதுக்குள் குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொண்டாள் மீனு. அவளுக்குக் கல்யாணம் முடிந்த பிறகுதான் தாலுகா ஆபீஸில் குமாஸ்தாவாக வேலை கிடைத்தது அவளுடைய கணவருக்கு. அவள் சாமர்த்தியமாகக் கணவனின் குறைந்த வருவாயில் காலம் கழித்து வந்தாள்.

இதற்கிடையில் மீனுவின் தந்தை நிலத்தில் விளைச்சலில்லாமல் சாப்பாட்டிற்குக்கூடக் கஷ்டப்படும் நிலை வந்துவிடவே 'கெட்ட பின் பட்டணம் சேர்' என்ற பழமொழியின்படி சென்னை வந்தாலாவது பிழைக்கலாம் என்று எண்ணித் தன் குடும்பத்துடன் பட்டணம் வந்து சேர்ந்தார். ஊரிலிருந்த கொஞ்ச நிலத்தையும் பணமாக்கிக் கொண்டு வந்தார். வந்தது வாட்டும் என்று தைரியத்துடன் புடவை வியாபாரத்தில் இறங்கினர். மிகவும் சிறியதாக ஆரம்பித்தது, இரண்டு வருடங்களுக்குள் பிரபல ஜவுளிக்கடையாக மாறியது. லட்சுமி தேவியின் பூர்ண கடாக்ஷம் அவருக்குக் கிடைக்க ஆரம்பித்தது. கஷ்டப்படும் தன் மூத்த பெண்ணுக்கு அவ்வப்பொழுது கொஞ்சம் பணமும், பொருள்களும் அனுப்பி வைப்பார். கோபுவும் படித்து முடித்துச் சம்பாதிக்க ஆரம்பித்தவுடன் அவர் அந்தஸ்து மேலும் மேலும் உயர ஆரம்பித்தது. ஆகவே, கமலுவுக்கு நல்ல பசையுள்ள இடமாகப் பார்க்க அவரால் முடிந்தது. அவர் முயற்சியும் வீண் போகவில்லை. பிரபல கம்பெனி ஒன்றின் உதவி மானேஜராக இருந்த ராமச்சந்திரனை மாப்பிள்ளையாகத் தேர்ந்தெடுத்தார்.

கல்யாணம் முடிந்த இரண்டு மாதங்களுக்கெல்லாம் அவனைக் கல்கத்தா கிளைக் காரியாலயத்திற்கு மானேஜராகப் போட்டார்கள். 'கமலுவின் அதிர்ஷ்டம்' என்று சொல்லி யாவரும் மகிழ்ந்தனர். கல்யாணத்திற்குப் பிறகு, அதிர்ஷ்டம் மிகுந்த தனது இளைய சகோதரியான கமலுவை இப்பொழுதுதான் பார்க்கிறாள் மீனு. தன்னையும் அவளையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்ட பொழுது அவளையும் அறியாமல் ஒரு பெருமூச்சு எழுந்தது அவள் உள்ளத்தில்!

வறுமையில் வாடிய தேகம். எண்ணெய்யும், மஞ்சளும் இறங்கிய தோடு. பல நெளிசல்களுடன் கூடிய ஒரே வளை. கழுத்தை அலங்கரித்துவந்த சங்கிலியையும் கடந்த வருடம் கணவனுக்கு டைபாய்டு வந்தபோது விற்றுச் செலவழித்தாகிவிட்டது. ஆகவே, கழுத்தில் ஒரு பவழ மாலை. பக்கத்தில் ஒரு பழைய சட்டையும், கொத்தவரங்காய்ப் பின்னலுமாகக் காட்சியளித்தான் கணபதி.

ஆனால் கமலு! கல்யாணத்தின்போது பார்த்ததற்கும் இப்பொழுது இருப்பதற்கும் எவ்வளவு வித்தியாசம்! கமலுவும், மீனுவும் ஒரே சாயலில் இருந்தபோதிலும், கமலு நல்ல நிறம்; வாட்டசாட்டமான உடலமைப்பு. ஆகாயக் கலரில் மைசூர் சில்க் புடவை; அதற்கேற்றபடி நீல நிற வெல்வெட் சட்டை. வெள்ளைக்கல் பதித்த நெக்லேஸ். இத்யாதி [illegible] அவளைப் பார்த்த யாரும் அவளை மீனுவின் சகோதரி என்று சொல்ல முடியாதபடி இருந்தது! அவள் பெண் ரமாவோ பூப்போட்ட ஸாடின் பாவாடையும், சோலியும், கால்களில் நாஸூக்கான ஷூவும், இரட்டைப் பின்னலும் அழகு செய்ய, செல்வத்தின் களை முகத்தில் சொட்ட, சௌந்தர்ய பிம்பமாக விளங்கினாள். ஆகவே கமலுவுக்கும் அவள் குழந்தைக்கும் அந்த வீட்டில் அதிக கௌரவம் ஏற்பட்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை என சிந்தித்துக் கொண்டிருந்த மீனு "அம்மா, இங்கே பாரு, என் மண் சொப்பையெல்லாம் ரமா வீசிப்போட்டா. எனக்கு அழகு காட்டுகிறா" என்ற கணபதியின் இரைச்சலைக் கேட்டு மீண்டும் அவனைச் சமாதானப்படுத்த விரைந்து சென்றாள். 'ஆம்; இனிமேல் நாம் ஊருக்குப் போக வேண்டியது தான். இம்மாதிரியான சூழ்நிலையில் அதிக நாள் இருக்க முடியாது' என்று தீர்மானித்துக்கொண்டாள்.

அதை ஊர்ஜிதப்படுத்துவதுபோல் அடுத்த ஒரு வாரத்துக்குள் அவள் மனம் வருத்தும்படிப் பல காரியங்கள் நடந்துவிட்டன. அவள் தம்பிகள் இருவரும் ரமாவைத் தூக்கி வைத்துக்கொண்டு ஓயாமல் கொஞ்சினர். கணபதி ஏதாவது கேட்டால்கூட 'வள்' என்று விழுவான் கோபு! முன்பு ஒரு நாள் கணபதி வாசலில் விளையாட்டுச் சாமான்கள் விற்பவனிடமிருந்து 'ஒரு ரப்பர் கிளி வாங்கித்தா' என்று கேட்டதற்கு அது விலையதிகம் என்று சொல்லி, பிளாஸ்டிக்கில் ஏதோ ஒரு சிறிய சாமானை வாங்கிக் கொடுத்துவிட்டான். ஆனால் ரமா தனக்கு ஒரு ஆடும் குதிரை வேண்டும் என்று அடம் பிடித்தாள். கமலுவும் "ஆமாம் கோபு! அங்குகூட அவரைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தாள். அவருக்கு ஒழிவேயில்லை. நீதான் அவளை அழைத்துக் கொண்டு போய் வாங்கிக்கொடுத்துவிடேன்" என்றதற்குத் தயாராக சாயந்திரமே வாங்கிக் கொடுத்துவிட்டான். அதை ஆவல் நிறைந்த கண்களுடன் பார்த்து நிற்க வேண்டியதாயிற்று கணபதிக்கு. "எனக்கும் ஒன்று வேணும்" என்று அடம் பிடித்த கணபதிக்கு இரண்டு அடிகள்தான் கொடுக்க முடிந்தது அவளால். "நம்மால் வாங்கிக் கொடுக்க முடியவில்லை. ஆனால் குழந்தைக்கு ஆசையில்லாமல் இருக்குமா! நாம் அடிப்பது எவ்வளவு அநியாயம். இனி இங்கிருந்தால் கலகம் தான் அதிகமாகும்" என்று நினைத்து, "அப்பா ஊரிலிருந்து வந்தவுடனே நான் ஊருக்குப் போகலாம் என்று நினைக்கிறேன்" என்றாள் தாயாரிடம்.

"என்ன அவசரம். இன்னும் ஒரு மாதம் கழித்துப் போகலாமே" என்றாள் அம்மா.

"வேண்டாம் அம்மா. அங்கே கோமதி தனியாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பாள். நான் போகிறேன்" என்றாள் மீனு.

அவள் பிடிவாதமாக இருக்கவே தாயார் அவள் பேச்சுக்கு ஒப்புக்கொள்ள

வையரும் புடவைகள் எடுப்பதற்காகப் [illegible] பெண் ஊருக்குக் கிளம்புவதன் காரணம் புரியாமல் விழித்தார்.

கடிதம்கூடப் போடாமல் மீனு வந்து சேர்ந்ததைப் பார்த்து ஆச்சரியப்பட்டனர், அவள் கணவரும் மகள் கோமதியும். அவள் வந்த ஒரு வாரத்துக்கெல்லாம் அவளைத் தேடிக்கொண்டு வந்தது ஒரு பார்ஸலும் கடிதமும். அதைக் கையெழுத்துப்போட்டு வாங்கிப் பிரித்துப் பார்த்தாள். என்ன ஆச்சரியம்! அதில் ஒரு காசு மாலை இருந்தது. கடிதத்தைப் படித்து முடித்ததும் அவள் கண்களில் களகளவென்று நீர் சுரந்தது. ஏன்? தாயாரிடமிருந்து வந்த கடிதத்தின் சாரம் இதுதான்:— "நீதான் நான் சொல்லியதையும் கேட்காமல் புறப்பட்டுவிட்டாயே. கமலு வந்த பிறகு உன் குணம் மாறியதைக் கவனித்தேன். நீயோ கல்யாணத்துக்கு ஒரு பெண்ணை வைத்துக் கொண்டிருக்கிறாய். இந்த மாலையைச் செய்யப் போனவாரம்தான் ஆர்டர் கொடுத்தேன். அது வரும் வரையிலாவது உன்னை இங்கு வைத்துக் கொள்ள நினைத்தேன். ஆனால் நீ "இரு" என்றால் கேட்கவில்லை. கமலுவின் பெண்ணுக்குக் குதிரை வாங்கிக்கொடுத்ததற்கு உனக்குக் கோபம் வந்ததும் எனக்குத் தெரியும். உனக்கு அம்மாதிரியான உபயோகமற்ற சாமான்கள் வாங்கிக் கொடுத்தால் என்ன பிரயோஜனம்? உன் குழந்தைகளுக்குத் துணிமணி வாங்கி வைத்திருக்கிறேன். அப்பா அந்தப் பக்கம் வரும்போது கொடுத்து அனுப்புகிறேன். ஒரு தாயாருக்கு, அதிலும் எனக்கு, பெண்களிடையே ஒரு வித்தியாசமும் கிடையாது; எல்லோரும் ஒன்றுதான் என்பதை நீ அறிந்துகொள்ளவில்லையே என்பதுதான் எனக்கு வருத்தமாக இருக்கிறது. இனிமேல் இது மாதிரி அசட்டுத்தனமாக இருக்கமாட்டாய் என்று நினைக்கிறேன். கமலுகூட, நீ அவளுடன் சரியாகப் பேசவில்லை என்று வருத்தப்பட்டுக்கொண்டாள்."

அவள் மனத்தில் தோன்றியிருந்த பொறாமை என்னும் திரை விலகியவுடன், அவளுடைய தாயாரின் உண்மையான அன்பு உள்ளத்தை அவளால் தரிசிக்க முடிந்தது.

# உலகம் அழிந்தால்...?




'நே'ற்று ஒரு வேடிக்கையைக் கேளேன்! நல்ல உச்சி வேளை; வெப்பம் தாங்க முடியவில்லை! விசிறியும் கையுமாக ஊஞ்சலில் உட்கார்ந்திருந்தேன். எங்கள் எதிர் வீட்டு மாமி பரக்கப் பரக்க உள்ளே வந்தாள். முகத்தில் பயமும், கவலையும் குடி கொண்டிருந்தன. "என்ன மாமி?" என்று கேட்டேன். "உலகமே முடிந்துவிடப் போகிறதாமே? நம்ம சமுத்திரத்தில் அணுகுண்டு போடப் போகிறார்களாமே? எங்கள் சுலோசனா சொல்லுகிறாளே?" என்று மூச்சுவிடாமல் சொல்லிக் கொண்டே போனாள். ஏதோ, என்னவோ என்று நினைத்த எனக்கு, இதைக் கேட்டதும் முதலில் 'குப்' என்று சிரிப்புதான் வந்தது. பிறகு சமாசாரத்தை விசாரித்தேன்.

மாமி, காலையிலிருந்தே தன் மாட்டுப் பெண் சுலோசனாவிடம் குற்றம் கண்டுபிடித்த வண்ணம் இருந்திருக்கிறாள். கடைசியில், "உலகமே அழிந்துவிடப் போகிறது! இதெல்லாம் என்ன பிரமாதம்!" என்று அந்தப் பெண் சொன்னாளாம். இப்போது கொஞ்ச நாட்களுக்கு முன், லோக் சபையில், 'இந்திய சமுத்திரத்தில் அணுகுண்டு போட்டுப் பரிசோதனை செய்யக்கூடாது என்று தடுத்துக் கூறவேண்டும்' என்ற பேச்சு நடக்கவில்லையா? அதை ஆதாரமாக வைத்துக் கொண்டு, தன் மாமியாருக்குப் படிக்கத் தெரியாது என்ற தைரியத்தில், "சீக்கிரமாகவே இந்திய சமுத்திரத்தில் அணுகுண்டுப் பரீக்ஷை நடக்கப் போகிறது. அப்போ நிச்சயமாக உலகம் அழிந்தே போகும்" என்று சொல்லி இருக்கிறாள்! 'உலகம் அழிந்தால்...' என்ற பீதியில் மாமி எங்க வீட்டிற்கு ஓடோடி வந்திருக்கிறாள்!

எனக்கு முதலில் என்ன சொல்லுவது என்று புரியவில்லை. சுலோசனாவையும் காட்டிக் கொடுக்காமல், "இப்போ உடனடியாக உலகம் முடிவதாக இல்லை. அப்படி வல்லரசுகள் சண்டையால் முடிந்தே போனால், நாம் செய்யக்கூடியது என்ன இருக்கிறது? 'எல்லோரும் செத்தால் கலியாணம்' என்பது போலத்தான் அப்போ.." என்று சமாதானம் சொல்லி அனுப்பினேன்.

அவள் போன பின் எனக்கும் ஒரே யோசனையாக இருந்தது. விஞ்ஞானம் 'விடு, விடு' வென்று முன்னேறுகிறது. அணுகுண்டு, ஜலவாயு குண்டு போன்ற நாசகார அஸ்திரங்கள் கண்டுபிடிக்கப்படுகின்றன. இதனால் உலகமே அழிந்துவிடலாம். ஆனால் இதெல்லாம் நம் தினப்படி வாழ்க்கையைத் துளியும் பாதித்ததாகத் தெரியவில்லையே! என்ன தினுசுப் புடவை வாங்கலாம், எந்த மாதிரி நகை பண்ணலாம், எப்படி யெப்படி யெல்லாம் புதுப் புது பக்ஷணம், சமையல் பண்ணலாம் என்று தானே வாழ்க்கை நடத்துகிறோம்!' என்று நீ எழுதி இருக்கிறாய்.

மங்களம்—சின்னையா, அவள் பெண் பார்வதி, இவள் நாத்தனார் ராஜம்—நாதன், வேதவல்லி—சாரி, என் அத்தை, நான் எல்லாருமாக எங்கள் வீட்டு ஹாலில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது தான் உன் கடிதம் வந்தது. கடிதத்தை நன் உரக்கப் படித்தேன்.

"நாளைக்கு எது எப்படிப் போனால் என்ன? உலகமே முடிந்தால் தான் என்ன? தினப்படி வாழ்க்கையில் உள்ள பிடிப்பைவிட முடியுமா என்ன? இது தானே வாழ்க்கையின் இரகசியம்!" என்றாள் மங்களம்—சின்னையா.

"ஆமாம். நச்சுப் பொய்கையில் இதைத் தானே தர்மபுத்திரர் சொன்னார்?" என்றாள் என் அத்தை.

"என்ன சொன்னார்?" என்றாள் பார்வதி.

"இதுகூடவா தெரியாது! 'தன்னைச் சுற்றி மரணம் தாண்டவம் ஆடுவது தெரிந்தும், தனக்கு எந்த விநாடியும் முடிவு ஏற்படலாம் என்பதை அறிந்திருந்தும், மனிதன் தனக்கு அழிவே இல்லை என்ற எண்ணத்தில் முயற்சிகள் செய்கிறானே அதுதான் வாழ்க்கையில் பெரிய அதிசயம்!' என்று தர்மபுத்திரர் சொன்னார்" என்றாள் ராஜம்—நாதன்.

"அம்மாடி! எவ்வளவு வளைவு வளைவுகளுடன் ஒரு வாக்கியம்!" என்றாள் வேதவல்லி—சாரி; எல்லோரும் சிரித்தோம்.

"நான் இனிமேல் என் நல்ல புடவைகளை எல்லாம் தினப்படி உடுத்தப் போறேன்! ஏதாவது குண்டு விழுந்து உலகமே முடியறத்துக்குள், கட்டியாவது அனுபவிக்கிறேனே!" என்றாள் பார்வதி.

"நாங்கள் ஆயிரம் காலத்துக்கு அடி கோலுவோம்! இப்போ, 'நாளைக்கு எப்படியோ? இப்போவே ஆண்டு, அனுபவித்துவிடலாம்' என்ற எண்ணம்தான் அதிகமாக இருக்கு! இம், காலம்! நீங்கள் என்ன செய்வீர்கள்!" என்று அத்தை பெருமூச்சு விட்டாள்.

"இந்தாடி அம்மா! அடுத்த வருஷம், 'என் நல்ல புடவையெல்லாம் பாழாகிவிட்டது. புதுசாக புடவைகள் வேண்டும்' என்றால் என்னால் முடியாது; நீதான் வாங்கிக்கொள்ள வேண்டும்!" என்று மங்களம்—சின்னையா சிரித்துக்கொண்டே சொன்னாள்; எல்லோரும் சிரித்தோம்.

ஆனால், என் அத்தை சொன்னபடி, 'நாளைக்கு என்ன ஆகுமோ, உலகமே முடிந்துவிட்டால்? இப்போவே அனுபவித்துவிடலாம் என்ற எண்ணத்தால், எதிலும் ஒரு அதிருப்தி, அமைதியின்மை, வருங்காலத்தில் நம்பிக்கைக் குறைவு, ஆகியவை இப்போது தலைதூக்கி நிற்கத்தான் செய்கின்றன. எந்த நாகரிகமும் ஒரு உன்னத நிலையை அடைந்த பின், அழிய வேண்டியதுதானே? 'அதற்குத்தான் அறிகுறி தென்படுகிறது போலும்' என்ற எண்ணம் நம் மனத்திலும் தோன்றத்தான் செய்கிறது. ஆனால் நாம் செய்யக்கூடியது எதுவும் தெளிவாகத் தெரியவில்லையே! இதெல்லாம் காலத்தின் கோலம்தான்!



# துப்பறியும் சுப்புடு









அந்தப் பஸ்ஸில் ஒரு கேடி!



அவன் வெகு நைஸாக தன் வேலையை ஆரம்பித்தான்.



.. நின்று கொண்டிருந்த பிரயாணிகள் நிலை குலைந்தனர்.



அதே சமயம் தற்செயலாக டிரைவர் 'ப்ரேக்' போடவும் ..



பின்னால் சாய்ந்த சுப்புடுவோ, கீழே விழாதவாறு இருக்க எதிரே இருந்தவரின் தோளைப் பற்றினான்!



ஆனால் இருவரும் கீழே சாய்ந்தனர்.
















அவன் பள்ளிக்கூடத்தில் வாசிக்கும் வரை ஒரே விளையாட்டுத்தான். அவனைச் சுற்றி எப்போதும் பத்து பையன்கள். அவன் புத்தக மூட்டையைத் தூக்க ஒரு பையன் முன்வருவான். அவன் காபி யடிக்கத் தயாராக வகுப்பில் கெட்டிக் காரப் பையன் எங்கிருந்தாலும் துடித் துக்கொண்டிருப்பான். வீட்டிலிருந்து தின்பண்டம் கொண்டுவரும் எந்தப் பையனும் அவனுக்குக் கொடுக்காமல் தின்னமாட்டான். இத்தனைக்கும் அவன் செய்யும் கைம்மாறு? மாற்றி மாற்றி அவர்கள் தோள்களில் கைபோட்டுக் கொண்டு பவனிபோகவேண்டும். முடிந்த வரை அவன் பக்கலிலேயே இருக்க வாய்க்கவேண்டும். அவ்வளவுதான்.

இதன் ரகசியத்தை முதல் கிளாஸ் வாத்தியார் முதலிலேயே கண்டுபிடித்து விட்டார்.

"அவன் என்னையா ஒரே அழகா இருக் கான்! அவனை எப்படி ஐயா தொட்டு அடிக்கிறது?" என்று சகோதர வாத்தியா ருடன் சொல்லிக்கொண்டார். அந்த சகோதர வாத்தியாரும் இந்த 'பயங்கர உண்மை'யை அப்படியே ஒத்துக்கொண் டார். "பள்ளிக்கூட வாத்தியாருக்குப் பதினைந்து ரூபாய்க்கு மேல் எதற்கையா சம்பளம்?" என்ற கேள்விக்கே மறுக் காமல் ஆமாம் போட்டவர் அவர்.

# முகரா மலர்

## ஸ்வாமிநாத ஆத்ரேயன்

கல்யாணசுந்தரம் கண்ணாடி முன் நின்று தலைவாரிக் கொண்டிருந்தான். அறைக்கதவு திறந்திருந்தது. அதை சார்த்தித் தாழ்ப்பாள் போட்டுக்கொண்டு வந்தான். மறுபடியும் கண்ணாடிமுன் நின்றான். சீப்பை எடுத்து.....

இப்படித் தலைவாருவது அவனுக்குப் பழக்கம் ஆகிவிட்டது. அவனுக்கு வயது பதினைந்துதான். அவ்வீட்டில் தினம் காலையில் ஒரு மூச்சு அவன் தாயார் இழைய இழைய வாரிவிடுவாள். அதற் குள் அவன் அக்காவருவாள்.

"இப்படித்தான் பெண்களைப்போலே "பப்" வைத்து வாருவாளாக்கும். ஆண் பிள்ளைகள் படிய வாரிக்கொண்டால் தான் நன்றாக இருக்கும்" என்று அவன் தலையைக் கோதிவிட்டு மறுபடியும் தைலம் தடவிவிட்டு ஜலம் தெளித்து வாரிவிடுவாள். இது அரைமணி நேரமா வது பிடிக்கும்.

இங்கு காலேஜ் ஹாஸ்டலில் இப்படி போட்டி போட்டுக்கொண்டு வாரிவிடுவ தற்கு ஒருவருமில்லை. ஆனால் அப்படி வாரிக்கொள்வதில் ஒரு குறுகுறுப்பு ஒரு சிலர்ப்பு உண்டு. அது அவனுக்குத் தேவையாக இருந்தது. அதற்காகவே அத்தனை நேரம் வாரிக்கொண்டான். தாயாரைப்போல் "பப்" வர வாரிக் கொள்ளவோ, அக்காவைப்போல படிய–இழைய–வாரிக்கொள்ளவோ தெரிய வில்லை.

ஆனால் தலை வாரிக்கொள்வதில் மட் டும் அவன் மனது முழுதும் ஈடுபட வில்லை. மீசை பசுமையுடன் முசுமுசுத் திருக்கும் அவன் முகத்தில் முத்து முத் தாக வியர்த்திருந்தது.

அவன் காலேஜில் சேர்ந்து இன்னும் பதினைந்து நாட்களாகவில்லை. அதற் குள் அந்தத் துள்ளு மனதிற்குள் ஒரு வேதனை முளைவிட ஆரம்பித்துவிட்டது.

அந்த வாத்தியார் கிட்ட நெருங்கக் குந்தகமாக நின்ற அழகுதான் பையன் களுக்கு இணை பிரியாமல் இருக்கும் உத் வேகத்தைக் கொடுத்தது; தாய்க்கும் தமக்கைக்கும் "அழகுக்கு அழகு செய் யும்" வெறி ஊட்டியது.

இந்த விவரமெல்லாம் புரியாத கல்யா ணத்திற்கு பொழுது ஜாலியாகத்தான் கழிந்தது.

ஆனால் இப்பொழுது இந்தக் கண்ணாடி முன் நின்று பார்க்கும்பொழுது ....

அவனை காலேஜில் சேர்க்க அவன் தகப்பனார் பிரின்ஸிபாலிடம் அழைத்துச் சென்றார். அவன் அவ்வளவாக மார்க் வாங்கவில்லை. பையனைப் பார்த்தார் பிரின்ஸிபால். "பையன் 'பிரைட்' ஆக இருக்கிறான். அட்மிட் செய்துவிடு கிறேன். நன்றாகப் படிக்கச் சொல்லுங்

கள்" என்று ஒரு கணக்கில் பதில் சொல்லி அனுப்பிவிட்டு ஒரு நாழிகை அசந்து உட்கார்ந்திருந்தார்.

அவன் ஹாஸ்டலில் சேர்ந்ததும் அப்படியே. முதலில் மற்ற மாணவர்கள் வெறித்துப் பார்த்தார்கள். போவோர் வருவோர் சற்று நின்று பார்ப்பார்கள். பேசிக்கொண்டே போவோர் பேச்சை நிறுத்துவர். கேட்டுக் கொண்டே போவோர் நிமிர்ந்து பார்ப்பர். இருவருக்கும் பேச்சுத் தடைபடும். அர்த்தம் நிறைந்து பார்வைகள் படரும். முதலில் இரண்டு மூன்று தடவை பார்த்தவர்கள் பார்க்காததுபோல் போவார்கள். சற்று தூரம் சென்று திரும்பிப் பார்ப்பார்கள்.

சென்ற வாரம் விளையாட்டு மைதானத்தில் புதுப் பையன்களைக்கொண்டு 'டீம்'கள் தொகுத்தார் டைரக்டர். கல்யாணத்திற்கு கிரிக்கெட்டில் ஆசை உண்டு. "உன்னால் முடியாதப்பா" என்று அனுதாபத்துடன் ஒதுக்கிவிட்டார். கால் பந்து காப்டன் யோசனை செய்வதற்குள் ஒருவன் சொன்னான், "கல்யாணசுந்தரத்திற்கு பாட்மிண்டன்தான் தேவலை" என்று. மறுநாளே ஒரு பாட் வாங்கினான். அன்றே ஆடவும் செய்தான். அதாவது 'ஸர்வ்' செய்வதுடன் அவன் வேலை முடிந்தது. மற்றவன் "போல்ட்" முழுவதையும் ஆக்கிரமித்து விளையாடிவிட்டு இவனுக்கு சபாஷ் சொன்னான்.

இத்துணை சலுகைக்கும் இவனுக்குக் காரணம் புரியவில்லை.

நேற்று மாலை பிரின்ஸிபால் புதிய மாணவர்களுக்கு வரவேற்பு விருந்து நடத்தினார். புதிய மாணவி மாணவர்கள் கூடியிருந்தனர். மாணவிகளில் ஒருத்தி, மிராண்டா, சென்ற வருஷமே காலேஜில் சேர்ந்து முதல் வகுப்பில் தேறாமல், புதிய மாணவிகளுடன் கலந்து வந்திருந்தாள். கொஞ்சம் வாய்த்துடுக்கு. விஷமமாக வம்பளந்துகொண்டிருந்தாள்.

கல்யாணசுந்தரம் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். ஒவ்வொருவராக விசாரித்துக்கொண்டே பிரின்ஸிபால் கல்யாணத்தினிடம் வந்தார். மிராண்டாவும் பேச்சை நிறுத்தித் திரும்பினாள். பிரின்ஸிபால் கல்யாணத்தின் தோள்களில் கைவைத்து,

"என்ன கல்யாணசுந்தரம். மிராண்டாவைப் பார்க்கிறாயா? நல்ல வேளையாக நீ மிராண்டாவாகப் பிறக்கவில்லை. அப்படி மட்டும் நேர்ந்திருந்தால் இந்தக் காலேஜ் நிர்மூலமாகியிருக்கும்" என்றார். அனைவரும் சிரித்தனர்.

மிராண்டா சிரிக்கவில்லை.

"அவர் பெண்ணாகப் 'பிறக்காதது' ஒன்றுதான் குறை என்றுதானே சொல்கிறார்கள்?" என்றாள்.

அத்துணை மாணவ, மாணவிகளும் வெடிச் சத்தம் கேட்டதுபோல் திடுக்கிட்டனர். மிராண்டா மட்டும் சிரித்தாள்....

இன்று காலை கல்யாணசுந்தரம் ஹாஸ்டலில் சாப்பிட்டுக்கொண்டிருந்தான். ஒரு மாணவன் "விட்" அடித்தான். எல்லோரும் கொல்லெனச் சிரித்தனர். கல்யாணமும் சிரித்தான். கல்யாணம் சிரிப்பதைப் பார்த்த எதிர் வரிசையிலிருந்த இருவர் சிரிப்பதை நிறுத்தி, பக்கத்திலிருந்தவனைக் கையமர்த்திக் காட்டினர். உடன் எங்கும் சிரிப்பு அடங்கியது. கல்யாணத்தின் மனதில் இன்னும் ஹாஸ்யம் குதுகுதுப்பைத் தூண்டி விட்டுக்கொண்டிருந்தது. அவன் இன்னும் சிரித்துக் கொண்டிருந்தான்.

அடுத்த கணமே, எல்லோரும் சிரிப்பு அடங்கித் தன்னையே உற்றுப் பார்ப்பதை



உணர்ந்தான். அவன் சிரிப்பு அசடாக வழியஆரம்பித்தது.கண்களில்நீர்துளித்தது. தலை குனிந்தான். குபீரென எழுந்து கைகழுவிவிட்டு அறைக்கு வந்து, கண்ணாடி முன் நின்றவன், இன்னும் நின்று கொண்டிருக்கிறான்.

கலாசாலைக்குப் போகவேண்டும்! அவன் மனது மாத்துவிட்டது.

காலேஜ் மாணவர்கள் ஒவ்வொருவராக அறைக்கதவைப் பூட்டும் சத்தம் கேட்கிறது. அவர்கள் அவன் அறை வழியாகச் செல்லும்போது அவர்கள் செருப்புச் சத்தம் சற்று அடங்குகிறது. கதவிடுக்கு வழியாகப் பார்க்கிறார்கள் போலும்!

முகத்தைத் துடைக்கும் எண்ணத்துடன் கைக்குட்டையை எடுத்தவன் முகத்தை அழுத்தி மூடிக்கொண்டு பெருமூச்செறிந்தான்.

மறுபடியும் அவன் முகத்தைக் கண்ணாடியில் பார்த்தபொழுது ... கண் கலங்கி....நரம்புகள் புடைத்து....காதுகள் சிவந்து ... சற்று நேரத்திய சிந்தனை பிரமாதக் கோளாறு செய்திருந்தது. சிரிப்பை வரவழைத்துக்கொண்டு கண்ணாடியில் பார்த்தவன் சற்று பிரமித்தே போய்விட்டான்.

பானையில் நிறைந்திருந்த குளிர்ந்த ஜலத்தில் முகத்தைக் கழுவிக்கொண்டான். புது உடுப்புகளை எடுத்து மாட்டிக்கொண்டான். கடைசி முறையாக சீப்பை எடுத்துத் தலையை வாரிக்கொண்டான். எண்ணெயின் நைப்பு காய்ந்து தண்ணீரின் பிசுமட்டும் சேர்ந்து நீல மயிர் விறைப்புடன் சீப்புக்கு வளைந்து கொடுத்தது.

கல்யாணம் காலேஜுக்கு கிளம்பினான். முதல் மணி பாடம் நடந்து கொண்டிருந்தது. இங்கிலீஷ் வகுப்பு. ஹாஸ்டல் மாணவர்கள் எல்லோரும் ஒருமிக்கக் கூடியிருப்பார்கள். மறுபடியும் அவர்கள் கண்களுக்கு "இரை" ஆகவேண்டும்?

அடுத்த மணி, ஸம்ஸ்கிருத வகுப்பு. அதற்குப் போனால் போதும்.

கல்யாணம் லைப்ரரியில் நுழைந்தான். லைப்ரரி குமாஸ்தா ஆகாய விசிறியின் கீழ் அயர்ந்திருந்தார். ஒரு மூலை பெஞ்சியில் மிஸ் ஐராவதம்—ஒரு மாணவி உட்கார்ந்திருந்தாள்.

கல்யாணம் ஏதோ பத்திரிகைகளைப் புரட்டினான். ஒரு ஹாஸ்யத் துணுக்கு அவன் மனதைக் கவர்ந்தது. புன்னகையில் தன்னை மறந்து ஒரு கணம் நின்றான். அடுத்த கணம் மிஸ் ஐராவதத்தைத் திரும்பிப் பார்த்தான். அவள் கண்கள் இவனை விழுங்க வழி பார்த்தன.

அடுத்த கணம் கிராமத்து வீட்டுக் கதவு திறந்தாற்போல் சத்தம் கேட்டது. இருவரும் திரும்பிப் பார்த்தனர். லைப்ரரி குமாஸ்தா கொட்டாவி விட்டிருக்கிறார். ஐராவதம் தளுக்காகச் சிரித்தாள். கல்யாணமும் வாய்விட்டுச் சிரித்திருக்கலாம். அத்துடன் போயிருக்கும். அவன் சிரிக்காமல் அவள் பார்வைக்குத் தன்னை இலக்காக்கிக்கொண்டிருந்தான்.

லைப்ரரி குமாஸ்தா கூப்பிட்டார்: "என்ன அப்பா! ஆண் பிள்ளைகளிடம் பேசக்கூட மாட்டேன் என்கிறாய்? இங்கே சொருசு பண்ணுகிறாய்; இது லைப்ரரியப்பா மறந்துவிடாதே."

அவன் இதுவரை மறக்கவில்லை. 'தானா ஆண் பிள்ளைகளிடம் பேசவில்லை?'

மணி அடித்தது. முதல் மணி முடிந்துவிட்டது.

மிஸ் ஐராவதம் மார்பிலே அழுத்திய புத்தகங்களுடன் கிளம்பினாள். கல்யாணத்தினிடம் கொஞ்சம் புத்தகங்கள் அதிகம்; கைகொள்ளவில்லை. அவனும் அவைகளை மார்பிலே அழுத்திக்கொண்டு கிளம்பினான்.

வகுப்பு அறைகளிலிருந்து கோலாகலமாக வெளிவரும் மாணவர்கள் இவ்விருவருடைய பவனியைக் கவனிக்க நேர்ந்தது. அவர்கள் நோக்கு தன்னிடம் தீவிரமாகப் பதிவதை அவன் உணர்ந்தான்.

அவன் திணறினான். 'மிஸ் ஐராவதத்துடன் தன்னை ஒப்பிட்டுப் பார்க்கிறார்களோ?' பின் தங்கினான்.

மிஸ் ஐராவதம் முன்னே சென்றாள். அவனை ஒருவரும் கவனிக்கவில்லை.

சில நிமிஷங்கள் தாமதமாக ஸம்ஸ்கிருத வகுப்பை அடைந்தான்.

இயற்கைக்கு விரோதமாக ஸம்ஸ்கிருத வகுப்பு நிறைந்திருந்தது. ஆசிரியர்க்கு எதிர்த்த பெஞ்சுகள் நிரம்பிவிட்டன. வலது புறத்து பெஞ்சுகளில் மாணவிகள் உட்கார்ந்திருந்தனர். இடதுபுறத்து பெஞ்சில் முன்னடியில் ஒரே இடம் காலி. அதில் உட்கார்ந்து கொண்டான். வியர்த்த முகத்தைத் துடைத்துக்கொண்டான்.

கண்ணாடிபோல் இழைக்கப்பட்ட மேஜையில் முகம் தெரிந்தது. அந்த முகம் மேஜையில் மிகச் சிறியதாக பிரதிபிம்பித்திருந்தது. ஆம். கன்னமும் கண்ணாடி ஆகிவிட்டிருந்தது.

ஒருகணம் மெய் சிலிர்த்தான். பிடிவாதமாகப் பாடத்தை கவனிக்க ஆரம்பித்தான்.

ஸம்ஸ்கிருத ஆசிரியர் மெத்தப் படித்தவர். மற்ற இலக்கியங்களிலும் பரிசயம் படைத்தவர். ஒரு வகுப்புக்கு ஆயிரம் மேற்கோள்கள் எடுத்துவிடுவார். காளிதாஸனும் பவபூதியும் கரதலப்பாடம்.

"காதம்பரி தன் காதலனைப் பார்க்கிறாள். அழகை அழகு எதிர்த்து நின்றது. . ." என்று நீட்டி முழக்கிச்சொல்லிவிட்டு வகுப்பை ஒருமுறை அளாவிப் பார்த்தார். மாணவர்கள் மேற்கோளுக்குத் தயாராகிவிட்டனர்.

"மாணவர்களே! உங்களுக்கு ஒரு விஷயம் சொல்ல விரும்புகிறேன்.

அழகைப்பற்றி ஆயிரம் இலக்கியங்கள் பேசியிருந்தாலும் ஸம்ஸ்கிருத இலக்கியம் அதன் ரகசியத்தை ஒருவாறு உணர்ந்துவிட்டதென்றே சொல்லுவேன்.

இதுதான் அந்த ரகசியம். அழகு ஒரு அனுபவ வஸ்து. நாம் அனுபவிக்கும் வஸ்துக்களை எல்லாம் நமது புலன்களுக்கு இரையாக்குகின்றோம். அந்த வஸ்துக்களை உருவழித்துவிடுகிறோம். அழகை அனுபவிக்கும் கண்கள் உரு வழித்துவிடுவதில்லை. கிட்டக்கூட நெருங்குவதில்லை. அப்பால்..ஆங்கே, கைகளுக்கு எட்டாத விட்டத்தில். . . வாசனை நுகரமுடியாத வெளியில்...செவிகள் கேட்கமுடியாத அந்தரத்தில் கூட.... வைத்து அழகைப் பார்க்கிறோம். அழகை ஒதுக்கி உன்னதமாக உயர்த்திப்பார்த்து அனுபவிக்கிறோம். ஆனால் அழகுள்ள வஸ்து இப்படி தனித்து ஒதுக்கப்பட்டுக் கொண்டே வந்தால் அதற்கேற்படும் தனிமையில் அது நசித்துவிட வேண்டியிருக்கும். இங்குதான் மாயை உதவுகிறது. கண்களாலன்றி அனுபவிக்க முடியாத அழகை மற்றப் புலன்களுக்கு இரையாக்குகின்றோம். அழகுள்ள வஸ்து தனிமையினின்றும் விடுபட்டுவிடுகிறது.

இதை காளிதாஸன் வெகு அழகாகச் சொல்கிறான் சாகுந்தலத்தில். துஷ்யந்தன் சகுந்தலையைக் காண்கிறான்; என்ன சொல்கிறான்? "முகரப்படாத மலர் என்கிறான். விரல்படாத கொடி" என்கிறான். ஆனால் அவன் விரும்புவதென்ன? அந்த மலரை முகர விழைகிறான். அந்தக் கொடியை வளைத்தணைத்து கொள்ளத் துடிக்கிறான். இதுதான் இலக்கியத்தில் நாடகாங்கதம். **(Dramatic Irony)**

ஆனால் அப்படி அழகுள்ள வஸ்துவை மற்றப் புலன்களுக்கு இரையாக்க முடியாவிட்டால் அதன் தனிமை சகிக்கமுடியாதது. இதுதான் காதம்பரியின் தனிமை..."

கல்யாணம் ஆசிரியரை கவனித்துக்கொண்டிருந்தான். மற்ற மாணவர்கள் கல்யாணத்தையே கவனித்துக்கொண்டிருந்தனர்.

"அழகு..அனுபவ வஸ்து..தனிமை—"

ஆசிரியரும் தன் நிலைக்கு அப்பொழுது தான் வந்தார். மாணவர்கள் தன்னைக் கவனிக்காமல்...

"என்ன மாணவர்களே! நான் சொல்லும் உண்மைக்கு சான்று கிடைத்துவிட்டாற் போலிருக்கிறது. என்ன கல்யாணசுந்தரம்.."

கல்யாணம் அதிர்ச்சியுற்று விழித்தான். மிஸ் ஐராவதம் களுக்கென்று சிரித்தாள். கல்யாணம் அவளை வெறித்துப் பார்த்தான். மறுகணம் மடாரென்று பக்கத்தில் சாய்ந்து விழுந்துவிட்டான்.

• • •

அவன் விழித்துக்கொண்ட பொழுது ஐந்தாறு மாணவர்கள் அவனை இறுக அணைத்துப் பிடித்துக்கொண்டிருந்தனர்.

ஆசிரியர் சொல்லிக்கொண்டிருந்தார். "உதட்டின் மேல் புறம் இடிந்து ஓட்டையாகிவிட்டதே! மூக்குச் சிதலாகவா பெயர்ந்திருக்கவேணும். என்ன கோரம்?"

ஹூம்... என்று முனகினான். தன்னைப் பிடித்துக்கொண்டிருக்கும் கைகளை இறுகப்பிடித்துக்கொண்டான். பெருமூச்சுவிட்டான்.

• • •

சற்று நேரம் கழித்து மிராண்டா ஒரு தோழியிடம் சொல்லிக் கொண்டிருந்தாள், "என்னவோ ஒரு கோட்டையைப் பிடித்துவிட்டாற்போலே நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டதேடி அது!!"






மதுரை நகர மக்களை ஆச்சரிய வெள்ளத்தில் ஆழ்த்திவிட்டது அந்தச் செய்தி! பன்னிரண்டு வயதுப் பச்சிளம் பாலகன் ஒருவன் 'மகா பண்டிதன்' என்று பாண்டிய மன்னன் போற்றிவரும் ஒருவரிடம், அன்று வாதுக்குச் செல்கிறான்! அவர்கள் ஆச்சரியமுற்றது நியாயந்தானே! அதன் மிகுதியைத் தங்களிடையே ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டனர் மக்கள்.

அங்கங்கே ஐந்தாறு பேர்களாகக் கூடிக் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். கைக்குள் அடங்கும் சிறு கல் மலைப் பாறையைத் தகர்க்க முற்படுவதையெண்ணி, ஏளனம் செய்தார்கள். இவனால் இது கூடுமோ என்று உருவு ஒன்றை மட்டும் கண்டு எள்ளி நகையாடினார்கள். அது அவர்கள் தப்பில்லை! ஆனால், ஒரு புறம் அவர்களது ஏளனத்திற்கு இலக்கான அதே செய்தி, பேராச்சரியத்திற்கு காரணமாக அமைந்ததுதான் அங்கே விசேஷம்!

...சாலையிலும் வாயிற்புறத்திலும் பெருங்கூட்டம் கூடியிருந்தோரின் பேச்சொலி பேரொலியாக மாறிவிட்டது இப்போது!

ஃ ஃ ஃ

அதே சமயத்தில் உப்பரிகையில் சபைக்கு வர ஆயத்தமாகிக்கொண்டிருந்த பாண்டிய மன்னனும் பாண்டிமா தேவியும் சம்பாஷித்துக்கொண்டார்கள். ஆம்! வாதுக்கு வந்த அந்தச் சிறுவனைப் பற்றியும் அன்னவனின் அசாதாரணத் துணிச்சலையும்பற்றியே சுற்றிச்சென்றது அவர்கள் பேச்சு!

"நான் சொல்கிறேனென்று பார் தேவி! இந்தச் சுண்டைக்காய் நசுங்கத்தான் போகிறது. நிலம் நடுங்க வரும் தேரை, சிறு சுண்டைக்காய் தடுத்து நிறுத்தியதாக நீ கேள்விப்பட்டிருக்கிறாயா?—" இது பாண்டிய மன்னன்.

"நாதா! கடுகு சிறுத்தாலும் காரம் போகாதென்பார்கள். வயதில் இளையவனானாலும் அறிவில் சிறந்து விளங்கலாமல்லவா? வான முட்டி வளர்ந்த பனைமரத்தைக் காலைப் பனித்துளி தன்னுள் அடக்கிக் காட்டவில்லையா? இளமையிலேயே முதறிவு பெற்றிருந்தால்..."

அரசன் 'கடகட' வெனச் சிரித்தான். அரசியின் அறியாமைக்கு அவன் இரங்கியதை, அகல விரித்துச் சுட்டிக்காட்டிய அவன் கை புலப்படுத்தியது.

"சரி! நீ சொல்வதுபோலப் பச்சிளம் பாலகன் பேரறிவு பெற்றால் வயதில் பெரியவரான வித்வஜன கோலாகலருக்கு எவ்வளவு அறிவு இருக்காது? விரல் உரலாக மாறினால், உரல் அதைவிடப் பெரியதாகவல்லவோ ஆகும்? இது உறுதிதான் தேவி! யமுனைத் துறைவன் தோற்கவே போகிறான்."

"நான் யமுனைத் துறைவன்தான் வெல்வான் என்கிறேன். அவ்வாறு அவன் வென்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்?'

'அது சரி! கோலாகலர் தோற்பார் என்று கூறுகிறாயே? அவர் வென்றுவிட்டால், நீ என்ன செய்வாய்?" என்று எதிர்க் கேள்வி விடுத்தான் மன்னன்.

"நான் தங்கள் தாசியின் தாதியாகி அவளிட்ட வேலைகளைச் செய்கிறேன். நீங்கள்?"

துறைவன் வென்றுவிட்டால், "என் ராஜ்யத்தில் பாதியைக் கூசாது கொடுத்துவிடுவேன்."

"நீங்கள்தான் தோற்கப் போகிறீர்கள்!" என்றாள் அரசி, திடமான குரலில்.

"அதைத்தான் பார்ப்போமே!" எனக் கூறிக்கொண்டே எழுந்தான், பாண்டிய மன்னன்.

அதே சமயம் வெளியிலிருந்து தாரை தப்பட்டைகளின் 'தடதட' ஒலி இருவர் செவிகளிலும் மோதியது. அதைத் தொடர்ந்து சங்கு, கொம்பு, எக்காளங்களின் ஓசையும் கலந்து வந்தன. ஒலி கேட்டதும் பாண்டிய மன்னன் நினைவு வந்தவனாய், "தேவி! சபைக்குப் பல்லக்கு வந்துவிட்டது, யமுனைத் துறைவனை அழைத்துக்கொண்டு. வா! சபைக்குப் போகலாம்." பாண்டிமாதேவியைக் கரம் பற்றியழைத்தான் மன்னர் மன்னன்.

ஃ ஃ ஃ

கத்தி ஏந்திய காவலர்கள் முன் செல்ல, அரசியும், அரசனும் சபைக்குப் புறப்பட்டனர்.

பாஷ்யகாசாரியர் என்னும் ஆசிரியரிடம் கல்வி பயில வந்த யமுனைத்துறைவன், அரசவைப்பண்டிதருடன் வாதுக்கு நிற்கும்படிச் செய்தது ஒரு நிகழ்ச்சி!

வித்வஜன கோலாகலனுக்குத் தன்னைக் குறித்துக் கடலத்தனை கர்வம் உண்டு. மேலும் அதை உரமிட்டு வளர்ப்பதைப் போல், பாண்டிய மன்னனின் ஆதரவும் அவனுக்குக் கிடைத்தது. கேட்க வேண்டுமா? கோலாகலனுக்கு நிலைகொள்ளவில்லை. 'நானே பண்டிதன்' என்று பறைசாற்றிக்கொண்டு மற்ற அறிவிற் சிறந்த—...க்கும் மேற்பட்ட—பண்டிதமணிகளை அடக்கினான். போதாததற்கு அவர்களிடமிருந்து கப்பமும் வாங்கி வந்தான். இது மட்டுமா? ஏடும் எழுத்தாணியும் எடுத்தவர்களிடம்கூடக் கப்பம் வாங்கத் தொடங்கிவிட்டான் அவன். சொற்ப அறிவுத் துணையோடு பாண்டியனின் சபையில் வறட்டுக் கௌரவத்தோடிருந்த காரணத்தால், பண்டிதர்கள் ஒன்றும் கூறாமல் வாயில்லாப் பூச்சிகளாக நடமாடினர்; உயிரற்ற பதுமைகளாக உலாவினர்.

அப்போதுதான் யமுனைத்துறைவன் என்ற அந்தச்சிறுவன் பாஷ்யகாசாரியாரிடம் கற்க வந்தான். அவன் வந்து மாதங்கள் மூன்றே கழிந்திருந்தன. அந்தக் குறுகிய காலத்தில் வித்வஜன கோலாகலனைப்பற்றி உடன் கற்கும் சிஷ்யர்கள்மூலம் அறிந்திருந்தான் துறைவன். முழு விவரம் அறிந்துகொள்ளாவிட்டாலும், கோலாகலன் கர்வம் பிடித்தவன் என்று மட்டும் அறிந்துகொண்டான் அச்சிறுவன்.

நகரின் வடபுறத்தில், ஒரே ஒரு லட்சியத்தைமனத்தில் கொண்டு செயலாற்றத் தொடங்கிய லட்சிய வாதியேபோல வையைப் பொருநதி பாய்ந்துசென்று கொண்டிருந்தது. அதன் தென் கரையில் அமைந்த சோலையொன்றில்தான் பாஷ்யகாசாரியாரின் குருகுலம். எண்ணி ஏழு பேர்களே அவரிடம் கற்று வந்தனர். யமுனைத்துறைவனும் அவர்களில் ஒருவன்.

வந்த சில நாட்களிலேயே பாஷ்யகாசாரியாரின் அபிமானத்தைப் பெற்றுவிட்டான் துறைவன். விடிகாலைப் போதில் குடிசையிலிருந்து வையைக்கு நீராடச் செல்லும் அவர், துறைவனையும் தன்னுடன் அழைத்துச் செல்லத் தவற மாட்டார். அப்போது அதிகாலைப் போதை வருணிக்கும் மகாகவி ஒருவரின் சுலோகத்தை எடுத்துச்சொல்லித் துறைவனுக்கு வியாக்கியானம் செய்வார். இளவயதுப் பையனல்லவா? வியாக்கியான பாவம் தவறாமல் புரிந்து கொள்வான். இப்படி எத்தனை எத்தனையோ இன்பக் காலைகளை அனுபவித்திருக்கிறார்கள் இருவரும்.

சகமாணவர்கள் பாஷ்யகாசாரியர் துறைவனிடத்தில் காட்டிய அபிமானத்தின்மீது பொறாமை கொண்டனர். ஆனால், அவரோ துறைவனை ஆர்வத்தோடு அழைத்து, விசேஷ கவனம் காட்டிக் கற்பித்ததுகூட இல்லை! ஆனால், அவன் மாத்திரம் மற்ற மாணவர்களைக் காட்டிலும் அறிவு நிலையில் மேம்பட்டே காணப்பட்டான்.

ஒரு நாள்! ஆசிரியரும் மாணவர்களும் திருமாலிருஞ்சோலைக்குச்சென்றிருந்தனர். கிழக்கு வெளுக்குமுன் புறப்பட்டுவிட்ட அவர், யமுனைத் துறைவனைக் குடிசைக்குக் காவலாயிருக்கச் சொன்னார். மாணவர்களும் ஆசிரியரும் புறப்பட்டுச்சென்று, ஆறு நாழிகைப் பொழுதாகிவிட்டது. கீழ்வானத்தைச் செந்நிறமாக்கி வெளிக் கிளம்பிய ஆதவன், சுடுகதிரைப் படிப்படியாக மண்ணில் பாய்ச்சிக்கொண்டிருந்தான்.

குடிசையின் பின்புறம் நெடுநெடுவென்று வானளாவி வளர்ந்திருந்தது

**ஓர் அரசமரம்** உயரத்தைப்போலவே கப்பும் கிளைகளுமாகப் பக்க வாட்டிலும் படர்ந்து வளர்ந்திருந்தது அது. மண்ணைப் பொத்துக்கொண்டு வெளி வந்திருந்த ஓர் வேர் முண்டில் தலைவைத்துப் படுத்தவாறு வையை நதியின் நீரோட்டத்தையும், இளங்காற்றால்சலசலத்தஅரச இலைகளின் இன்னோசையையும் அனுபவித்துக் கொண்டிருந்தான் துறைவன். நேரம் போவதே தெரியாமல் மோன நிலையில் மூழ்கிவிட்ட அவனை, அரசஞ் சருகுகளின் 'சரசர' ஒலி கலைத்தது. ஓசை வந்த திசை நோக்கினான். மூவர் வந்துகொண்டிருந்தனர்.

ஒருவன் அரசாங்க ஆடை மட்டும் அணிந்துகொண்டிருந்தான். மற்ற இருவரும் அத்துடன் தலைக்கு இரு ஈட்டிகளையும் கையில் வைத்திருந்தனர். சாவதானமாக எழுந்து உட்கார்ந்துகொண்டு, வருவோரை உற்றுப் பார்த்தான் சிறுவன்.

அவர்கள் நெருங்கிவிட்டார்கள்!

ஈட்டி வைத்திருந்த இருவரும் சேவகர்கள் என்பதை அறிந்துகொண்டான் சிறுவன். மற்றவன் அவர்களுக்கு மேற்பட்ட அதிகாரியாயிருக்க வேண்டும் என்றும் தீர்மானித்துக்கொண்டான் தனக்குள்ளே.

“யார் நீங்கள்? என்ன வேண்டும்?”

கம்பீரமாக வெளிவந்த சிறுவனின் கேள்வியால் வந்த மூவரும் திகைத்தே விட்டார்கள். சேவகர்களின் தலைவனாகக் காணப்பட்டவன் பதில் சொன்னான்:

“என்ன சிறுவனே! இவ்வளவு துடுக்காகப் பேசுகிறாயே! யாருடன் பேசுகிறாய் என்பதை அறிந்துகொண்டு, மேலே பேசு! நான் அரசாங்கத்தைச் சேர்ந்த தண்டற்காரன். எங்கள் பாண்டிய மன்னரின் சபையில் இருந்து அழகு செய்யும் மகாகவி வித்வஜன கோலாகலருக்கு இந்த ஆசிரியர் செலுத்த வேண்டிய கப்பத்தை வாங்கிச்செல்ல வந்திருக்கிறோம். நினைவுடன் பேசு இனியேனும்.”

சிறுவனின் வெட்டென்ற பேச்சு இதனால் அடங்கிவிடுமென்று எதிர்பார்த்த தண்டற்காரன் ஏமாந்தான். யமுனைத் துறைவனின் வீராவேசம்தான் இருமடங்கு அதிகமாகியது.

“ஓஹோ! தண்டற்காரரா நீர்? கப்பம் வாங்கவா வந்திருக்கிறீர்கள்? எதற்குக் கப்பம் கட்ட வேண்டும் என்று ஆசிரியர் கேட்பதாக உங்கள் மகாபண்டிதரிடம் போய்ச் சொல்லும். அறிவாளி அவரானால், அறிவு அவரோடுதான்! அறிவை அதிகாரமாக்கி, மற்ற கல்விமான்களை அடக்க நினைக்கக்கூடாது! இதையும் அவரிடம் கூறும்...”

திகைத்து நின்றேவிட்டான்! தண்டற்காரன் அசைந்தே போனான்!

“என்ன ஐயா! அதோ நிற்கும் அரசமரத்திற்குப் போட்டியாக நீரும் ஒரு மரமாகி விட்டீரே! நேரம் அதிகம் ஆகிவிட்டால், வந்தவழி மறந்தாலும் மறந்துவிடும்; அதோடு உங்கள் கும்பியும் கொதிக்கத் தொடங்கிவிடும்! சென்று வருகிறீர்களா?”

சிறுவனின் வார்த்தைகள் தண்டற்காரனைச் சுருக்கெனத் தைத்தன. கோபவேகத்தால் அவன் முகம் 'ஜிவ்'வெனச் சிவந்து விட்டது.

“சிறுவனே! 'சகல பண்டிதர்களுக்கும் சிரேஷ்டர் இவர்' என்று எங்கள் பாண்டிய மன்னர் போற்றி வரும் அறிவாளியை நீ அவமதிக்கிறாயே! அரச கோபத்திற்கு நீ ஆளாக நேரும். மறுபடியும் கூறுகிறேன் சிறுவா! நன்றாக, மெதுவாக, நினைவுடன் பேசு. உபாத்தியாயர் மூன்று தடவை செலுத்த வேண்டிய கப்பத்தைப் பெற்றுப் போக நாங்கள் வந்திருக்கிறோம்.”

“தண்டற்காரரே! நீரல்லவோ நினைவுடன் பேச வேண்டும்? 'கப்பம் இல்லை' என்பதை நினைவோடு போய்ச்சொல்லும். அதோடு வந்த பாதையையும் நினைவில் வைத்துக்கொள்ளும். என்ன தண்டற்காரரே! சொல்வதெல்லாம் புரிகிறதா?”

ஆரம்பத்தில் காணப்பட்ட அதே வேகம், பேச்சின் அழுத்தம் எல்லாம் அப்படியே இருந்தன துறைவனின் பேச்சில். சிறுவனுடன் வாய் கொடுத்து மீள்வது நம்மால் இயலாது என்பதை நன்றாகப் புரிந்துகொண்டான் தண்டற்காரன். துறைவனுக்கேற்றவாறு பதில் கூற முடியாத ஆத்திரம் அவன் நடையில் திரும்பியது. நறநறவென்று பல்லைக் கடித்துப் புருவத்தை நெறித்தான் அவன்.

“வாருங்கள் போவோம். துள்ளுகின்ற இந்தச் சுண்டைக்காயை அந்தக் கிழட்டுப் பிராமணனோடு சேர்த்து வைத்து நசுக்கிவிடுவோம்.”



அங்கிருந்து பத்தடி எடுத்து வைத்த பின்னர் தண்டற்காரர் வாயினின்றும் உதிர்ந்தவை இவை. அதற்குப் பதிலாக யமுனைத் துறைவன் அம்மூவரையும் சுட்டி, ஏளனமாகச் சிரித்தது கேட்டது!

தலை வைத்துப் படுத்திருந்த வேர் முண்டுக்கருகில் விரித்து வைக்கப்பட்டிருந்த சுவடிக்கட்டை எடுத்து வைத்துக் கொண்டான் துறைவன்.

நீல நெடுவானைப் பகல் முழுதும் அளந்த களைப்பின் காரணமாகக் கதிரவன் தன் கிரணங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சுருக்கிக் கொண்டிருந்தான். இரவுக்கான உணவு வகைகளைத் தயாரித்து முடித்துவிட்டு, மாலையில் திரும்பி விடுவதாகக் கூறிச் சென்ற குருவின் வரவை எதிர்நோக்கியவாறிருந்தான் துறைவன்.

இரவே பாஷ்யகாசாரியர் தமது மாணவர்களுடன் திரும்பிவந்து உணவு கொண்டு உறங்கினார்.

பஞ்ச பஞ்ச உஷத் காலம். பட்சி ஜாலங்கள் இன்னொலி செய்து, குடிசையிலுள்ளோரைத் துயில் எழுப்பியது. துறைவனும் உபாத்தியாயரும் ஆற்றுப் படுகை நோக்கிப் புறப்பட்டார்கள். அமைதியாகக் கொஞ்ச தூரம் இருவரும் சென்றார்கள்.

முன்தினம் தண்டற்காரன் வந்தது, தனக்கும் அவனுக்கும் வாக்கு வாதம் நடந்தது ஆகிய விவரங்களைத் துறைவன் இரவு கூறவில்லை. கூறினால் உபாத்தியாயர் தூக்கங்கொள்ள மாட்டார் என்பதைத் துறைவன் அறிவான். அதனால் அதிகாலையில் கூறவே நிச்சயித்திருந்தான்.

“ஸ்வாமி! நேற்று நடந்த ஒன்றை இரவே கூறாமல் இப்பொழுது கூறப் போகிறேன். தவறுதான். பொறுக்க வேண்டும்.”

“என்ன துறைவா? தவறா? நேற்று என்ன நடந்தது?” என்றார் பாஷ்யகாசாரியர், பதற்றத்துடன்.

“ஸ்வாமி! தாங்கள் மாலிருஞ்சோலைக்குச் சென்று ஆறு நாழிகை கழித்து, மூவர் நம் குடிசைக்கு வந்தார்கள். இருவர் சேவகர்கள்; ஒருவர் தண்டற்காரர்.”

“யார்? அரசர் அனுப்பியதாகச் சொன்னார்களா? என்ன கேட்டார்கள் அவர்கள்?”

“வித்வ ஜன கோலாகலர் என்ற பண்டிதர் அரச சபையில் இருக்கிறாராம். அவர் ஏடும் எழுத்தாணியும் எடுத்தவர்களிடத்தில்கூடக் கப்பம் வாங்குகிறாராம். தாங்கள் மூன்று தடவைகளாகக் கப்பம் செலுத்தவில்லையாதலால், உடனே செலுத்த வேண்டும் என்று படபடத்தார்கள்...”

“அதற்கு நீ என்ன சொன்னாய் துறைவா?” பாஷ்யகாசாரியாரின் குரலில் இருந்த கலவரம் முகத்திலும் பரவியது.

“கப்பம் கட்ட முடியாது; அவ்வாறு செய்வது நியாயமற்றது என்று கூறி, அவர்களை அனுப்பி விட்டேன் ஸ்வாமி! அவ்வாறு நான் செய்தது தவறா?”

“ஆ! அப்படியா சொல்லி அனுப்பிவிட்டாய்? வேங்கையின் கோபத்திற்காளானதைப்போல இந்தக் கோலாகலன் வாயில் நாம் விழ நேர்ந்து விட்டதே! அவன் மகா

அலைபவனாயிற்றே அவன். என்ன நேருமோ தெரியவில்லையே! . . ."

'துறைவனுக்குத் தான் செய்தது தவறோ' என்று உள்ளத்தில் அடித்துக்கொண்டது. சற்று நேரம் இருவரும் மௌனமாக நடந்தனர். ஆற்றுப்படுகை நெருங்கி விட்டது. நீராட ஆயத்தம் செய்தார்கள் இருவரும்.

நீராடிவிட்டு இருவரும் புறப்பட்டார்கள். வழக்கம்போல நடந்து வருகையில், சுலோகங்களைக் கூறி வியாக்கியானம் செய்யும் பாஷ்யகாசாரியர், மௌனமாக நடந்தார். வழக்கமான நிலையில் அவர் மனம் இல்லை. துறைவன் கூறிய செய்தியால் அது வெகுவாகக் கலங்கிப் போய்விட்டது.

துறைவன் மெதுவாகச் சம்பாஷணையைத் துவக்கினான்:

"ஸ்வாமி! இதனால் பெரிதாக ஏதேனும் நேருமோ?"

"ஆமாம் துறைவா! [illegible]ப்பம் கட்ட மறுப்[illegible]ர்களைத் தன்னோடு [illegible]துக்கழைத்து, [illegible]துக்குப் பொருந்தா[illegible] கேள்விகளைக் கேட்டு, விதண்டா வாதம் செய்வான் அந்தக் கோலாகலன். அப்படி ஏதேனும் நேர்ந்தால், அவமானமாகுமே என்று பார்க்கிறேன் துறைவா!"

இதைக் கேட்ட துறைவன் அக்கணமே துணிவுகொண்டு பேசத் தொடங்கிவிட்டான்: "அப்படியா ஸ்வாமி! நல்லதாயிற்று. அப்படி அவன் வாதுக்கழைத்தானானால், தங்களுக்குப் பதிலாக நான் வாது செய்வேன் என்று கூறி விடுங்கள். பிறகு நான் வாதம் செய்துகொள்கிறேன். கிருபை கூர்ந்து தாங்கள் அருள் செய்ய வேண்டும்."

பாஷ்யகாசாரியர் வறட்சியான சிரிப்பொன்றைத்தான் இதற்குப் பதிலாகத் தந்தார்! ஆனால், துறைவன் தொடர்ந்து கேட்டான்:

"ஸ்வாமி! என்னால் எப்படி இயலும் என்றுதானே சந்தேகங் கொள்கிறீர்கள். . ?" ஏக்கத்தால் அவன் குரல் உடைந்து வெளிப்பட்டது.

"ஆமாம் துறைவா! கட்டை விரல் அளவுள்ள சிறு தேரை, பெரும்நாகப்பாம்பை மோதுவதைப் போலத்தான் இருக்கிறது உன் செயலும்..."

"இல்லை ஸ்வாமி! தாங்கள் அருள் செய்து அனுமதி தாருங்கள்! கோலாகலன் கர்வத்தை அடக்கி விடுகிறேன். தங்களுடைய பூரண கடாட்சம் இருக்கும் வரை வெற்றி என் புறம்தான் ஸ்வாமி!"

பாஷ்யகாசாரியருக்கு நம்பிக்கையோ...



"ஊம்...துள்ளுகின்ற இளங் கன்றின் வேகத்துடன்தான் நீ பேசுகிறாய். என்ன ஆகுமோ? சரி! உன் வேகத்தையும் நான் குறைக்கவில்லை. அப்படி அவன் வாதுக் கழைத்தால் போ."

"ஸ்வாமி! தாங்கள் ஆசீர்வதியுங்கள். அதன் பலத்தால் நான் உறுதியாக வெற்றி காண்..." துறைவன் வார்த்தையை முடிக்கவில்லை. அதற்குள் பாஷ்யகாசாரியாரின் குரல் இடைமறித்தது.

"துறைவா! அதென்ன அங்கே! குடிசை வாசலில் யார் யாரோ காத்திருக்கிறார்களே! அரசர்தான் அனுப்பியிருப்பாரோ? வா வா சீக்கிரம் போகலாம்." நடையை துரிதப்படுத்தி, இருவரும் குடிசையை அடைந்தார்கள். அங்கே முதல் நாள் வந்த தண்டற்காரனும் ஐந்து சேவகர்களும் நின்றுகொண்டிருப்பதைக் கண்டார்கள்.

தண்டற்காரனைக் கண்டதும் துறைவன் அடையாளம் கண்டுவிட்டான். ஆசிரியரிடம் மெதுவாகக் கூறினான்: "ஸ்வாமி! நேற்று வந்த தண்டற்காரன் இவனேதான்!"

"இவன்தானா? இவனும் இந்தச் சேவகர்களும் வந்தால், கோலாகலன் வாதுக்கு அழைக்க ஏற்பாடு செய்துவிட்டான் என்று அர்த்தம்!"

பாஷ்யகாசாரியர் தண்டற்காரனை வெறித்து நோக்கினார். "ஏனப்பா, என்ன செய்கிறாய்?" என்ற கேள்வி ஒன்றை உதிர்...

"என்ன செய்தியா? மகா பண்டிதர் வித்வ ஜன கோலாகலர் தங்களை வாதுக்கு அழைக்கிறார். அழைக்கும் காரணம் தங்களுக்குத் தெரியுமல்லவா?" என்றான்.

இதற்குப் பாஷ்யகாசாரியார் பதில் கூறும்வரையில் காத்திருக்கவில்லை துறைவன். தண்டற்காரனின் முகத்திலடித்தாற்போல விடையளித்தான் அவன்.

"தண்டற்காரரே! உமது வித்வ ஜன கோலாகலரை வாது செய்ய இங்கே அழைத்து வாரும். எங்கள் உபாத்தியாயர் அங்கெல்லாம் வரமாட்டார். அதோடு வாதில் தோற்பதற்குத் தான் தயாராயிருக்கிறாரா என்பதையும் நன்றாகத் தெரிந்துகொண்டு, அவரை இங்கு வரச் சொல்லும். என்ன! சொல்வீரா? . . . . இல்லையென்றால் நான்தான் அவருடன் வாதிட வருவேன். அரசவைக்கு வருவதற்குரிய மரியாதைகளோடு வந்து அழைத்துச் செல்லும்."

வெட்டு ஒன்று துண்டு இரண்டாக வந்த வார்த்தைகளின் வேகத்தால், தண்டற்காரன் வெலவெலத்துப் போனான். பதிலொன்றும் கூற இயலாமல் சேவக பரிஜனம் புடை சூழத் திரும்பிச்சென்றான் அவன்!

செய்தி நாடெங்கும் பரவியதும் மக்கள் அடைந்த ஆச்சரியத்திற்கு அளவேயில்லை. அன்று மாலை அரசனது பரிவாரம் சென்று, பாஷ்யகாசாரியரையும் யமுனைத்துறைவனையும் பல்லக்கில் அமர்த்தி, வீதிவலம் வந்து, சபைக்கு அழைத்துச் சென்றது. அப்போதுதான் அரசனும் அரசியும் தங்களுக்கு சிறுவனின் வெற்றியைக் குறித்து வாக்குவாதம் செய்துகொண்டார்கள்.

* * *

மழைக்காலத்தில் நிரம்பி வழியும் ஏரி நீர் போலப் பாண்டியன் சபையில் மக்கள் நிரம்பி வழிந்தனர். அத்தனை பேர் கண்களும் அரியணையின் எதிரில் சற்றுத் தூரத்தில் அமைக்கப்பட்டிருந்த மேடையிலேயே நிலைத்திருந்தது. ஆம்! அந்த மேடையில் யமுனைத்துறைவன் அமர்ந்திருந்தான். அரசன் வருகையைச் சபை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருந்தது. மன்னன் வந்ததும் வாதம் துவங்கிவிடும்.

நேரம் நகர்ந்துகொண்டிருந்தது.

திடீரென்று சபையில் ஆரவாரம் அடங்கிற்று. காதைக் கிழிக்கும் பேரொலியுடன் மன்னர் வருகையை அறிவித்துக் கட்டியங்கூறி நிறுத்தினான் கட்டியக்காரன். அரசன் தேவியுடன் சிம்மாசனத்திலமர்ந்தான்.

மன்னனின் வலப்புறத்தில் மந்திரிகள் அமர்ந்திருந்தனர். இடப்புறத்தில் படைத்தலைவர்கள். மந்திரிகளுக்கப்பால் இரு தனியான ஆசனங்களில் கோலாகலனும் பாஷ்யகாசாரியரும் அமர்ந்திருந்தனர்.

மன்னன் 'வாதம் தொடங்கலாம்' என்பதற்கடையாளமாகத் தலையை அசைத்தான். வித்வ ஜன கோலாகலனையும் யமுனைத்துறைவனையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டிருந்தனர் கூடியிருந்தோர்.

கோலாகலன் வல்லமையும் மிகுந்த

"சிறுவனே! உனக்கு அரிச்சுவடி தெரியுமா? உனது பெயரைப் பிழையில்லாமல் எழுதுவாயா? எங்கே, உன் பெயரை எழுதிச் சபையோருக்குக் காட்டு."

ஆரம்பத்திலேயேகோலாகலனின்வார்த்தைகளில் சொட்டும் அலட்சியத்தையும், உருவத்தை வைத்து மதிப்பிடும் அவனது தன்மையையும் துறைவன் உணர்ந்து கொண்டான். சுவரில் அடித்த பந்து திரும்ப வருவதுபோலச் சரமாரியாகப் பதிலளித்தான் அவன்.

"கோலாகலரே! வீண் கர்வம் வேண்டாம். என்னைச் சிறியவனென்றும் நீர் பெரியவரென்றும் பேசுவது வயதில் தான். சிறிய பொருளின் தன்மை உமக்குத் தெரியாதுபோலும்! சொல்கிறேன் கேளும்!

தினையளவு நெருப்புப் பொறி மலையளவு வைக்கோற் போரைப் பிடி சாம்பலாக்கி விடுவது உமக்குத் தெரியாதா? மீனின் முட்டையைக் காட்டிலும் சிறிதான ஆல விதை, மண்ணில் நெடுந்தூரம் வேர்விட்டு, நாலாபுறமும் கிளை வீசிப் படர்வதை நீர் கண்டதில்லையா? ஒரு துளி மோர் ஒரு குடம் பாலைத் தயிராக்கும் செயலை நீர் மறந்துவிட்டீரா? தரை நடுங்க ஆடி வரும் தேரை நடத்துவது கை விரல் அளவுள்ள சிறு அச்சாணியல்லவா? கோலாகலரே! இனியேனும் பெரியவன் சிறியவன் என்ற அகம்பாவப் பேச்சை நிறுத்தி வாதத்தில் இறங்கலாம்."

எடுத்த எடுப்பில் வந்த இந்த அஸ்திரம் கோலாகலனது உறுதியைக் குலைத்து விட்டது. இருந்தாலும் விட்டுக் கொடாமல் தர்க்க சாஸ்திரத்தைவைத்து வாதித்தான். ஒவ்வொரு சிக்கலான கேள்விக்கும் துறைவன் தயங்காமல் விடையளித்துச் சபையோரை ஆச்சரியத்திலாழ்த்திவிட்டான்.

யமுனைத் துறைவனை வெல்வதற்குரிய கேள்வியைக் கேட்கக் கோலாகலனுக்குத் தோன்றவில்லை. எல்லாவற்றுக்கும் முகத்திலடித்தாற் போல் வந்தபதிலால்,கோலாகலனே துறைவனின் அதீதத் துணிச்சலையும்' அறிவின் ஆழத்தையும் உள்ளூர மெச்சிக்கொண்டான். பாஷ்யகாசாரியாரின் பெருமையும் அங்கே புலனாகியது. வந்த மூன்று மாதத்தில் அவரிடம் கற்ற காரணத்தால் துறைவனின் அறிவு நன்கு சாணைபிடிக்கப்பட்டிருந்தது. அது அந்தச் சபையில் அப்போது நன்கு நிரூபணமாகியது!

கோலாகலன் வாதத்தை வேறு வழியில் திருப்பினான்.

"சிறுவனே! நான் உன்னைக்கேள்விகள் கேட்டுவிட்டேன். நீ இப்போது என்னைக் கேள்விகள் கேட்கலாம். ஏனென்றால் சிறுவனாகிய உன்னை மேலும் மேலும் தர்க்க சாஸ்திரத்தில் கேள்விகள் கேட்டால், உன்னால் விடையளிக்க இயலாது."

"அப்படியல்ல, கோலாகலரே! தர்க்கத்தில் மேலும் கேட்க உமக்குத் தெரியவில்லை! அதுதான் விஷயம்!" குரல் வந்த திக்கை அரசன் உட்பட யாவரும் நோக்கினர். பாஷ்யகாசாரியார்தான் அவ்வாறு கூறியவர். சபையில் 'ஆஹாகாரம்' எழுந்தது!

நீர் அல்லவென்று கூறி, மறுத்தல் வேண்டும். சம்மதமா?"—துறைவன்.

சபையில் எல்லோரும் வாய்திறந்த வண்ணம் துறைவன் வாயிலிருந்து வரும் கேள்வியை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். பாண்டியனும் தேவியும் புன்முறுவலுடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

"முதலாவது கேள்வி:—கோலாகலரே! நான் உமது தாயைப் புத்திரவதி என்கிறேன். நீர் உமது வாக்குவன்மையால் அவள் புத்திரவதி அல்லவென்று கூறி மறுத்துவிடும், பார்ப்போம்."

கோலாகலருக்கு நாடி தளர்ந்துவிட்டது. 'பெற்ற தாயை மலடி என்று எப்படித்துணிந்து கூறுவது? அதுவும் செக்கு உலக்கைபோல நான் பிள்ளையாக இருக்கும்போதே அவளை மலடி என்றால், கேட்போர் யாவரும் பிரத்யட்ச விரோதமாக விதண்டாவாதம் செய்கிறேனென்று தூற்றுவார்களே! இதற்கென்ன செய்வது?' என்று பெருங் கலக்கத்தில் ஆழ்ந்துவிட்டார்.

சில விநாடிகள் கடந்தன.

"கோலாகலரே! இரண்டாவது கேள்வி! இதோ இருக்கும் அரசர்பெருமானை, 'தர்மவான்' என்று கூறுகிறேன் நான். உம்மால் மறுக்க இயலுமானால், மறுக்கலாம்."

கோலாகலன் மூளை இப்போது முற்றும் செயலிழந்துவிட்டது. 'இதென்ன விபரீதம்! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்ட கதையாக இருக்கிறதே! இத்தனை காலமாக நம்மை ஆதரித்து 'மகா பண்டித' பதவியும் தந்து கௌரவித்துவரும் மன்னனைத் தர்மவானல்லன் என்று தூற்றுவது எங்ஙனம்? செக்கில் தலையைக்கொடுத்தது போல இச்சிறுவனிடம் அகப்பட்டுக் கொண்டு விழிக்கிறோமே' என்றெல்லாம் மனம் புழுங்கியவனாய், பதிலளிக்க இயலாத நிலையில் இருந்தான். துறைவன் சிறிது நேரம் அவகாசம் கொடுத்து மூன்றாம் கேள்வியைக் கேட்கத் தொடங்கினான்.

"இந்த இராஜபத்தினி பதிவிரதையென்கிறேன். அல்லவென்று கூறி மறுப்பீரா?"

கேட்டதும் கோலாகலன் நாராசம் பாய்ந்ததுபோலத் தன் காதுகளைப் பொத்திக்கொண்டான். சபையோர் யாவரும் ஒருமுகமாக ஆரவாரம் செய்து, கோலாகலனது தோல்வியைச் சுட்டிக் காட்டினர்.

கோலாகலன் தன்னையே நொந்து கொண்டான். 'இத்தனை நாள் மகா வித்வான்களையெல்லாம் நம் அதிகாரத்தால் அடக்கியாண்டு அவமதித்திருந்தோமே! இப்பொழுது ஒரு சிறு பையனின் கேள்விக்கு விடை கூறத் தெரியாமல் விழிக்க நேர்ந்ததே! நீறுபூத்த நெருப்பாக விளங்கும் இவனது அறிவுதான் என்னே! முதலிரண்டு கேள்விகளுக்கு விடையளிக்க இயலாவிடினும், மூன்றாவது கேள்விக்கேனும் தக்க உத்தரம் கூற வேண்டுமே! உத்தமியான அரசபத்தினியை தோஷமுடையவளென்று எங்ஙனம் கூறுவது? மன்னன் கோபத்திற்கும் மக்கள் கொதிப்பிற்கும் ஆளாக நேரிடுமே! ஆ! இருதலைக்

னாய், உத்தரம் கூற வகையறியாமல் தவித்தான்.

"என்ன கோலாகலரே! விடையளிக்கிறீரா? தோல்வியை ஒப்புக்கொள்கிறீரா?" பாண்டியனின் அதட்டல்குரல், கோலாகலனின் சிந்தனையைக் கலைத்தது. மெதுவாகத் தன்னிடத்தில் எழுந்து நின்றான். சபையில் 'கசமுச' சப்தம் ஆரம்பித்தது. அரசன் குரல் கேட்டதும் அது அடங்கியது.

"கோலாகலர் தோற்று விட்டார் என்பது உறுதியாகிவிட்டது. சிற்றுளி பெருங் கற்பாறையைத் தூளாக்கிவிட்டது. யமுனைத்துறைவன் வயதில் மிகவும் சிறியவன். அறிவில் மிகப் பெரியவன். அவனே தான் கூறிய மூன்றையும் மறுத்துத் தன் கருத்தை நிலைநாட்டுவான்."

துறைவன் பெருமிதம் பொங்கச் சபையை ஓர் முறை நோக்கிவிட்டுக் கூறத் துவங்கினான்:

"வாழை மரம் ஒரு குலை ஈனுவதைப் போலக் கோலாகலரின் தாய் ஒரு மகவைத்தான் பெற்றாள். 'ஒரு பிள்ளையும் பிள்ளையல்ல; ஒரு மரமும் தோப்பல்ல!' என்பதற்கிணங்கக் கோலாகலரின் தாய் வாழை மலடியாவாள். மக்கள் செய்த பாவம் மன்னனைச் சாரும் என்ற விதிப்படி அரசன் எவ்வளவு தானதர்மங்களைச் செய்தாலும் அவன் தர்மவானாகமாட்டான். அதனால் அரசன் தர்மவானல்லன். பெண்ணானவள் மணஞ்செய்யுங்காலத்தில் அக்கினி, வருணன் ஆகிய தேவர்களுக்கு சமர்ப்பிக்கப் படுகிறாள். மேலும், அவள் கரு உற்பத்தியாற் சந்திரனுக்கும், விளையாட்டாற் கந்தருவனுக்கும், தீப[illegible] விருத்தியால் அக்கினிக்கும் உரி[illegible]ளாகி, பின்பே பதியை அடை[illegible] எனவே, அதற்கிணங்க அரசி[illegible]தோஷியாகிறாள்."

தன் அறிவுத்திறனால் துறைவன் மறுத்துக் கூறியவற்றைக் கேட்டுச் சபை மகிழ்ச்சியினால் ஆவாரித்தது. மன்னன் மகிழ்வுடன் தன் தேவியை நோக்கிப் புன்முறுவலித்தான்.

"தேவி! நம் பந்தயத்தில் வென்றுவிட்டாயே நீ?" என்றான் மன்னன், மெதுவாக.

"நாதா! யமுனைத்துறைவனை நம் அருகே அழையுங்கள். அவனை ஆலிங்கனம் செய்துகொள்ள என் மனம் அவாவுகிறது."

அரசன் ஏவினான். மறுகணம் யமுனைத் துறைவன் சிம்மாசனத்தருகே வந்து நின்றான். அரசி விரைந்து எழுந்தாள்.

"யமுனைத்துறைவா! என்னை ஆளவந்தவன் நீதான்! நீயே ஆளவந்தார்!" அரசி துறைவனைஇறுகஅணைத்துக்கொண்டாள்.

பாஷ்யகாசாரியர் பெருமிதம் முகத்தில் தவழ, மன்னனை நோக்கினர். அரசன் கூறினான்:

"சிறுவனின் அறிவு, மெச்சும் அளவைக் கடந்தது. அந்தஅறிவுக்குக்காரணமானவர் பாஷ்யகாசாரியார்தான். வாதில் வென்று வாகை சூடிய யமுனைத்துறைவனுக்கு என் ராஜ்யத்தில் பாதியை அளிக்கிறேன். இன்று முதல் அவனுக்கு 'ஆளவந்தார்' என்ற திருநாமமும் வழங்கும். . ."

சபை வாயிலை நோக்கி ஓர் உருவம் தயங்கித் தயங்கித் தலை கவிழ்ந்தவாறு

# திரைக்குப் பின்

தொடர் கதை

## 5

மூன்பின் அறியாத சிலருக்குத் திடீரென்று ஒரு யோகம் அடிப்பதைப் போலத்தான் சில ஊர்களுக்கும் அடிக்கத் தொடங்கிவிடுகிறது. சோமேசபுரத்துக்கும் அப்படித்தான் கொஞ்ச காலமாக ஒரு யோக தசை வந்திருந்தது.

ஊர் இருக்குமிடமே தெரியாதிருந்த சோமேசபுரம் கொஞ்ச நாட்களிலேயே பிரபலமடைய ஆரம்பித்துவிட்டது. சோமேசபுரத்தின் சிற்பங்கள், செப்பேடுகள், சிலா சாஸனங்கள், சரித்திரச் சின்னங்கள் என்றெல்லாம் படங்களும் கட்டுரைகளுமாகப் பல பத்திரிகைகளிலும் வெளிவந்தன. பண்டைத் தமிழகத்து இருண்ட காலப் பகுதியின் வரலாறே அந்த ஊர்ப் பூமிக்குள் புதைந்து மறைந்து கிடப்பதாகச் சமீபத்தில்தான் தெரிய வந்தது. இப்படி ஒரு பெருமையை அந்த ஊருக்குத் தேடித்தந்தவர் டாக்டர் சிதம்பரம் அவர்கள்தான். எங்கேயோ கிடைத்த ஒரு செப்பேட்டிலிருந்து அவர் இந்த உண்மையைக் கண்டுபிடித்துச் சொன்னர்.

பல மொழிகளில் தேர்ச்சியும், ஆராய்ச்சியும் நிறைந்திருந்த டாக்டர் சிதம்பரம், எத்தனையோ கௌரவப் பட்டங்கள் பெற்று, தொல் பொருள் ஆராய்ச்சி இலாகாவின் புகழ் வாய்ந்த தலைவராகவும், இருந்தார். அவருடைய நேர் மேற்பார்வையிலேயே ஆராய்ச்சி வேலைகள் ஆரம்பமாகி நடந்து வந்தன என்றால், ஓர் ஊருக்கு அதைவிட வேறு என்ன பெருமை வேண்டும்?

கீழ்த்திசைக் கலை, கலாசாரம், நாகரிகம் எல்லாவற்றிலும் கரை கண்ட ஞானம் உள்ள அவர் சொன்னதுதான் முடிவு, அவர் கருத்துதான் ஆதாரம். எத்தனையோ காலமாகத் தெரியாமலிருந்த பல சரித்திர உண்மைகள் இந்த ஆராய்ச்சி

ரெஸாக்

ஆர்வி

சியிலிருந்து தெரியப்போகின்றன என்று அவர் நம்பினர். அதன் காரணமாக அவருடைய இலாகாவே சோமேசபுரத்துக்கு வந்துவிட்டதோ என்று எண்ணும்படி ஆராய்ச்சி வேலைக்குத் தேவையான எல்லா நவீன சாதனங்களும், யந்திரங்களும் அங்கே குவிக்கப்பட்டிருந்தன. நிபுணர்களும் நிருபர்களும் அந்த ஊரின் இடிந்து, சிதைந்து கிடந்த பகுதிகளில் சுற்றிக்கொண்டிருந்தார்கள். எங்கே பார்த்தாலும் வெட்டு வேலைகளும் கட்டு வேலைகளும் நடந்து வந்தன. பழைய காலத்து அரசர்கள் இப்படித்தான் திருப்பணி வேலைகள் செய்தார்களோ என்று நினைக்கும்படி இருந்தது அந்தக் காட்சி. ஏழு மைல் சுற்றளவுக்கு எங்கே பார்த்தாலும் இந்த வேலையில்தான் பலரும் ஈடுபட்டிருந்தார்கள்.

ரயிலோ, பஸ்ஸோ எட்டிப் பார்க்காத சுத்தப் பட்டிக்காடான சோமேசபுரத்துக்கு இன்னொரு வகையிலும் யோகம் அடித்தது. ஊருக்கு மூன்றே மைல் தூரத்தில் காசாங்காட்டுக்கு நடுவே, 'சோமேசபுரச்சாலை' என்று ஒரு ரயில் நிலையமும் ஏற்பட்டுவிட்டது. முன்பு ஊர் இருப்பதே தெரியாதவர்கள் எல்லாம், இப்போது போகும்போது வரும்போது அந்த ஊரில் இறங்கி, ஒரு தடவை சுற்றிப் பார்த்துவிட்டுப் போகத் தொடங்கினார்கள். சோழ அரசன் ஒருவன் காலத்தில் ஏற்பட்டிருந்த பழைய மண் சாலையில் இப்போது மோட்டார் வண்டிகளும், யந்திர வண்டிகளும் போய் வரும்படியாக ஒரு சரளைக்கல் சாலையே போட்டுக் கொண்டிருந்தார்கள். சுற்று வட்டாரத்தில் உழுது பயிரிட்டு வந்த மக்களுக்கெல்லாம் இப்பொழுது சரியான வேலையும் கை நிறையக் கூலியும் கிடைத்து வந்தன. ரயில்வே ஸ்டேஷன் இருக்கும் இடத்துக்கு கிளியனூர் என்று பெயர். அங்கேதான் தொல்பொருள் ஆராய்ச்சி இலாகாவின் தலைமை ஸ்தலமே இருந்தது. சுற்றிலும் கூடாரங்களும், விடுதிகளும் அமைத்துக்கொண்டு அதிகாரிகளும், சிப்பந்திகளும் தங்கியிருந்தார்கள். தலைமை அதிகாரியான டாக்டர் சிதம்பரம் மட்டும் சோமேசர் கோயிலுக்கு அருகிலுள்ள சாவடியில் சொந்தக் காரியதரிசியான அரவிந்தனுடன் தங்கியிருந்தார்.

இந்த இலாகாவுக்குப் புதிதாக வந்து சேர்ந்த அரவிந்தனுக்கும் இந்தக் காரியதரிசி வேலை கிடைத்தது ஒரு குருட்டு அதிர்ஷ்டம்தான். எந்த வேளையில் அவனும் டாக்டர் சிதம்பரமும் பார்த்துக் கொண்டார்களோ, அந்த நேரத்தின் விசேஷம் என்றே சொல்ல வேண்டும், அதை. சுமார் முப்பது வருஷங்களாக இந்த ஆராய்ச்சி வேலையிலே உழன்று, தலை சொட்டையும் விழுந்து போன டாக்டர், கட்டைப் பிரம்மச்சாரியாகவே காலத்தை ஓட்டிவிட்டார். வேலை என்று இறங்கிவிட்டால் பத்து வருஷம் இளமையாகவே அவர் மாறிவிடுவார். உறுதியும், சோம்பலில்லாத இயல்பும், கூறிய அறிவும் படைத்த டாக்டர் பெயரைச் சொன்னாலே எல்லாருக்கும் சிம்ம சொப்பனந்தான். கிட்டே நெருங்கவே எல்லாருக்கும் நடுக்கம்.

அவருக்கு அந்தரங்கக் காரியதரிசி ஒருவர் தேவையாக இருந்தபோது, அந்த இலாகாவில் அதிகம் அனுபவம் இல்லாத அரவிந்தனைப் பார்த்து மற்றவர்கள், பலிக்கிடா மாதிரி பிடித்துத் தள்ளிவிட்டார்கள். அரவிந்தனுக்கு அப்போது அந்த உள் வயணம் எல்லாம் போதாது. தெரிந்திருந்தால், அவனும் மற்றவர்களைப் போலவே, "அவரிடமா? நான் மாட்டேன்—கீட்டேன்" என்று ஏதாவது சொல்லித் தொலைத்திருப்பான். நல்ல வேளையாக அவன் எதுவும் சொல்லாமல் அவர் முன்னால் போய் நின்றான்.

டாக்டர் அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார். யார் யாரையெல்லாமோ எதிர்பார்த்த அவருக்கு உண்மை புரிந்துவிட்டது. அரவிந்தனும் பளிச்சென்று—போலியான பணிவு, கபட்டுக் கூச்சம் எதுவுமின்றி – பால் போன்ற முகத்தோடு நிற்பதைக் கண்டார். பார்த்ததுமே அவருக்கு என்ன தோன்றிற்றோ, என்னவோ "உன்னையா அனுப்பினார்கள்?" என்று எண்ணுவதுபோ[illegible] ஒரு தடவை நெ[illegible]யைத் தே[illegible]



கொண்டு, "உன் பெயரென்ன?" என்றார்.

"என் பெயர் அரவிந்தன், பி. எஸ்ஸி. சுருக்கெழுத்தும் டைப்பும்கூடப் பாஸ் செய்திருக்கிறேன்!" என்றான் அவன்.

"ஓ! உனக்கு என்ன வயசு?"

"பொருளாதார வருஷத்தைப்போல, இந்த மார்ச்சுக்கு இருபத்திரண்டு முடிந்து ஏப்ரலில் இருபத்துமூன்று ஆரம்பம். போன ஜுலையில்தான் இந்த இலாகாவில் சேர்ந்தேன். இன்னும் கல்யாணம் ஆகவில்லை. சமீபத்தில் செய்துகொள்ளும் உத்தேசமுமில்லை!"

டாக்டர் சிதம்பரத்துக்கு இது கொஞ்சம் புதுமையாகவும், வேடிக்கையாகவும் இருந்தது. அவர் ஒன்று கேட்டால் மற்றவர்கள் பாதி பதில் கூறுவதைத்தான் அவர் கண்டிருக்கிறார். ஆனால் அரவிந்தனோ ஒரு கேள்விக்கு மூன்று விடைகளைப் பளிச்சுப் பளிச்சென்று கூறினான்.

அவர் அவன் மாதிரியே வேடிக்கையாக, "நான் வயசைத்தானே கேட்டேன்? மற்றதெல்லாம் கேட்கவில்லையே!" என்றார்.

"அதற்கெல்லாம் இடம் வைக்க வேண்டாம் என்றுதான் நானாகச் சொல்லி வைத்தேன்" என்றான் அரவிந்தன்.

"ஓ. . . அதெல்லாம் சரிதான்; ஆனால் என்னிடத்தில் வேலை பார்ப்பதென்றால் லேசில்லை; தெரியுமா உனக்கு?"

"தெரியாது; ஆனால் அப்படியிருந்தால் நல்லதுதானே! நான் முன்னுக்கு வர அப்பொழுதுதானே முடியும்?"

டாக்டர் சிதம்பரம் அதற்கு மேல் அவனிடம் ஒன்றும் பேசவில்லை. முகத்தில் புன்னகை தோன்ற "சரி போ! பின்னால் ஒரு நாள் இதற்காக நீ வருத்தப்படப்போகிறாய்?" என்றார்.

மற்ற அதிகாரிகள், குமாஸ்தாக்கள் எல்லாரும் டாக்டரின் வார்த்தைகளுக்கு என்னவெல்லாமோ பொருள் கண்டுபிடித்துக் கூறினார்கள். அரவிந்தன் ஒன்றிற்காவது கலங்கவில்லை.

ஆனால் நெருக்கத்தில் அவரிடம் பழகப் பழகத்தான், அரவிந்தனுக்குத் தன் அதிர்ஷ்டம் தெரிய வந்தது. ஒரு காரணமுமின்றி அவரிடம் எல்லாரும் ஏன் இப்படிப் பயந்து சாகிறார்கள் என்று அவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. ஏனெனில், அவனுக்கு அவரிடம் கொஞ்சங்கூடப் பயமே தோன்றவில்லை. அவரிடம் வந்த நாள் முதல் அவன் தைரியமாகவேதான் பழகினான்; பேசினான். அவருக்கும் அப்படி ஒருவன் கிடைக்கமாட்டானா என்றுதான் ஏக்கமாக இருந்திருக்க வேண்டும். ஏனெனில் அவர் அவனைச் சின்னவன் என்றோ, சாதாரண குமாஸ்தா என்றோ நினைக்காமல், சமதையான நண்பனைப் போலவும், அன்புக்குரிய மகனைப்போலவும் மாணவனைப்போலவும் சகஜமாக நடத்தினார். அரவிந்தனுக்கு அவரிடம் பயம் இல்லையே தவிர, அவரிடம் மரியாதை இல்லை என்று சொல்ல முடியாது. நாளுக்கு நாள் அவரிடம் அவனுக்கு மரியாதையும், மதிப்பும் அதிகரித்துக்கொண்டேதான் வந்தன. அதுவே அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியையும், ஆறுதலையும் கொடுத்தது. வேலை நேரம்போக மற்ற நேரங்களில் அவர் ஏதாவது அவன் வாயைக் கிண்டிச் சீண்டிக்கொண்டே இருப்பார். பக்கத்தில் உட்கார வைத்துக்கொண்டு சேர்ந்து சாப்பிடுவார். அவன் வயதுக்கேற்பவே பேசிப் பழகுவார். அவனுக்குத் தெரியாத பல விஷயங்களை மனத்தில் பதியும்படிச் சொல்லிக்கொடுப்பார். அவனுடைய பல குறைகளைப் பொருட்படுத்தவே மாட்டார்.

இதையெல்லாம் கண்ட மற்றவர்களுக்கு அவருடைய



போக்குப் பெரும் புதிராகவே இருந்தது. அரவிந்தனிடம் அவர்களுக்கு முதலில் தோன்றிய அனுதாபமெல்லாம் மாறி, அசூயைகூட உண்டாகத் தொடங்கிவிட்டது. அரவிந்தன் ஏதோ சொக்குப்பொடி போட்டு அவரை மயக்கிக் கைக்குள் போட்டுக்கொண்டு விட்டதாகவே எண்ணினார்கள். சமயம் வரும்போது அதை ஜாடையாகவும் சொன்னார்கள். டாக்டர்தான் உயிர் இல்லாச் சிலைகளுக்கே ஜாதகம் கணிப்பவராயிற்றே! இதெல்லாவற்றையும் தெரிந்து வைத்துக்கொள்ளாமலா இருந்துவிடுவார்?

அரவிந்தன் அவருடைய அந்தரங்கக் காரியதரிசி என்று பெயரேயொழிய அவருக்குத்தான் அவனுடைய அந்தரங்கமெல்லாம் நன்றாகத் தெரிந்திருந்தது. ஓரோரு சமயம் அவனிடம் அதிகச் சலுகை காட்டுகிறோமோ என்று அவர் எண்ணமிடுவதுண்டு. அப்படி நினைக்கும்போதெல்லாம் அவனிடம் சிறிது கடுமையாக, கண்டிப்பாக இருக்க வேண்டும் என்றும் முடிவு செய்து கொள்வார். ஆனால் அதன்படி அவரால் நடந்து கொள்ளத்தான் முடிவதில்லை. அவருக்கும் வயது ஏறிக்கொண்டு வந்துவிட்டது. அந்த வயதுக் கோளாற்றினால் வந்த பலவீனம் இது என்று போய்விடுவார். அவன் முகத்தைப் பார்த்தாலே அவருக்கு என்னவோ ஒரு பாசம் வந்துவிடும்; பரிவு தோன்றிவிடும்; கண்டிப்பாக இருக்க வேண்டும் என்ற எண்ணம் எல்லாம் காற்றிலே பறந்து கருணை பெருகிவிடும். வெகு நாளாக உயர்ந்த பதவியிலேயே இருந்துவிட்ட அவரிடம் யாருமே ஒண்டி உறவாட வாய்ப்பில்லாமல் போய்விட்டது. ஒருவரும் தம்மைச் சரிவரப் புரிந்துகொள்ளவில்லை என்ற குறையும் அவருக்கு இருந்தது. இந்த இரண்டுக்கும் அருமருந்தாக அரவிந்தன் கிடைத்தது, பாலையிலே சோலையைக் கண்டதுபோலத்தான் அவருக்குப் பட்டது.

அரவிந்தனுக்கும் அவரிடம் பழகிப் பழகி அவருடைய மன ஓட்டம் கொஞ்சம் அத்துபடி ஆகிவிட்டது. மாற்றுக் குறையாத அன்புடன் நடத்தும் அவரிடம் மதிப்பும், மரியாதையும் அதிகரிக்க, மற்றொரு புறம் தன்னையே அறியாத ஒரு பயமும் வளர்ந்து வருவதை அவன் உணரலானான்.

“பயம் உண்டாகிறது என்றால், கொஞ்சம் உண்மை குறைகிறது என்று அர்த்தம். ஜாக்கிரதை, அரவிந்தா! பயம் என்ற வார்த்தையை மட்டும் சொல்லாதே!” என்பார் டாக்டர் அடிக்கடி.

எதைச் சொன்னாலும் அதைச் சுவைபடவும் தெளிவாகவும் சொல்லும் திறமை டாக்டருக்கு உண்டு. அவருடைய வாக்கு வன்மையிலே அரவிந்தன் அப்படியே சொக்கிப்போய்விடுவான். அவருடைய விரிந்த அனுபவங்களையெல்லாம் அவர் கூறும்போது, அவரை ஒரு பெரிய சொற்சிற்பி என்று அவன் வியக்காத நாளே இல்லை. இருந்தாலும் அவனுடைய இளமை நடுநடுவே சலித்துப்போகும்; புலனுக்கே தெரியாத மன உல்லாசத்தைக் கற்பனை செய்துகொண்டு, அதைத் தேடிச் செல்லத் துடிக்கும்; இளமையையும், செழிமையையும், மலர்ச்சியையும், மருட்சியையும் எங்கே கண்டாலும் அங்கெல்லாம் மலைத்து நின்று, தயக்க நடைபோடும். அப்போதெல்லாம் டாக்டர் கொஞ்சம் உஷாராகத்தான் இருப்பார். அவன் போக்கில் அவனை அடியோடு விட்டுவிட அவர் விரும்பவில்லை. அவனுடைய நன்மையை உத்தேசித்தே அவன் விருப்பம், திருப்பம் எல்லாவற்றையும் மெள்ள மெள்ளத் தம் கட்டுக்குள் வைத்துக்கொள்ளத் தொடங்கினார். சிறுகச் சிறுக ஏதோ ஒரு வகையான சுதந்திரத்தை இழந்து வருவதுபோலத் தோன்றியது அவனுக்கு. அந்த எண்ணம் தோன்றத் தோன்ற, நெஞ்சிலே பயம் தலைகாட்டுவதை அவன் உணர்ந்தான். என்ன முயன்றும் அதை அவனால் தடுக்க முடியவில்லை.

அத்தகைய பயம்தான் அவனிடம் அன்றும் தலைகாட்டியது. சோமேசபுரத்துக்கு அடித்த யோகத்தைவிட, பாமினியின் வருகையால், அவன் தனக்குப் பெரிய யோகம் வந்துவிட்டதாகவே எண்ணிக்கொண்டது பிசகுதானே? பயப்படாமல் எப்படி இருக்க முடியும்?

## 6

மறு நாள் மணி எட்டு அடிப்பதற்குள் அரவிந்தன் புறப்படத் தயாராகவேதான் இருந்தான். கால் மணி முன்பாகவே போக வேண்டும் என்றிருந்தால்கூட அவனுக்குச் சந்தோஷமாகத்தான் இருந்திருக்கும். இருந்தாலும் வீண் சந்தேகத்துக்கெல்லாம் இடம் கொடுக்க அவன் விரும்பவில்லை. மனத்தின் பரபரப்பை எவ்வளவோ கஷ்டப்பட்டு அடக்கிக்கொண்டு வழக்கத்தைவிட மசமசவென்று இருப்பதுபோலவே காட்டிக் கொண்டான். அவனுடைய பரபரப்பையோ நிதானத்தையோ கவனிப்பதாக டாக்டர் சிதம்பரமும் காட்டிக்கொள்ளவில்லை. செய்தித் தாளைச் சுவாரஸ்யமாகப் படிப்பதுபோல உட்கார்ந்திருந்தார்.



“அடே......டே......இந்த ராமு பயலுக்கு வால் ஒன்றுதான் பாக்கி”

அவர் என்ன செய்கிறார் என்று அரவிந்தன் அடிக்கடி எட்டிப் பார்த்துக்கொண்டுதான் இருந்தான். ஏதோ வேலை இருப்பவன் மாதிரி கொல்லைப்புறமும், வாசற்புறமும் போய்விட்டுப் போய்விட்டு வந்தான். மணி எட்டடித்து ஐந்து நிமிஷம் ஆனபிறகுதான் அவன் அவசரமாகப் புறப்படுவதுபோல் பாசாங்கு செய்துகொண்டு அவர் முன் வந்து நின்றான்.

டாக்டர் தலையைத் தூக்கி, “என்ன ஸார்! புறப்பட்டுட்டீங்களா?” என்று புன்னகை ஒன்றை வரவழைத்துக்கொண்டார்.

“இன்றைக்கும் அப்படி இப்படி என்று நேரமாகிவிட்டது. சொல்லிக்கொண்டு புறப்படத்தான் வந்தேன்” என்றான் அரவிந்தன்.

டாக்டர் அதற்கு உடனே பதில் சொல்லாமல், “ஓகோ, அப்போ நேரமானதுதான் ஆயிட்டுது; ஸ்டேஷன் வரைக்கும் போய்விட்டு வரவேண்டியிருக்கிறது. நீ தான் போய்விட்டு வந்துவிடேன்...” என்றார், ஏதோ நினைவு வந்தவர் போல!

அரவிந்தனுக்கு சட்டென்று முகம் வாடிப் போயிற்று. ஆனாலும் ஏமாற்றம் எதையும் காட்டிக்கொள்ளாமல், “நானே போக வேண்டுமானால் போகிறேன். அதற்குள் வேலை மெனக்கெட்டுப் போகுமே என்றுதான் பார்க்கிறேன். வேறு ஒன்றுமில்லை” என்றான்.

“அதனால் என்ன? அரைப் போதுதானே! இது அதைவிட முக்கியமானது என்பதால் சொல்கிறேன்!” என்றார் அவர்.

அரவிந்தன் பதில் எதுவும் சொல்லவில்லை. அந்தரங்கக் காரியதரிசிக்கே தெரியாமல் ஒரு முக்கியமான வேலை இருக்கிறதா என்று சந்தேகப்படுபவன் போல் தயங்கி நின்றான்.

“ஆமாம், நேற்றே உன்னைக் கேட்க வேண்டும் என்று நினைத்தேன். மறந்துவிட்டது. உன்னை ‘அதிர்ஷ்டக்காரன்’ என்று அந்தப் பட்டணத்துப் பெண்

அரவிந்தனுக்கு நேற்று நடந்ததெல்லாம் பசுமையாக நினைவில் இருந்தன. ஆனாலும் இந்தக் கேள்வியை அவன் எதிர்பார்க்கவில்லை. சிறிது நேரம் தயங்கிவிட்டு, "அப்படிச் சொன்னாளா, என்ன? அது எதைக் கொண்டு சொன்னாளோ, நான் கவனிக்கவில்லை. நான் ஸ்டேஷனுக்குப் புறப்படட்டுமா?" என்று பேச்சை மாற்றினான்.

"சரி; ஊரிலிருந்து பெட்டிகள் இரண்டு வந்திருக்கும். ஸ்டேஷன் மாஸ்டரைக் கேட்டு அவற்றைக் கொண்டு வரவேண்டும். வேறு எனக்குத் தகவல் ஏதாவது வந்திருந்தாலும் அவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டு வா! அப்படியே நம்முடைய தலைமை ஸ்தலத்துக்குப் போய், இந்தக் கோயிலின் 'பிளான்' நகல் எடுத்திருந்தால், வாங்கிக்கொள். அவ்வளவுதான்!" என்றார்.

அரவிந்தன் யோசித்தான். இந்த வேலைகளை அவனே போய்த்தான் செய்து முடிக்கவேண்டும் என்பதில்லை. யாரும் செய்துவிடலாம். ஆனால் அவர் சொல்லும்போது எதிர்த்துப் பேச முடியுமா? முக்கியமானது என்றால், அந்த வேலைகள் முக்கியமானதா, அவன் அந்த இடத்தை விட்டுப் போவது முக்கியமானதா . . . யார் கண்டார்கள்? ஒன்று மட்டும் நிச்சயம். இந்த மாதிரி வேலைகளுக்கெல்லாம் அவர் அவனை அனுப்பமாட்டார். இன்று ஏதோ முக்கியமானதாகத்தான் இருக்கவேண்டும்!

அரவிந்தன் ஜீப்பில் ஏறிக்கொண்டு அந்த வீட்டு வாசல் வழியாகத்தான் விடச் சொன்னான். வாசலில் பாமினியின் பாட்டி நின்றுகொண்டிருந்தாள். ஆட்கள் வேலை செய்துகொண்டிருந்தார்கள். அவன் வண்டியை வாசலுக்கு எதிரே நிறுத்தச்சொல்லி, நடேச மேஸ்திரியைக் கூப்பிட்டுச் செய்ய வேண்டிய வேலைகளைச் சொல்லி முடித்தான். நடு நடுவில் அந்த வீட்டு ஜன்னலையும் பார்த்துக்கொண்டான். வெறும் முக தரிசனம்கூடக் கிடைக்கவில்லை! ஆனால், எதையும் கற்பனை செய்துகொள்ளத் தெரிந்தவர்களுக்கு இதெல்லாம் ஒரு லட்சியமா? இல்லாத இடத்திலும் இருப்பதாக எண்ணிக் கொண்டுவிட முடியுமே! அந்த இருள் திரைக்குப் பின்னே ஒரு கோமளமான வடிவம் தன்னையும் தன் உத்தியோக மிடுக்கையும் உட்கார்ந்து கவனித்துக் கொண்டிருப்பதுபோல் எண்ணிக்கொண்டான். அந்தக் கற்பனையில் அவநம்பிக்கைப்படாமல், அதைத் தெளிவாகவும் வைத்துக்கொள்ளாமல், டிரைவரைப் பார்த்து, "சரி; போகலாம்!" என்று உத்தரவு கொடுத்தான்.

டிரைவர் முத்தையனுக்கும் அரவிந்தனுக்கும் எப்போதுமே கொஞ்சம் ராசி உண்டு. ஒன்று, இரண்டு என்று அரவிந்தன் அவனுக்குக் கடன் கொடுப்பான்; திருப்பிக் கொடுத்தால் வாங்கிக்கொள்ள மாட்டான். அதுவும் இந்தமாதிரி தனியே போகும் சந்தர்ப்பங்களில் அரவிந்தன் இஷ்டப்படி குஷாலாகச் செலவழிப்பான். முக்கி முக்கிச் செலவழித்தாலும் எவ்வளவு ரூபாய் ஆகிவிடப்போகிறது; அந்தக் குக்கிராமத்தில்! மாம்பழத்தைக் கண்டால் அரை டஜன், ஒரு டஜன் என்று வாங்கி வண்டியில் போட்டுக்கொள்வார்கள். பன நுங்கைக் கண்டால் குடலை குடலையாக வாங்குவார்கள். வெள்ளரிப் பிஞ்சைக் கண்டால் தட்டோடுதான் வியாபாரம். இளநீரை வெட்டி வண்டியில் உட்கார்ந்தபடியே குடிப்பதில் அரவிந்தனுக்கு அலாதி ஆனந்தம்; முத்தையன் வேண்டாம் என்றாலும் விடமாட்டான். எங்கேயோ கட்டுப்பட்டிருந்து விட்டு, அவிழ்த்து விடப்பட்டதுபோல இருவரும் தன்னிச்சையாக நடந்துகொள்வார்கள். அரவிந்தன் தனியாக வருகிறான் என்றால் முத்தையனுக்குக் கொண்டாட்டம்தான்.

ஆனால் இன்று அரவிந்தனிடம் எப்போதும் காணப்படுகிற கலகலப்பு இல்லாததைக் கண்டு முத்தையனுக்குக் கொஞ்சம் யோசனையாக இருந்தது. சொந்தப் பிள்ளைக்கும் மேலாக நடத்தும் டாக்டர் இன்று ஏதாவது கடுமையாகச் சொல்லியிருப்பாரோ என்று சந்தேகப்பட்டான். நடேச மேஸ்திரிக்கு, செய்ய வேண்டிய வேலைகளை அவன் சொன்ன தோரணையிலிருந்து அந்தச் சந்தேகமும் போய்விட்டது.

"இன்னிக்கி எங்கெங்கே போகணும்?" என்று மெல்லக் கேட்டு வைத்தான்.

"முதலில் ஸ்டேஷனுக்குத்தான் போக வேண்டும். ஆனால் உனக்கு எங்கேயெல்லாம் இஷ்டமோ அங்கெல்லாம் போ! வண்டியாலே இஷ்டப்படி பெட்ரோல் வாங்கிப் போட்டுக்கொள்!" என்றான் அரவிந்தன். அரவிந்தனுக்கு வேறு ஒன்றும் கோபமில்லை. ஒரு காரணமும் இல்லாமல் டாக்டர் இப்படி அவளைப் பார்க்கவிடாமல் அடித்துவிட்டாரே என்றுதான் முதலில் வருத்தமாக இருந்தது. அதுவும் வண்டி கொஞ்ச தூரம் போவதற்குள் மறைந்து விட்டது. இப்போது வேறு ஒரு யோசனை வரத் தொடங்கியது. மெல்ல முத்தையனிடம் அந்தப் பெண்ணைப் பற்றிப் பேசலாமா, விசாரிக்கலாமா என்பதுதான் அந்த யோசனை. ஒரு சமயம் அது உசிதமானதாகப்படவில்லை. மற்றொரு சமயம் அதனால் உசிதக் குறைவு ஒன்றும் வந்துவிடாது என்றும் தோன்றியது. எப்படியோ அவளைப்பற்றி ஏதாவது கொஞ்சம் தகவல் கிடைத்தால் அதுவரையில் லாபந்தானே!

"மனசே சரியாக இல்லை, முத்தையா!" என்று மெதுவாகப் பேச்சு கொடுத்தான் அரவிந்தன்.

"அது வேறே ஒண்ணும் இல்லீங்க! பாழாப்போன பட்டிக்காட்டிலே என்னங்க இருக்கு—ஒரு சினிமாவா, டிராமாவா, பூச்சா, எதுவும் இல்லீல்ல? அதனாலேதாங்க இப்படி மனசு சோர்ந்து சோர்ந்து போவுது!" என்றான் முத்தையன்.

முத்தையனுக்கு அந்தப் பெண் வந்திருப்பதே தெரியாது போலிருக்கிறது என்று எண்ணிக் கொண்டான் அரவிந்தன். தெரிந்திருந்தால் இப்படியா பேசுவான்? இதற்குள் அவனாகச் சொல்லியிருப்பானே! எப்பொது அவனுக்குத் தெரியாதோ, அவனிடம் அது விஷயமாய்ப் பேசுவது சரியில்லை என்று தோன்றியது. பேசாமல் இருந்துவிட்டான். 'முதலில் வந்த வேலை முடியட்டும்; பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று முத்தையனும் வண்டியை வேகமாக முடுக்கினான்.

'சோமேசபுரச்சாலை' புதிதாக ஏற்பட்ட ஸ்டேஷன்தான். இருந்தாலும் உந்

சுவத்துக்குத் தட்டிவைத்துக் கட்டுவது போல் கட்டாமல், அசல் கட்டடமாகவே கட்டப்பட்டிருந்தது. ஒரு வருஷத்துக்குள் பொட்டலில் நட்டிருந்த செடிகள் எல்லாம் ஆள் உயரத்துக்குமேல் வளர்ந்து, நிழல்கூடக் கொடுத்தன.

"நீங்க காரியத்தை முடிச்சிக்கிட்டு வர்றதுக்குள்ளே—நான் போய், பெட்ரோல் போட்டுக்கிட்டு வரேன்" என்று முத்தையன், ஸ்டேஷன் வந்ததும் அரவிந்தனை இறக்கி விட்டு விட்டுப் போனான்.

இரும்புக் கிராதிகளைத் தாண்டி உள்ளே போனதுமே அரவிந்தன் கண்ணில் பட்ட காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது. ஸ்டேஷன்மாஸ்டர் அறைக்கு வெளியே இருந்த எடை போடும் தராசில் அவள் உட்கார்ந்திருந்தாள். 'அட, இவள் பாமினிதானா, இல்லை, வேறு ஒரு காமினியா!' என்று கண்களைத் துடைத்துக் கொண்டு கவனித்தான். அவளும் கவனித்துவிட்டாள் அவனை. இரண்டு பேருக்குமே பேசுவதா, இல்லை வெறும் அறிமுகச் சிரிப்புடன் நின்றால் போதுமா என்று யோசனையாகிவிட்டது. அதிகம் அலட்டிக் கொள்ளாமல், அவன் அந்த ஸ்டேஷனில் அதிக உரிமையும், சலுகையும் உள்ளவன் போல, "ஓ . . . எங்கே இவ்வளவு தூரம்?" என்று கேட்டுக்கொண்டே அவளைத் தாண்டிப் போய் நின்றான்.

நின்று பேசாதவனுக்குப் பதில் என்ன சொல்வது என்பது போல, பாமினி முகத்தை அலட்சியமாக வைத்துக் கொண்டு, கண் இமைகளை மட்டும் வண்ணாத்திப் பூச்சியின் சிறகு அடித்துக் கொள்வது மாதிரி படபடத்தாள். கறுப்புச் சோழியின் ரேகை போல எத்தனை அடர்த்தியான இமைகள்!

நாளுக்கு நாள் அழகு மலர்ந்து கொழிக்குமா என்ன பெண்களுக்கு! இன்று அவளுடைய புதுமை எழில் அவனைத் துன்புறுத்தியேவிட்டது! இத்தனை துன்பம் விளைக்கிற நோக்கு பெண்களுக்கு உண்மையில் உண்டு என்பதை அவன் இதுவரையில் நம்பியதே இல்லை. நீண்டு வளைந்து புருவத்தை இடிக்கும் இமைக் கூட்டங்களுக்குள்ளே துடிக்கும் துடுக்குத்தனத்தைக் கண்டு அவனுக்கு அவள் எதிரில் நிற்கவே கொஞ்சம் யோசனையாக இருந்தது. இதற்குள் ஸ்டேஷன்மாஸ்டர் வந்துவிட்டதால் அவன் உள்ளே போகவேண்டியதாயிற்று.

தெற்கேயிருந்து வண்டி வருகிற சமயம், மணியடிப்பதையும், கையிறக்குவதையும் பார்க்க ஸ்டேஷன்மாஸ்டர் போய்விட்டார். பிளாட்பாரத்தில் கூட்டமேயில்லை. டாக்டர் குறிப்பிட்டபடி அவருக்கு இரண்டு பெட்டிகளும் வந்திருந்தன. வேறு தகவல் எதுவும் வரவில்லை. ஜீப் வந்துவிட்டால் அவன் இனிப் போகவேண்டியதுதான். ஆனால், பாமினி இங்கே எதற்கு வந்திருக்கிறாள்?

வண்டி வந்து புறப்பட்டு போய்விட்டது. அதைப் பார்த்த பிறகு, அது எதற்காக அநாவசியமாக நின்றுவிட்டுப் போயிற்றோ என்று அவனுக்குப் பரிதாபமாகத்தான் இருந்தது. ஒருவரும் இறங்கவுமில்லை; ஏறவுமில்லை. வண்டியில் இருந்தவர்கள் எல்லாரும் தங்களை இருமுறை நன்றாகப் பார்ப்பதற்காக அது நின்றதோ என்று அரவிந்தனுக்கும் பாமினிக்கும் தோன்றியது.

வண்டி கைக்காட்டியைத் தாண்டிச் சென்ற பிறகுகூட பெட்ரோல் போடப் போன முத்தையனைக் காணவில்லையே என்று அரவிந்தன் வெளியில் வந்தான். பாமினியும் பின்னாலேயே வருவது தெரிந்தது. சற்றுத் தூரத்தில் நின்ற மாட்டு வண்டியைப் பார்த்தாள் அவள். அரவிந்தன் துணிந்துவிட்டான். அங்கே அவர்கள் இரண்டு பேரைத் தவிர வேறு யாரும் இல்லை. டிக்கட் சேகரிக்கும் குமாஸ்தாகூட உள்ளே போய்விட்டான். அவன் தொண்டையை ஒருதரம் கனைத்துச் சரிப்படுத்திக்கொண்டு, "வந்து . . . மாட்டு வண்டியிலே வந்தாப்பலேயா?" என்றான்.

"வந்தது மட்டுமில்லை, ஸார்! போகப் போகிறதும் அதிலேயேதான்!" என்றாள் அவள் திரும்பி.

"சரிதான். அப்படியானால் வீட்டுக்கு என்றைக்குப் போய்ச் சேர உத்தேசமோ?" என்றான் அவன் கேலியாக.

"எனக்கு என்ன, எப்போது வேண்டுமானாலும் போய்க்கொள்ளலாம். ஆனால், அவ்விடத்திலே அப்படியில்லை போலிருக்கே!"

"பின்னே எப்படிப் போலிருக்கிறது?"

"பார்த்தீர்களா, உண்மையைச் சொன்னால் முகம் இப்படிச் சிவந்து போகிறதே—ரெயிலுக்குக் காட்டுகிற கொடி மாதிரி!"

ஏதாவது தானும் கொஞ்சம் துடுக்காகச் சொல்லவேண்டும் போலிருந்தது அரவிந்தனுக்கு. ஆனால், அதற்குள், "நீங்கள் நினைக்கிறபடி இன்றைக்கே போய்ச் சேர வேண்டுமானால், அதற்கு வழி ஏதானும் இருக்கிறதா?" என்றாள் அவள்.

"அதற்குத்தானே கேட்கிறேன். ரிப்பேர் நடக்கிற சாலை; தீனி கண்டிராத நோஞ்சல் காளைகள்; வில்லில்லாத வண்டி; பூப்போன்ற மேனி—இதெல்லாம் பொருத்தப்படவில்லையே!" என்று அரவிந்தன் அடுக்கிக்கொண்டே போனான்.

பாமினி கலகலவென்று நகைத்து விட்டு, "தேவலையே! நீ – நீங்கள் என்று சொல்லாமலேயே சமாளித்து விட்டீர்களே! அதற்கென்ன? அழைத்தால் உங்கள் வண்டியில் நான் தாராளமாக வருவேன். எனக்கு ஒன்றும் பயமில்லை. ஆனால், உங்களுக்குத்தான் சங்கடமாகப் போய்விடும். நீங்கள் இன்னொருவருக்குப் போய்ப் பதில் சொல்ல வேண்டும் இல்லையா?" என்றாள்.

அரவிந்தன் ஏதோ சொல்ல வந்தான்.

"சும்மா நீ என்றே சொல்லலாம். உங்களைவிட வயதில் நான் எவ்வளவோ சின்னவள்" என்று தைரியமூட்டினாள் அவள்.

ஜீப் வந்து விட்டது. முத்தையன் இரண்டு பேரையும் மாறி மாறிப் பார்த்து விழித்தான். பிறகு, மரியாதைக்கு அவளைப் பார்த்து ஒரு கும்பிடு போட்டுவிட்டு, அரவிந்தனிடம், "சொல்லவே இல்லீங்களே – நம்ப அம்மாவா?" என்றான்.

அரவிந்தனுக்கு அப்படிச் சொல்லிக் கொள்ள முடியவில்லையே என்ற சங்கடம் தான்! அவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே, "போய் ஸ்டேஷனிலே இருக்கும் இரண்டு பெட்டிகளையும் கொண்டு வந்து வைத்துவிட்டு, நீ பின்னால் உட்கார்ந்து கொள்!" என்றான்.

"உங்களுக்கு ஓட்டத் தெரியுமா?" என்று சந்தேகப்படுபவள் போல் கேட்டாள் பாமினி.

"ஓ! இடக்குப் பண்ணாமலிருந்தால்!" என்றான் அரவிந்தன். அப்படிச் சொல்லிவிட்டு அவளைப் பார்த்தான். அவளும் தான் பார்த்தாள்.

'டுர்' என்று ஜீப் புறப்பட்டது.

(தொடரும்)





# நாராயணீயம்

சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷிதர்

மஹாபலியின் கர்வம் தானுகவே மறைந்துவிட்டதேயல்லாமல், மஹாபலியைக் கட்டுப்படுத்தி, பகவான் அவனை அடக்கிவிட முடியவில்லை. அவனுடைய கர்வத்தைக் காரணமாகக் கொண்டு அவனை சிக்ஷிக்க முடியவில்லை. தவறு இருந்தால்தானே சிக்ஷை ஏற்படும்? தவறு மறைந்துவிட்டால் சிக்ஷை ஏது? மேலும், அந்தத் தவறுக்குப் பரிகாரமாக மிகச் சிறந்த புண்யத்தை வேறு மஹாபலி ஸம்பாதித்துவிடுகிறான். நிஷ்காம கர்மத்தில் சிறந்தவனாக விளங்குவதால் மஹாபலி மஹத்தான புண்யத்தைச் சம்பாதித்துவிடுகிறான்.

தவறு நீங்கிவிட்டதால் சிக்ஷை இல்லை என்பது ஒரு புறமிருக்க, மஹாபலியின் புண்யத்திற்குத் தகுந்த பலன் கண்டிப்பாய் ஏற்பட்டே தீரவேண்டும். மஹாபலியின் புண்யத்திற்குத் தகுந்த பலன் எது? ஸர்வகர்ம பலத்யாகம் செய்துவிட்ட மஹாபலிக்கு இனி பகவான் அடிமையாவதைத்தவிர வேறு மார்க்கமில்லை. இது வெளிப்படையாகவே ஸ்ரீமத் பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

रक्षिष्ये सर्वतोऽहं त्वां सानुगं सपरिच्छदम् ।
सदा सन्निहितं वीर तत्र मां द्रक्ष्यते भवान् ॥

ரக்ஷிஷ்யே ஸர்வதோ (அ) ஹம் த்வாம்
ஸானுகம் ஸபரிச்சதம்
ஸதா ஸன்னிஹிதம் வீர தத்ர மாம்
த்ரக்ஷ்யதேபவான்

(ஸ்ரீமத் பாகவதம் 8—வது ஸ்கந்தம் 22—வது அத்யாயம்)

“உன்னையும், உன்னைச் சேர்ந்தவர்களையும், உன்னுடைய பரிவாரங்களையும், நான் எப்பொழுதும்பாதுகாத்துக்கொண்டிருக்கப்போகிறேன். உன்னுடைய ஸந்நிதியிலேயே நான் இருக்கப்போவதால் நீ என்னை எப்பொழுதும் பார்த்துக் கொண்டிருப்பாய்” என்று பகவான் மஹாபலிக்கு உறுதிகூறுகிறார்.

இதே விஷயத்தை ஸ்ரீமத் பாகவதத்திற்கு அற்புதமாக வியாக்யானம் செய்துள்ள ஸ்ரீதரஸ்வாமிகள் இன்னும்விளக்கமாகக் கூறியிருக்கிறார்.

द्वाविंशे तु प्रसन्नः सन् प्रस्थाप्य सुतलं बलिम् ।
दत्वा वरान् हरिर्न्यूनं मत्वा तद्द्वारपो-ऽभवत् ॥

समर्पिततनूवित्तनिर्मलाचल भक्तितः ।
छलितो बलिना चित्तं स्वमेवार्पय-दच्युतः ॥

த்வாவிம்சே து ப்ரஸன்ன: ஸன்
ப்ரஸ்தாப்ய ஸுதலம் பலிம்
தத்வா வரான் ஹரிர்ந்யூனம்
மத்வா தத்த்வாரபோ (அ) பவத்
ஸமர்ப்பித தனூவித்த நிர்மலாசல பக்தித:
சலிதோ பலினா சித்தம் ஸ்வமே
வார்ப்பய த்ச்யுத:

ஸ்ரீமத் பாகவதத்தில் 8—வது ஸ்கந்தம் 22—வது அத்யாயத்தில் கூறப்பட்டிருக்கும் விஷயத்தை ஸ்ரீதரஸ்வாமிகள் இந்த இரண்டு சுலோகங்களில் கூறியிருக்கிறார்.

மஹாபலிக்கு, பகவான் ஸுதலம் என்னும் புண்யலோகத்தை சிருஷ்டித்து அங்கு அவனை தன் சுற்றத்தார்களுடனும், பரிவாரங்களுடனும், ஸகல க்ஷேமங்களுடனும் வாழும்படி செய்கிறார். அதுவும் போதாது என்று, அந்த மஹாபலியின் அரண்மனையில் வாசற்காப்பாளாகவும் இருந்துகொண்டு மஹாபலிக்குத் துணையாக இருக்கிறார். இவ்வாறு பலியை அடக்கவைத்த பகவான் தானே பலிக்கு அடங்கிவிட்ட பெருமை பகவத் அர்ப்பணத்தின் பெருமையேயாகும்.

பகவான் மஹாபலிக்கு ஸுதலம் என்னும் தனி உலகத்தையே சிருஷ்டிசெய்துவிடுகிறார். அந்த உலகத்தில் இருந்த வரையில், பகவானின் தரிசனம் எப்பொழுதும் மஹாபலிக்குக் கிடைத்துக்கொண்டிருந்தது. அதன் பிறகு ஸ்வர்க்க லோகத்தில் இந்திர பதவியும், மஹாபலிக்குக் கிடைக்கிறது. ஸ்வர்க்கத்தில் ஸகல ஸுகங்களையும் அனுபவித்துவிட்டு, ஸாயுஜ்ய பதவியையும் மஹாபலி அடைகிறான். வேதங்களில் சொல்லப்பட்ட காம்ய கர்மாக்களை ஒருவன் விதிப்படி செய்தால் ஸ்வர்க்கலோகத்தில் ஸகல ஸுகங்களையும் அனுபவிக்கும் பிராப்தி அவனுக்கு ஏற்படும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆனால் அவனுடைய புண்யங்களுக்குத் தகுந்த அளவுகாலம் தான் ஸ்வர்க்கத்தில் அவனுடைய ஸுகங்கள், அவன் செய்த புண்யங்களுக்கு ஈடான ஸ்வர்க்கலோக ஸுகங்களை அவன் அனுபவித்த பிறகு மறுபடியும் பூலோகத்தில் வந்து பிறக்கவேண்டும். இதையே ஸ்ரீமத் பகவத் கீதையில்

क्षीणे पुण्ये मर्त्यलोकं विशन्ति ।

க்ஷீணே புண்யே மர்த்ய
லோகம் விசந்தி

(புண்யம் தீர்ந்தவுடன் மறுபடியும் பூமியை ஜீவன் அடைகிறான்) என்று கூறப்பட்டிருக்கிறது.

மஹாபலி காம்யகர்மாக்கள் ஏராளமாகச் செய்திருக்கிறான். ஆகையால் அவனுக்கு ஸ்வர்க்கப் பிராப்தி கிடைக்கிறது. ஸ்வர்க்கத்தில் ஸுகத்தை அனுபவிக்க அனுபவிக்க புண்யம் குறைந்துகொண்டே வந்து, முடிவில் எல்லாப் புண்யமும் தீர்ந்துபோன பிறகு மறுபடியும் மஹாபலி பூமிக்கு வரவேண்டியதுதானே? அவ்வாறில்லாமல் அவனுக்கு நித்யானந்தமாகிய ஸாயுஜ்ய பதவியை பகவான் அளித்ததன் தாத்பர்யம் என்னவென்ற ஐயம் எழலாம். ஸாயுஜ்ய பதவி நிஷ்காமகர்மிகளால் தான் அடையத்தகுந்தது. மஹாபலி வெறும் காம்ய கர்மாக்களைமாத்திரம் செய்யவில்லை. ஸர்வகர்ம பலத்தியாகம் செய்து நிஷ்காமகர்மியாக விளங்கினான். ஆகையால் அவனுக்கு ஸாயுஜ்ய பதவியும் கடைசியாகக் கிடைத்துவிடுகிறது.

சிரத்தை மிகுந்த மஹாபலிக்கு இவ்வளவு மேன்மையைக் கொடுத்தருளிய பகவானைப் பார்த்து ஸ்ரீ நாராயண நம்பூதிரி உலகத்திலுள்ள எல்லோரையும் पाहि (பாஹி) என்ற சொல்லைக் காப்பாற்றவேண்டும் என்ற கருத்தில் சொல்லியிருக்கிறார். “மாம்பாஹி” என்னைக் காப்பாற்றுங்கள் என்று பொருள். நம்பூதிரி அவ்வாறு சொல்லாமல் “பாஹி”—என்று மட்டும் சொல்லியதிலிருந்து உலகம் முழுவதையும் காப்பாற்றுங்கள் என்று ஸ்ரீ குருவாயூரப்பனைப் பார்த்துப் பிரார்த்திக்கிறார். இந்தக்கலியிலும் கண்கண்ட தெய்வமாக விளங்கிக் கொண்டிருக்கும் ஸ்ரீ குருவாயூரப்பனைப் பார்த்து இவ்வாறு பிரார்த்தித்தபோது “அப்படியே ஆகட்டும்” என்று அந்த பிம்பம் தலையை அசைத்து ஆமோதித்தது உலக க்ஷேமத்தின் அறிகுறி.

## ஸ்ரீ நாராயணீயம்
## 32-வது தசகம்

# மத்ஸ்யாவதாரம்

(இதைப் படிப்பதால் நினைத்த காரியங்கள் யாவும் கைகூடும் என்று சுகாசாரியர் கூறுகிறார்.)

ஸ்ரீய: பதியான பகவான் முதன் முதலில் ஜீவராசியின் உருவில் தோன்றியது மீன் உருவத்தில்தான். வாத ரோகத்தால் பீடிக்கப்பட்ட ஸ்ரீ நாராயண நம்பூதிரி பகவானை எப்பொழுதும் பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார். ஒரு சமயம் ஒரு ஜோஸ்யரிடம் சென்று ஸ்ரீ நாராயண நம்பூதிரி தன்னுடைய வாத ரோகத்திற்குப் பரிகாரம் ஏதாவது சொல்லுமாறு கேட்டார். அதற்கு அந்த ஜோஸ்யர் நம்பூதிரியை குருவாயூருக்குச் சென்று, அங்கு ஸ்ரீ குருவாயூரப்பன் ஸன்னிதியில் மத்ஸ்யத்தை (மீனை) நாவில் வைத்துக்கொண்டிருக்கும்படிச் சொன்னார்.

சாதாரண மனிதனாயிருந்தால், மீனை நாக்கில் படும்படி வைத்துக்கொண்டு குருவாயூரப்பன் ஸன்னிதியில் உட்கார்ந்திருப்பது ஒரு வைத்ய சிகித்ஸை என்று எண்ணுவது இயல்பு. ஸ்ரீ நாராயண நம்பூதிரி பரம பக்தரானதால், அந்த ஜோஸ்யர் சொன்ன தன் தாத்பர்யத்தைப் புரிந்துகொண்டு விட்டார்.

ஸ்ரீ நாராயண நம்பூதிரி உடனே குருவாயூருக்குச் சென்று அங்கு புஷ்கரணியில் ஸ்நானம் செய்து, ஸ்ரீ குருவாயூரப்பன் ஸன்னிதியில் போய் நின்றுகொண்டு ஸ்ரீ பகவான் மத்ஸ்யாவதாரம் செய்த மஹிமையைப்பற்றி ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்து விட்டார். மத்ஸ்யாவதாரத்தை ஸ்தோத்திரம் செய்யும்போது மீன் நாக்கில்தானே இருக்கும்!

உலகில் முதன் முதலில் ஜீவராசிகள் தோன்றிய இடம் ஜலம்தான் என்று இன்றைய விஞ்ஞானிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். நம்முடைய முன்னோர்கள் இந்த உண்மையை எத்தனையோ காலத்திற்கு முன்பே அறிந்திருந்தார்கள். ஜீவராசிகளின் பரிணாமத்தின் ஆரம்பம் ஜலத்தில் வசிக்கும் பிராணிகளே யாகும். எல்லா ஜீவராசிகளிலும் பகவான் இருக்கிறார் என்ற கொள்கைப்படி முதல் ஜீவராசியாகிய மீனிலும் பகவான் இருக்கிறார் என்பதைத் தெரியப்படுத்தவே மத்ஸ்யாவதாரம் போலும்!

**आपो वा इदमग्रे सलिलमासीत्**

என்று வேதமும்,

**अपएव ससर्जादौ**

என்று ஸ்மிருதியும் கூறுகின்றது. ஆகையால் ஜீவராசிகள் முதன் முதலில் ஜலத்திலேயே தோன்றின என்பது வெளிப்படை.

ஸ்ரீ நாராயண நம்பூதிரியும் ஸ்ரீ பகவானை ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்துக் கொண்டு பகவானுடைய திரு அவதாரங்களை விவரிப்பதான ஸ்ரீமத் பாகவதத்தின் ஸாரமாக ஸ்ரீ நாராயணீயம் என்னும் அற்புதமான பக்தி கிரந்தத்தை 1034 ஸ்லோகங்களால் வர்ணிக்கிறார்.

நம்பூதிரி ஸ்ரீ குருவாயூரப்பனைப் பார்த்து ஒவ்வொரு ஸ்லோகத்திலும் "இவ்வாறு நடந்ததாமே! இது ஸத்தியம் தானே?" என்று ஸ்ரீ குருவாயூரப்பன் பிம்பத்தைப் பார்த்துக் கேட்டு, அதற்கு அந்த பிம்பம் சிரக்கம்பம் செய்து ஆமோதித்தால்தான் அதற்கு அடுத்த ஸ்லோகத்தை ஆரம்பிப்பாராம். அவ்வாறு தலையை அசைக்காமல் பிம்பம் இருந்தால், தன் தலையை ஸ்ரீ குருவாயூரப்பனின் சன்னிதியிலேயே முட்டிக்கொண்டு கண்ணீர் விட்டுக் கதறுவார். அந்த பக்தனின் ஆச்சரியமான பக்தியைப் பார்த்து அந்த கல்லாயிருக்கும் குருவாயூரப்பன் இக் கலியிலும் தலையை அசைத்து நம்பூதிரியின் ஒவ்வொரு பிரச்னையையும் ஆமோதித்தது ஒரு மகத்தான அற்புதம்.

கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக ஸ்ரீ குருவாயூர் அப்பன் இன்னும் குருவாயூரில் விளங்கிக்கொண்டிருக்கிறார். பக்தர்கள் மனமுருகி நாராயணீயத்தை அந்த சன்னிதியில் வாய்விட்டுப் பாடுகின்றனர். அவர்கள் நாராயணீய ஸ்லோகங்களைச் சொல்லும்போது கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் வழிந்துகொண்டிருக்கும். பிரஹஸ்பதியான குருவும், வாயு பகவானும் சேர்ந்து ஸ்ரீ கிருஷ்ண விக்ரஹத்தை மலையாளப் பிரதேசத்தில் ஓரிடத்தில் பிரதிஷ்டை செய்த காரணத்தால், அந்த இடத்திற்கு குருவாதபுரி (குருவாயூர்) என்றும், அந்த மூர்த்திக்கு 'குருவாதபுரேசன்' (குருவாயூரப்பன்) என்றும் பக்தர்கள் பெயரிட்டு அழைக்கிறார்கள். அவ்வளவு பெருமை வாய்ந்த குருவாயூரப்பனின் மஹிமையை அங்கு செல்லும் பக்தர்கள் ஒவ்வொருவரும் உணரக்கூடிய சம்பவங்கள் நடந்துகொண்டே இருக்கின்றன. அம்மாதிரி சம்பவம் ஒன்றை இங்கு கூறுவது அவசியமாகிறது; மிகப் பொருத்தமுங்கூட. இச்சம்பவம் சமீப காலத்தில் நடந்தது.

பாலக்காட்டிலுள்ள சாத்தபுரம் கிராமத்தில் ஸ்ரீ சி. எஸ். ராமகிருஷ்ண காரியக்கார் என்ற பக்தர் ஒருவர். அவருடைய பத்னி ஸ்ரீ லக்ஷ்மியம்மாள் அவர்களுக்கு ஸ்வாமிநாதன் என்ற சத்புத்ரன் பிறந்தான். அந்தக் குழந்தைக்கு மூன்று வயது ஆகும் பொழுது ஸ்ரீ குருவாயூரப்பன் ஸன்னிதியில் நேந்திரம் பழத் துலாபாரம் போடுவதாக பக்தி சிரத்தையுடன் பெற்றோர்கள் வேண்டிக்கொண்டார்கள். தங்களுடைய பையனுக்கு 21 வயது ஆகும் வரையில், அந்த பிரார்த்தனையை நிறைவேற்ற அவகாசம் கிடைக்கவில்லை. பையனுடைய 21 வது வயதில் அந்தப் பையனும், அவன் தாயாரும், பிரார்த்தனையை நிறைவேற்ற குருவாயூருக்குச் சென்றனர்.

டிக் கரை போட்ட 10 முழப் பட்டு வஸ்திரத்தை உடுத்திக்கொண்டார். தாயார் பையனைப் பார்த்து, பட்டு வஸ்திரம் வேண்டாம் என்றும் மெல்லிய மல் துண்டு கட்டிக்கொண்டால் போதுமென்றும் சொன்னார். பையனும் தாயாரின் சொல்படி ஒரு மெல்லிய மல் துண்டை கட்டிக்கொண்டு தராசின் ஒரு தட்டில் உட்கார்ந்து கொண்டார். மற்றொரு தட்டில் நேந்திரம் பழங்கள் வாங்கி வைக்கப்பட்டன. அவரவருடைய நிறைக்குச் சமமான எடையுள்ள நேந்திரம் பழங்களை ஸ்ரீ குருவாயூரப்பனுக்கு நைவேத்தியம் செய்து விநியோகம் பண்ணுவதுதான் நேந்திரம் பழத்துலாபாரம் எனப்படுவது.

அவர் தராசின் ஒரு தட்டில் உட்கார்ந்து மற்றோர் தட்டில் அந்த ஊரிலுள்ள கடைகளில் கிடைத்த நேந்திரம் பழம் முழுவதையும் வாங்கி வைத்தாகி விட்டது. தராசு முள் நேராக வரவேயில்லை! தாயாருக்கும் பையனுக்கும் ஒன்றும் புரியவே இல்லை. என்ன செய்வது என்று தோன்றாமல் கலக்கம் அடைந்திருந்த பொழுது அவ்வூரிலுள்ள ஓர் ஆஸ்திக பிரமுகர் அங்கு வந்து சேர்ந்தார். பாரம் சரிக்கட்டப்படாத துலாபார சமாசாரத்தை அவர் கேள்விப்பட்டு அந்தப் பையனிடம், "தராசில் உட்காரு முன் உன் தாயார் உன்னிடம் ஏதாகிலும் சொன்னாளா? அல்லது நினைத்தாளா?" என்று கேட்டார். அதற்கு அந்தப் பையன் கெட்டிப் பட்டுக்குப் பதிலாக லேசான மல் துண்டைக் கட்டிக்கொள்ளுமாறு தாயார் சொன்னதை அந்த பெரியவரிடம் கூறினர்.

உடனே அந்த ஆஸ்திகப் பெரியவர் பையனைத் தராசு தட்டிலிருந்து கீழே இறங்கும்படிச் சொல்லி, அந்தக் கெட்டிப் பட்டையே கட்டிக்கொள்ளும்படியும், மறுபடியும் தராசு தட்டில் உட்காரும்படியும் கூறினர். பையனும் அவ்வாறே செய்தான். உடனே ஏற்கனவே வைத்திருந்த பழங்களில் பாதிக்கு மேல் எடுக்கும்படியாகிவிட்டது!

இவ்வாறு, பக்தர்கள் மனதில் ஒரு சிறு களங்கம் ஏற்பட்டாலும் அதை ஸ்ரீ குருவாயூரப்பன் உடனே எடுத்துக் காட்டாமல் இருப்பதில்லை. அந்தப் பையன் இன்றும் ஸ்ரீ குருவாயூரப்பன் அனுக்ரஹத்தால் மிகவும் ஆஸ்திகராகவும் மிகவும் மேதாவியாகவும் விளங்கிக்கொண்டு சென்னை ஆர்ட்ஸ் கல்லூரியில் சமஸ்கிருத பேராசிரியராக வேலை பார்த்து வருகிறார்.

இதே மாதிரியாக ஸ்ரீ குருவாயூரப்பனின் பெருமையை விளக்கக்கூடிய எவ்வளவோ சம்பவங்களை குருவாயூர் க்ஷேத்திரத்தில் பக்தர்கள் தெரிந்துகொள்ளுகிறார்கள். கலியுக தெய்வமான அந்த குருவாயூரப்பன் ஸன்னிதியில் முதன் முதல் ஸ்ரீ நாராயண நம்பூதிரி மத்ஸ்யாவதாரத்தைப் பாடியதிலிருந்து, பகவானுடைய மத்ஸ்யாவதாரத்திற்கே ஒரு பெருமை ஏற்பட்டுவிட்டதென்று சொல்லிவிடலாம்.

# நீலம்

'மகரம்'

கடவுள் சிருஷ்டித்த முதல் நிறம் நீலம்தான் என்று நான் சொல்லும் போது அதை யாராலும் ஆட்சேபிக்க முடியாது என்பது எனக்குத் தெரியும். வானத்தையும் கடலையும் அவர் சிருஷ்டித்தபோதே நீலவண்ணத்தையும் உடன் படைத்திருக்க வேண்டுமல்லவா? வானமும் கடலும், தீயும் கோள்களும், காற்றும் பூமியும் தோன்றிய பிறகுதானே மனிதனோ மற்றைய உயிர்ப்படைப்போ தோன்றியிருக்க முடியும்? நீலவான் முதலில் தோன்றியிராவிட்டால், அதில் முளைத்தெழும் முழுமதி தன்னுடைய பால் நிலவின் வெண்மையை அதனுடன் எப்படிக் கலக்கமுடியும்? நீலக் கடல் இல்லாவிட்டால், மாலை சூரியனின் மஞ்சள் ஒளிபட்டு அது பச்சைக் கடலாகப் பரிணமிப்பது எங்ஙனம் சாத்தியமாகும்?

நீலநிறம் அமைந்த பொருள்கள் மிகவும் சிலவே, ஆனால் அவை சாதாரண பெருமை வாய்ந்தவையா? கடல், வானம், மலைகள் நீலநிறம் பெற்றவை! "விண் நீல மேலாப்பு விரித்தாற்போல" விளங்கும் சூலுண்ட மேகங்களின் நிறம் நீலம். விஷத்தின் நிறம் நீலம். காதலனைக் காற்றிலேறி, நீல விண்ணைச் சாடும்படிப் பணிக்க வல்ல காதற் பெண்ணின் கண்களின் நிறம் நீலம், திருமாலின் நிறம் நீலம். காயாம்பூவின் வண்ணம் நீலம். இவ்வளவு குறைந்த எண்ணிக்கையில் அடங்கினாலும், நீல நிறப்பொருள்களின் பெருமை கடலைவிட, ஆகாயத்தை விடப் பரந்ததாகும்.

கடவுள் படைப்பில் நீலவான் முதலிடம் பெற்றதுபோலவே, கவிஞர்களின் வர்ணனையிலும் நீலவானம் முதலிடம் பெற்றிருக்கிறது எனலாம். "ஞாயிறு போற்றுதும்" என்று சூரியனைத் துதிக்கும் முன், "கவிதை அணங்குவாழ் வெண்மலரோ—சூறைக் காற்றுக்கும் அணையா தீபமதோ?" என்று மதியை மதிப்பிடுவதற்கும் முன், "அந்தரமாகிய சல்லடையில் ஒளிர் அளவில் துவாரமோ தாரகைகள்?" என்று நட்சத்திரங்களைப் பார்த்து அதிசயிக்கும்முன், நீலவானத்தைப் பார்த்து அதனுடைய எல்லையற்ற அழகில் சொக்கி மனம் நெகிழாதவன் கவிஞன் என்னும் பெயருக்கே தகுதி இல்லாதவன்.

"மலரினில், நீலவானில்,
மாதரார் முகத்தில் எல்லாம்
இலகிய அழகை ஈசன்
இயற்றினான்..."

என்று மகாகவி பாரதியார் நீலவானை நடுநாயகமாக வைத்துப்பாடி இருக்கிறார்! வானம் இல்லாவிட்டால், அழகிய மாதுக்கு அழகிய மலரைச் சூட்டின ஆண்தகை, எங்ஙனம் அவளுடைய காதலுக்கு அதைச் சாட்சியாக வைத்து ஆணை இட இயலும்! பிறகு, காதலனைப் பிரிந்த காதலி,

". . . . . .திங்கள் சுடர்பட்டுக்
கொப்புளம்கொண்ட குளிர்வானை—
இப்பொழுது
மீன் பொதிந்து நின்ற விசும்பென்ப
தென்கொல்லோ?"

என்று விபரீதமாக வியாக்கியானம் செய்வதுதான் எப்படி முடியும்! நீல விதானத்து நித்திலம்போல ஒளிவிடும் தாரகைகள், விசும்பில் கண் சிமிட்டும் நக்ஷத்திரங்கள் அல்லவா! காதலனைப் பிரிந்த நிசிராணியின் உடலில், சந்திரனுடைய ஒளிபட்டவுடன் அந்த வெப்பம் தாளாமல் அவளுடைய மேனியில் பொடித்த கொப்புளங்களே அவை என்பது தமயந்தி தேவியின் கட்சி. நீலவானத்தை ரசிப்பவர்களில் இப்படியும் ஒரு வகை. பெண்களின் கற்பனைக்குக் கேட்கவேண்டுமா?

நீலவானம், தொடுவானத்திலே, நீலக் கடலுடன் நேசம் கலந்த பேச்சுக்கள் பல பேசுவதைக் காணும் வாய்ப்புப் பெற்றவர்கள் சிலரே. யாருக்கும் எட்டாத எழில் வானை எட்டிப்பிடித்துவிட்டோம் என்ற இறுமாப்பு கடலுக்கு! ஓயாமல் சளசளவென்று ஆர்ப்பரித்துக்கொண்டிருந்த நீலக்கடற் கன்னியைப் பேச்சற்றவளாகச் செய்து, மோன நெறிக்குக் கொண்டு வந்துவிட்டோம் நாம் என்ற கர்வம் நீல வானுக்கு! வானத்தின் கருநீலமும், கடலின் நீலக் கருமையும் தொடுவானில் கலந்து உலகுக்குத் தண்மதியையும், ஒண் கதிரையும் தந்ததுபற்றி உலக மக்களாகிய நமக்கு உவகை!

கடலும் மனமும் ஒரே தன்மையன. ஆழம் காண முடியாதவை இரண்டும். அத்துடன் ஓயாமல் சலித்துக்கொண்டிருப்பவை; நீல அலைகளைவிட மன அலைகள் நீளமானவை! "நீலக்கடல் அலைபோல் என் நெஞ்சம் நிமிர்ந்து பொங்கிடவும்" என்று ஒரு காதலி தன் மன நிலைக்குக் கடல் அலையை உதாரணமாகக் காட்டுகிறாள். உதாரணங்கள் எப்போதும் ஏகதேசம்தான் பொருந்தி இருக்கும்!

"எண்ணம் உதிக்கப்—பல
எண்ணம் உதிக்க—நீல
வண்ணக் கடலின்மேல் மின்னும்
அலைகள்போல்"

என்கிறார் கவிஞர் கம்பதாஸன். ஆமாம்; சிந்தனை அலைகளுக்கு முன்பு விழுந்து புரண்டு வந்தனை செய்யவேண்டியவையே நீலக்கடல் அலைகள்!

"நீலத்திரை கடல் ஓரத்திலே நித்தம் தவம் செய்யும் குமரி"யானவள் தமிழ் நாட்டின் எல்லைக்குள் வந்துவிட்டது நமக்கெல்லாம் மகிழ்ச்சிதான். ஆனால், "காயா மலர் வண்ணன் மேய வேங்கடம்" தமிழ்நாட்டில் இல்லையே என்ற குறை நமக்கு உண்டு. வேங்கடத்தான் எங்கிருந்தாலும் நம் உள்ளத்துள் உள்ளான் என்று நம்மால் ஆறுதல் பெறமுடியும். அல்லது பார்க்கும் நீல மலைகளை எல்லாம் எம் பெருமான் கோயில்கொண்ட திருப்பதிகளாக நாம் கருதமுடியும்.

நீல மலைகள் வானவிதானத்துக்குக் கட்டப்பட்ட விளிம்பு மடிப்புகள் போன்றவை! எத்தனை எத்தனைவிதமான மலைகள்! தூரத்து மலையின் நிறம், எம்பெருமானின் நீல நிறம். மலையை நெருங்கிக் கவனித்தால் அதனுடைய நீலநிறம் மறைந்து, வெறுப்பையூட்டும் கறுப்பாகவோ அல்லது செழிப்பற்ற பழுப்பு நிறமாகவோ அது காட்சியளிப்பது

தெரியவரும். எம்பெருமான் ஒருவன் தான் குளிர் நீல நிறத்துக்குக் குறைவு வராமல் நீல ஒளி காட்டி நம்முடைய நெஞ்சத்தை நிறைத்துவருகிறுன்.

நீல மலைகள் நிரம்ப அழகியன. நீலமேகம் படிந்துள்ளபோது அம்மலையின் சிகரங்கள் மேகத்தினூடே கண்ணு மூச்சியாடும் காட்சி குழந்தைகளைவிடப் பெரியவர்களுக்கே ரசமாக இருக்கும். நீல வானில், நீல மேகங்கள் தழைத்து, அது மழைத்த வானமாக மாறும்போது அளிக்கும் காட்சியை வர்ணிக்க ஒரு மகா கவிதான் வரவேண்டியிருக்கிறது.

"நஞ்சினில், நளிர் நெடுங்கடலில், நங்கையர்
அஞ்சன நயனத்தில், அவிழ்ந்த கூந்தலில்,
வஞ்சனை அரக்கர்தம் வடிவில், செய்கையில்,
நெஞ்சினில் இருண்டது நீலவர்ணமே!"

என்பது கம்பரின் கார்கால வர்ணனை.

ஆம்; நாம் விவரிக்க மறந்துவிட்ட நீலநிறப் பொருள்கள் சிலவற்றையும் கம்பர் ஞாபகப்படுத்துகிறுர். பெண்களின் கண்கள் நீல நிறமானவைதானே! கடல் எப்பொழுது நீல நிறமோ அப்பொழுது கடலினும் பெரிய கண்கள் மேலும் நீலமாகத்தானே இருக்கவேண்டும்? பெண்களின் கண்களுக்கு நீலோத்பல மலர் உவமையாவது மிகவும் பொருத்தமே. இக்கண்களை "நதியிலும் குளத்தும் பூவா" குவளை மலர்கள் என்கிறுர் கம்பர்! "நீலத்துண்கள் மங்கையர்" என்றும், "வண்ண வாய்க் குவளை வாட்கண் கருப்பன்ஞர்" என்றும் அவரே கூறுகிறுர்.

விஷத்தின் நிறமும் நீலமாக அமைந்திருப்பது ஒரு விந்தைதான்! "அழகுப் பொருள்களின் நீலநிறத்துக்கும், அழிவுப் பொருளான நஞ்சின் நீல நிறத்துக்கும் வித்தியாசமே கிடையாதா?" என்று கேட்டால், "மங்கையரின் அஞ்சன நஞ்சு தடவிய நீலக் கண்கள் அழிவையும் உண்டாக்கக்கூடியவையல்லவா? மன்மதனின் ஐந்து அம்புகளில் கடைசி அம்பான நீலோத்பலத்தை அவன் பிரயோகித்தவுடன், காதல் போய் சாதல் அல்லவா நேரிட்டுவிடும்!" என்று பதிலுக்குக் கேட்பார்கள் விஷ(ய)மறிந்தவர்கள்! "ஒப்புடை ஒளி நீலம் ஓங்கிய மலர்ப் பொய்கைகள்" எல்லாம் மன்மதனுடைய கொலைக் கருவிகள் தயாரிக்கப்படும் தொழிற்சாலைகள் என்ருல் முதலில் நம்புவதற்குக் கஷ்டமாகத்தானே இருக்கிறது?

பாற்கடலில் நீல விஷம் பிறந்த போதும் அப்படித்தான் முதலில் நம்பவே முடியவில்லையாம். அமுதம் வேண்டி உழைத்தவர்களுக்குக் கிடைத்த பரிசு விஷமாக இருந்தது! தேவரும், அசுரரும், யாவரும் அந்த விஷ வாடைக்குமுன் வாடத் தொடங்கும்போது சிவபெருமான் "அஞ்சல், அஞ்சல்!" என்று வந்து அந்த நஞ்சை உண்டு நெஞ்சில் அடக்கினராம். இதனுல்தான், "நஞ்சமே யமுதமாக்கும் நம்பிரான்", என்கிறுர் மாணிக்கவாசகர்.

"கோலாலமாகிக் குரைகடல்வாய் அன்றெழுந்த
ஆலாலமுண்டான் அவன் சதுர்தான் என்னேடி!"

என்று நீலகண்டனுடைய சாமர்த்தியத்தை நாமும் வியந்து பாராட்டுகிருேம்.

அசுரர்களுடைய நிறமும் நீலம்தான். "நீலமாமணி நிற நிருதர் வேந்தனை, மூலநாசம் பெற முடிக்கும் மொய்ம்பினுள்," என்று சூர்ப்பனகையை அறிமுகப் படுத்தும் இடத்தில் அரக்கர்களுடைய உருவின் நிறத்தைச் சொல்லி உள்ளத்தின் நிறத்தையும் குறிப்பாகச் சொல்கிறுர் கம்பர். "நீலக் கார்முகில் கமலம் பூத்து மண்ணுற்று வரிவில் ஏந்தி" வந்தது போல ராமர் அவதாரித்தது, நெஞ்சிலே நஞ்சின் நீலம் பாய்ந்த வஞ்சனை அரக்கரை மாய்ப்பதற்குத்தான்.

நீலமாமணி நிற நிருதர்களாலும், நீலோத்பல விழி மங்கையர்களாலும் நினைத்துக்கொண்டே இருக்கப்படுவதனுல்தானே என்னமோ திருமாலின் நிறம் நீலமாகவே நின்றுபோய்விட்டிருக்கிறது! ஆழ்வார்கள் எல்லாம் திருமாலின் நீனிறக் கடலில் நீந்தி முக்குளித்திருக்கிறுர்கள்.

"நீலமேனியும், நான்கு தோளும் என்
நெஞ்சம் நிறைந்தனவே"

என்பது நம்மாழ்வார் வாக்கு.

"நீலமலர் நெடும் ஜோதி சூழ்ந்த
நீண்ட முகில் வண்ணன்"

என்றும்,

"மாலுக்கு, வையம் அளந்த மணுளற்கு,
நீலக்கரு நிறமேக நியாயற்கு"

என்றும் அவரே எம்பெருமான் திருமேனியின் நீல நிறத்துக்கு அடிமையாகிறுர். திருமாலே தன்னைப்பற்றிக் "காண்கின்ற விசும்பு எல்லாம் யானே" என்றும், "காண்கின்ற கடல் எல்லாம் யானே" என்றும் சொல்லிக்கொள்ள வேண்டுமேயானுல் கொண்டல்வண்ணனை கோவிந்தனுக்கு, நீலமுகில் வண்ணத்தெம்பெருமானுக்கு, அந்த நீல நிறத்தின்மீது எத்தகைய மோகம் இருக்க வேண்டும்!

ஆண்டாளேதான் நீலமாக இருப்பதைப்பற்றிப் பெருமையாகப் பேசும்போது, அந்த ஆண்டானின் அடியார்களான ஆழ்வார்கள் ஆண்டவனைப்பாடும் போது நீல நிறத்தையும் பாடாமல் விட்டுவைப்பார்களா?

"நீலமேனி, ஐயோ, நிறைகொண்டது
என் நெஞ்சினையே!"
"கடல் வண்ணு! கதறுகின்றேன்!
காரொளி வண்ணனே, என்
கண்ணனே கதறுகின்றேன்!"
"கண்ணுர் கடல் போல் திருமேனி
கரியாய்!"
"கோலமே! தாமரைக் கண்ணது
ஓர் அஞ்சன நீலமே!..."

என்பன நீலநிற அடியார்கள் பாடிய சில அடிகள்!

பாரி பறித்த பறியைவிட, காரி கொடுத்த களைக்கொட்டைவிட, சேரமான் அன்புடன் "வா" என்று அழைத்த வார்த்தையைவிட, ஔவையாருக்கு ஒரு சிறு பெண் கொடுத்த சிற்றுடை உயர்வானதாக இருக்கவேண்டுமென்ருல், அது "நீலச் சிற்றுடை"யாக இருந்ததுதான் காரணம் என்று சொல்லவும் வேண்டுமோ?

கறுப்பும் நீலமும் கிட்டத்தட்ட ஒரே நிறம்தான்! நமக்குப் பிடித்திருந்தால், வேண்டியிருந்தால், "இந்திர நீலம்" என்று அதைப் புகழலாம். பிடிக்காதிருந்தால் "அட்டைக்கரி" என்று ஒதுக்கலாம்! இதனுல்தான் கருமையை "நீலக் கருமை" என்றும், நீலத்தைக் "கரு நீலம்" என்று வர்ணித்தார்கள் ஆன்ருேர்கள். மாமனரின் அந்தஸ்தும், அவர் கொடுக்கும் வரதட்சிணையிலுள்ள பூஜ்யங்களும் திருப்தியாக இருந்தால் பெண் கறுப்பாக இருந்தாலும் அவள் பார்வதி தேவியாகக் காட்சியளிக்கமாட்டாளா? மாப்பிள்ளை நான்கு கைகளாலும் சம்பாதிப்பவனாக இருந்தால் அவன் கரிக்கட்டையானுலும் மன்மதனாகத் தெரியமாட்டானா? வாழ்க, நீலகண்டமும், நீல

## நடப்பதும்...?...நடக்காததும்!






சிறுவர் கதை

# தாயன்பு

அஸ்வத்தாமா



வெள்ளிப் பனி மலையான இமய மலையின் சாரலிலே ஒரு காடு இருந்தது. அந்தக் காட்டிலே புத்த தேவர் ஒரு காலத்தில் யானையாகப் பிறந்திருந்தார். அந்த யானை மற்ற யானைகளைக் காட்டிலும் கம்பீரமாகவும், உறுதியான தந்தங்களுடனும் விளங்கியது. அதன் அழகு மற்ற யானைகளை எல்லாம் வசீகரித்தது. அந்தக் காட்டிலுள்ள எண்பதாயிரம் யானைகளும் ராஜ காம்பீர்யம் மிகுந்த அந்த யானையையே தங்கள் அரசாக ஏற்று, கஜாராஜன் என்ற பெயரும் சூட்டிப் போற்றி வந்தன. அரச பதவி ஏற்றுவிட்டபடியினால்; ஆட்சியை ஒழுங்காக நடத்துவதற்காக காட்டின் பல பாகங்களுக்கும் செல்லவேண்டியிருந்தது, கஜாராஜனுக்கு. ஆகவே முதுமையடைந்து, கண்ணும் சரியாகத் தெரியாத தனது தாயை முதலில் தான் வசித்த ஒரு குகைப் பகுதியிலேயே விட்டு விட்டுச் செல்ல வேண்டி வந்தது.

தாயைப் பிரிந்திருப்பதில் கஜாராஜனுக்கு மிகவும் வருத்தந்தான். கண்ணும் கருத்துமாகத் தன்னைக் காப்பாற்றிய தாயை, கண் தெரியாமல் கிழப் பருவம் அடைந்துள்ள இந்த சமயத்தில் விட்டுப் போகிறோமே என்று ஒரு புறம் துக்கமாகவே இருந்தது அதற்கு. என்றாலும், எங்கே போனாலும், அங்கங்கே கிடைக்கும் ருசி மிகுந்த பழங்களையும், அருமையான தென்னங் குருத்துக்களையும் நம்பிக்கையான வேலைக்கார யானைகள் மூலம் தாய்க்கு அனுப்பி வந்தது.

ஆனால், கஜாராஜன் அனுப்பிய பண்டங்கள் எதுவும் அதன் தாய்க்குப் போய்ச் சேரவில்லை! நம்பிக்கையான ஆட்கள் என்று கஜாராஜன் கருதிய வேலைக்கார யானைகள் நாக்கில் ஜலம் சொட்டச் சொட்ட அவற்றைத் தின்று ஏப்பம் விட்டன! அவ்வளவு ருசியான பண்டங்கள் அவைகள். தாய்க்கு அன்போடு கொடுத்தனுப்பிய பொருள்களல்லவா?

கஜாராஜனின் தாய் தனது மகனிடமிருந்து ஏதும் கிடைக்காததால் தட்டுத் தடுமாறிப் புல்லும் தழையும் கண்டுபிடித்துச் சாப்பிட வேண்டியதாயிற்று. பாவம், தள்ளாத வயதில் பக்கத்தில் மகன் இல்லாத குறை அவளைப் பெரிதும் வாட்டியது.

தான் அனுப்பிய பண்டம் எதுவும் தனது கிழத் தாய்க்குக் கிடைக்கவில்லை என்பதைக் கேட்ட கஜாராஜனுக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. உடனே தான் உணவுப் பொருள்கள் கொடுத்தனுப்பிய வேலைக்கார யானைகளை அழைத்து விசாரித்தது. அவையும் குற்றத்தை ஒப்புக் கொண்டன. கஜாராஜனுக்கு அவற்றைச் செம்மையாக தண்டிக்க முடியும். அவைகளை வேலையிலிருந்து நீக்குவதும் யானைகளின் மன்னராகிய அதற்கு சாத்தியமே. என்றாலும், அது அப்படிச் செய்யவில்லை. 'மன்னிப்பதே பெருங் குணம்' என்று, அவைகளை மன்னித்து, ஒழுங்காக இருக்கும்படி புத்தி கூறி அனுப்பியது.

அப்பொழுதே கஜாராஜன் தன் மனத்திற்குள் ஒரு தீர்மானம் செய்து விட்டது. "நான் இந்தப் பதவியைத் துறந்து தாயிடம் சென்றே ஆகவேண்டும். உடல் தளர்ந்து முதுமைப் பருவம் அடைந்துள்ள எனது தாயின் அருகில் இருந்து அவள் மீது அன்பையும், பக்தியையும் பொழிந்து அருமையாகக் காப்பாற்ற வேண்டும்" என்று அது முடிவு செய்து விட்டது.

நினைத்தபடியே, தன்னைச் சுற்றியுள்ள பரிவார யானைகளெல்லாம் குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருக்கையில், ஓசைப் படாமல் தாய் இருக்கும் காட்டை

நாடி நடையைக் கட்டியது கஜராஜன்!

தாயை அடைந்த கஜராஜன் அன்போடு வணங்கி, இன்னொரு மலையடிவாரத்திலுள்ள வேறொரு வசதியான குகைக்கு அழைத்துச் சென்று, சிறந்த உணவுப் பொருள்களையும், பழங்களையும் கொண்டு வந்து கொடுத்துத் தாயை விட்டுப் பிரியாமல் வாழ்ந்து வந்தது.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் காட்டிலாகா அதிகாரி ஒருவர் அந்த வனாந்தரத்தில் வழி தெரியாமல் மாட்டிக்கொண்டு தவித்தார். பாவம்! ஏழு நாட்களாக அவர் பட்டினி! ஊருக்குப்போகும் வழி தெரியாத அவர், காட்டில் கதறி அழுதுகொண்டிருந்தார்.

அழுகை யொலி கேட்ட கஜராஜன், ஒலி வந்த திசையே சென்று காட்டிலாகா அதிகாரி இருந்த இடத்தை அடைந்தது. பிரம்மாண்டமான யானையைக் கண்ட அந்த அதிகாரி பயத்தால் மேலும் கதறினார். ஆனால், கஜராஜன் அவரிடம் அன்பாகப் பேசி "என்ன விஷயம்?" என்று பரிவோடு விசாரித்தது.

"ஏ, வனராஜனே! நான் ஊருக்கு வழி தெரியாமல் காட்டில் மாட்டிக்கொண்டு விட்டேன். ஏழு நாட்களாகக் கடும் பட்டினி; சோர்வும் பசியும் என்னை வாட்டுகின்றன. என் வீட்டில் குழந்தை, குட்டிகள் எல்லாம் என்னைக் காணாமல் தவிக்கும். ஆகவே நான் வீடு போய்ச் சேர்ந்தாக வேண்டும்..." என்று கூறித் தேம்பித் தேம்பி அழுதார்.



ஏண்டா மணி, ஒரு நாளைக்கு 3 ஆழாக்கு வீதம் ஒரு மாசத்துக்கு எவ்வளவு ஆச்சுன்னு சொல்லு...வாசல்லே பால்காரன் காத்துண்டிருக்கான்......

அட போ அம்மா, எனக்கு கணக்குப் பரீட்சை. தொந்தரவு

கஜராஜனின் உள்ளத்தில் கருணை சுரந்தது. முன்னங் காலைத் தரையில் மடித்து, காட்டிலாகா அதிகாரியைத் தன் மீது ஏறிக் கொள்ளுமாறு கூறி அவரைச் சுமந்துகொண்டு தலைநகருக்குப் போகும் பாதையில் இறக்கி விட்டு விட்டு, தாயைக் கவனித்துக்கொள்ளக் காட்டை நோக்கி 'விடு வி'டென்று வேகமாகத் திரும்பியது.

அந்தக் காட்டிலாகா அதிகாரி மிகவும் கொடியவன். அவன் பல காட்டு மிருகங்களை வேட்டையாடி உயிருடன் பிடித்துப் பல கொடுமைகள் செய்திருக்கிறான். அவனுடைய அந்தக் கொடிய புத்தி அப்போதும் அவனை விடவில்லை. அனுதாபம் கொண்டு தன்னை நகரப் பாதையில் கொண்டு வந்து விட்டுப் போன அந்த யானையின் மதமதப்பும், ராஜலக்ஷணங்களெல்லாம் பொருந்தக் களை சொட்ட இருந்த அதன் உருவமும் அவனுடைய ஆசையைத் தூண்டிவிட்டன. அதை ஒரு நாள் பிடித்துக் கொண்டு போய் பெரும் பொருள் ஈட்டவேண்டும் என்று அவன் திட்டமிட்டு விட்டான். பின்னர் காட்டில் யானை இருக்கும் இடம் தெரியாமல் போய்விடக்கூடாதே என்பதற்காக, வரும் வழியிலெல்லாம் யானை மீதிருந்து கைக்கெட்டிய மரக்கிளைகளிலெல்லாம் தன் கையிலிருந்த கத்தியால் குத்தி, வெட்டடையாளம் செய்து கொண்டுவந்தான். அன்பாகத் தனக்கு உதவி செய்ய வந்த யானையை அடக்கிப்பிடித்துப் பணமாக்க முனைந்துவிட்டான் அந்தப் பாதகன்!

அதிகாரியின் ஆசைக்குத் தூபம் போடுவதே போன்று, அவன் ஊருக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக அவன் காதுக்கு ஒரு செய்தி எட்டியது. அந்த நாட்டு மன்னனின் மகுடாபிஷேக யானை திடீரென்று இறந்துவிட்டதாம். அந்த யானையின் இடத்தை நிரப்ப ராஜலக்ஷணங்களெல்லாம் பொருந்திய பெரிய யானை யொன்றை யார் கண்டுபிடித்துச் சொல்கிறார்களோ அவர்களுக்குப் பொன்னும் அரசன் ஆணையிட்டுப் பறையறைவித்த அருமையான செய்திதான் அதிகாரி கேட்ட அந்தச் செய்தி.

அதிகாரிக்கு மகா சந்தோஷம். 'இவ்வளவு சீக்கிரத்திலேயே நமக்குப் பெரும் அதிருஷ்டம் காத்துக் கொண்டிருக்கிறதே' என்று அவன் மகிழ்ந்து போனான். உடனே அவன், அரசர் பெருமானுடைய அரண்மனைக்குப் போய், யானை விஷயமாக மன்னனிடம் பேச வேண்டுமென்று காவலாளிகளிடம் சொன்னான். மன்னனிடம் விஷயத்தை அறிவித்துத் திரும்பி வந்த காவலாளிகள், 'அதிகாரியைச் சந்திப்பதில் அரசர் மிகவும் சந்தோஷப்படுகிறார்' என்று கூறி உள்ளே அழைத்துச் சென்றனர்.

மன்னரிடத்தில் அந்தக் காட்டிலாகா அதிகாரி தான் பார்த்த யானையைப் பற்றியும், அதன் அழகு, லக்ஷணங்களைப்பற்றியும் கூறினான். அத்துடன், தன்னுடன் யானைப் பாகர்களையும் சில வீரர்களையும் அனுப்பினால், கஜராஜன் இருப்பிடத்தைக் காட்டிப் பிடித்துக்கொள்ள வசதி செய்வதாகவும் கூறினான்.

அடுத்த நாளே இரண்டு யானைப் பாகர்களும், இரண்டு வீரர்களும், அதிகாரியும் காட்டை நோக்கிப் புறப்பட்டார்கள். அதிகாரி செய்துவைத்திருந்த மர வெட்டடையாளங்கள் வழியை நன்கு அறிய மிகவும் வசதியாக இருந்தன. கடைசியில், ஒரு குட்டையில் நீர் பருகிக் கொண்டிருந்த அந்த யானையை அனைவரும் பார்த்துவிட்டனர். அதன் அருகே அவர்கள் சென்றபோது சப்தம் கேட்டு கஜராஜனும் திரும்பிப் பார்த்தது. முதன் முதலில் அதன் கண்கள் காட்டிலாகா அதிகாரியைத்தான் பார்த்தன. ஒருமுறை வீரர்களையும், பாகர்களையும் ஒரு நோட்டம் விட்டது கஜராஜன். அதற்குப் புரிந்துவிட்டது. அதிகாரி பணத்தாசையால் தன்னைக் காட்டிக்கொடுத்துவிட்டான் என்று அதற்குத் தெரிந்துவிட்டது.

'உஹூம், இப்பொழுது நான் ஒரு குரல் கொடுத்தாலும் ஆயிரமாயிரம் யானைகள், என்னை நாடி வந்த ராஜ பரிவாரங்களை இருக்கும் இடம் தெரியாமல் செய்துவிடும். ஏன், நான் ஒரு

ஓடிப்போவார்களே இந்த வீர சிகாமணிகள்! எனக்குக் கோபம் வந்தால் இவர்கள் என் காலில் பட்டுக் கூழாவதைத்தவிர வேறு வழிதான் ஏது? என்றாலும் கோபத்திற்கு இடங்கொடுக்கக்கூடாது. யாரும் சினத்தால் தங்கள் சக்திகளையெல்லாம் இழக்க முன்வரக் கூடாது. ஆயிரம் குத்தீட்டிகளைக் கொண்டு என்னைக் குத்தினாலும் நான் பொறுத்துக்கொள்ளவே செய்வேன். 'பொறுமையே பூஷணம்' அல்லவா?' என்று நினைத்து, குனிந்து கொடுத்து அவர்களையெல்லாம் முதுகில் ஏற்றிக் கொண்டு ராஜ வீதியை நோக்கிப் புறப்பட்டு விட்டது.

யானைப் பாகர்களுக்கும், வீரர்களுக்கும் ஒரே ஆச்சரியம், 'ஒரு எதிர்ப்பும் இல்லாமல் கஜராஜன் தங்களுக்கு அடங்கிவிட்டதே' என்று. அவர்களுக்கு எங்கே தெரிந்திருக்கப் போகிறது, சாந்த மூர்த்தியான புத்தர்தான் யானையாக அவதரித்திருந்தார் என்று?

கஜராஜன் வருகை அறிந்த அரசன் தலைநகரெல்லாம் அழகு வளைவுகளும், தோரணங்களும் நாட்டச் செய்தான். வீட்டு வாசல்களில் எல்லாம் கோலமிட்டு, மங்கள ஆரத்தியுடன் ராஜ யானையை வரவேற்க வேண்டுமென்று மக்களுக்கு ஆணையிட்டான். அரண்மனையிலிருந்து யானையின் முதுகில் விரிக்க ஜரிகைத் துப்பட்டாவும், முகத்தில் கட்டப் பொன் பட்டயமும், முதுகிலிருந்து இரு பக்கமும் தொங்கி ஒலிக்க வெள்ளி மணியும் அனுப்பிவைத்து, கஜராஜனை அலங்கரிக்கச் செய்து மேளதாளங்களுடன் நகர பவனிக்கு ஏற்பாடு செய்தான்.

பவனி பிரமாதமாக நடைபெற்றது. கஜராஜனை, மகுடாபிஷேக யானையைக் கட்டும் மண்டபத்தில் பொன் சங்கிலியால் கட்டினார்கள். சிறிது நேரத்திற்கெல்லாம் அரசர் பஞ்ச பக்ஷண பரமான்னங்களுடன் கஜராஜனைப் பார்க்க வந்தார். மன்னருக்கு களையும், கம்பீரமும் பொருந்திய கஜராஜனைப் பார்க்கப் பார்க்க சந்தோஷமாக இருந்தது. யானையைத் கட்டிக் கொடுத்துத் தன் கையாலேயே சுவைமிகுந்த பக்ஷணங்களையெல்லாம் கொடுத்து கஜராஜனைச் சாப்பிடுமாறு கோரினார். ஆனால், கஜராஜன் [illegible] எதையும் தொடவேயில்லை. அரசன் எவ்வளவு மன்றாடிக் கேட்டுக்கொண்டும் அது எதையும் முகர்ந்துகூடப் பார்க்கவில்லை.

மன்னர் கஜராஜனைத் தட்டிக் கொடுத்து, "இப்படித் துளியும் சாப்பிடாமல் உண்ணாவிரதமிருக்கக் காரணமென்ன?" என்று கேட்டார்.

அதற்கு கஜராஜன், "அரசே, நான் இங்கு ராஜபோகத்தையெல்லாம் பெற்று, ராஜ போஜனத்தை சாப்பிட்டுக்கொண்டிருக்கலாம் உண்மைதான். ஆனால், எனக்காக, என்னைக் காணாமல் ஏங்கி, கண்ணும் தெரியாமல், சாப்பிடவும் உணவுக்கு வகையில்லாமல் காட்டில் ஒருவரிருக்க, என்னால் எப்படி இதையெல்லாம் சாப்பிட முடியும்? என்னுடைய கிழத்தாயை காட்டில் தவிக்க விட்டுவிட்டு எப்படி என்னால் இதையெல்லாம் சாப்பிட்டுச் சந்தோஷமாக இருக்க முடியும்?" என்று தழுதழுத்த குரலில் கூறியது.

இதைக்கேட்ட அரசன் ஒரு கணம் மலைத்தான்; 'ஒரு மிருகத்துக்கு தன் தாயிடம் இவ்வளவு அன்பா!' என்று ஆச்சரியப்பட்டான். உடனே பாகர்களை அழைத்து, "யானையை விடுவித்து அது தன் தாயிடம் செல்ல விட்டுவிடுங்கள்" என்று உத்தரவிட்டான்.

'தேடியும் கிடைக்காத செல்வமான இந்த யானையை விட்டு விடும்படி சொல்கிறாரே, அரசர்' என்று பாகர்கள் சிறிது கவலைப் பட்டாலும், அரசரது உத்தரவுக்கு இணங்க அதை அவிழ்த்து விட்டு விட்டனர்.

காட்டில் கஜராஜன் தன் தாயை அடைந்தபோது அந்தத் தாய் அப்படியே பூரித்துப்போய்விட்டாள். இரண்டு மூன்று நாட்களாகக் காணாததால், 'என்ன ஆனதோ, என் குழந்தைக்கு?' என்று கதி கலங்கிப்போன அதன் வயிற்றில் பால் வார்த்தது போன்று ஆயிற்று, கஜராஜன் திரும்பி வந்தது. கஜராஜனும் அன்று முதல் வேறெங்கும் செல்லாமல் தன் தாய்க்குப் பணிவிடை செய்வதிலேயே காலத்தைக் கழித்து, அந்த இன்பமே உலகில் கிடைத்தற்கு அரிய இன்பம் என்று வாழ்க்கையை நடத்தியது.

(புத்த ஜாதகக் கதைகளில் ஒன்று இக்கதை.)

## சறுக்குமரக் கணக்கு



40 அடி உயரமுள்ள சறுக்கு மரத்தில் ராமு முதலில் 12 அடி உயரமேறி 5 அடி வழுக்கிக் கீழே இறங்கிவிட்டான். பிறகு 15 அடி உயரமேறி 9 அடி கீழே இறங்கி விட்டான். மறுபடியும் 13 அடி உயரமேறி 10 அடி வழுக்கி விட்டான். கடைசி தடவையாக முயற்சி செய்து 17 அடி உயரமேறி 7 அடி கீழே இறங்கிவிட்டான். மொத்தத்தில் ராமு மரத்தில் எவ்வளவு அடி உயரமேறினான் என்பதைக் கண்டுபிடியுங்கள் பார்க்கலாம்.

—"ரகமி"




பார்த்தார். மனிதரின் தாடை எலும்பு மாதிரி இருந்தது அது. அதை எடுத்துக்கொண்டு வீட்டுக்கு வந்தார் தாஸன்.

லண்டன் மாநகர் மியூஸியத்திலே ஓர் அறிஞர் இருந்தார். அவர் பெயர் ஸர் ஆர்தர் ஸ்மித் உட்வார்ட் என்பது. தாஸன் தான் கண்டு பிடித்த எலும்பை அவரிடம் காட்டினர்.

அதன் பிறகு இருவரும் சேர்ந்து ஆராயத் தொடங்கினர்கள். 1912–ம் ஆண்டிலே அதே இடத்திலே மற்ருேர் அருமையான மண்டையோடு கிடைத்தது.

இந்த மண்டையோட்டு மனிதனுக்கு 'இயோன்த்ராபஸ் தாஸோனி' என்று பெயரிட்டார் உட்வார்ட்.

அந்த்ராபஸ் என்ருல் மனிதன். இயோன்த்ராபஸ் என்ருல் உதய கால மனிதன். 'இயோன்த்ராபஸ் தாஸோனி' என்ருல் 'தாஸனுல் கண்டுபிடிக்கப்பட்ட உதய கால மனிதன்' என்று பொருள்.

ஆனுல் 'பில்ட் டவுன் மனிதன்' என்று தான் இவனை அழைப்பது வழக்கம்.

இப்படிச் சொல்வது எளிதாயிருக்கிற தல்லவா? ஆகவே பில்ட் டவுன் மனிதன் என்றே நாமும் அழைப்போம்.

பீகிங் மனிதனுக்குப் பிறகு தோன்றிய மனித குலம் இது என்று அறிஞர்கள் கருதுகிருர்கள்.

## 10. ஹிடல்பர்க் மனிதன்

ஜெர்மன் தேசத்திலே ஹிடலபர்க் என்ருேர் இடம். இந்த இடத்திற்கு அருகே ஓர் ஆறு ஓடுகிறது. அதற்குப் பெயர் நெக்காறு. 1907–ம் ஆண்டு இங்கே சில எலும்புகளும், மண்டை யோடுகளும் கிடைத்தன.




# அம்பு முதல் அணுகுண்டு வரை

சக்திதாசன் சுப்பிரமணியன்

## 9

## பில்ட் டவுன் மனிதன்

சார்லஸ் தாஸன் என்பவர் ஒரு வழக்கறிஞர்; இங்கிலாந்திலே ஸஸெக்ஸ் பகுதியிலே வசித்து வந்தார். பழங்காலத்துச் சின்னங்களைச் சேர்ப்பதிலே அவருக்கு மிகுந்த ஆர்வம். பூமியிலே புதையுண்ட பொருள்களைக் கண்டுபிடிப்பதென்ருல் கரை காணுத மகிழ்ச்சி.

ஒரு நாள் அவர் ரஸ்தா வழியாகப் போய்க்கொண்டிருந்தார். அங்கே சில தொழிலாளிகள் புதிதாக ரஸ்தா அமைத்துக்கொண்டிருந்தார்கள்; கற்களை உடைத்து வந்து கொட்டிக்கொண்டிருந்தார்கள்.

அவற்றைக் கவனித்தார் தாஸன். அந்தக் கற்கள் ஒரு மாதிரியாக இருந்தன.

"இதென்ன! இந்தக் கற்கள் ஒரு விதமாயிருக்கின்றனவே" என்று வியப்புற்று நின்ருர் அவர். புதைப் பொருள் ஆராய்ச்சியிலே சிறிது பழக்கமுள்ளவர் அவர். ஆகவே அவருக்கு அது விளங்கிற்று.

"இந்தக் கற்களை எங்கிருந்து தோண்டிக்கொண்டு வருகிறீர்கள்?" என்று கேட்டார் அவர். அருகில் இருந்த ஓர் இடத்தைக் காட்டினர்கள் தொழிலாளிகள்.

அந்த இடத்துக்குப் போனர் தாஸன். கற்கள் தோண்டப்பட்ட பள்ளங்களையெல்லாம் ஊன்றிக் கவனித்தார். ஓர் எலும்பு காணப்பட்டது. அதை எடுத்துப்

இவற்றை ஆராய்ந்தார்கள் அறிஞர்கள். இந்த மனிதன் பில்ட் டவுன் மனிதனுக்குப் பிறகு வளர்ந்தவன் என்று முடிவு செய்தார்கள். இவனுக்கு ஹிடல்பர்க் மனிதன் என்று பெயர்.

## 11. நிண்டர்தால் மனிதன்

ஜெர்மன் தேசத்திலே ஒரு மலைச்சாரிவு. நிண்டர்தால் மலைச்சாரிவு என்று இதற்குப் பெயர். இங்கே ஒரு குகை. 1857–ம் வருஷம் இந்த குகையிலே சில எலும்புகளும், மண்டை யோடுகளும் கிடைத்தன.

இவற்றை ஆராய்ந்தார்கள். ஹிடல்பர்க் மனிதனுக்குப் பிறகு வளர்ந்த மனித குலம் இது என்று முடிவு செய்தார்கள்.

நிண்டர்தால் மனிதன் என்று இவனுக்குப் பெயர்.

## 12. குரோமாக்னன் மனிதன்

பிரான்ஸ் தேசத்திலே குரோ மாக்னன் என்று ஓரிடம். இங்கே ஒரு குகையிலே சில மண்டையோடுகளும், எலும்புகளும் கிடைத்தன. இவற்றை ஆராய்ந்தார்கள். பூரண வளர்ச்சி பெற்ற மனிதன் இவனே என்றார்கள். இவனுக்கு 'குரோ மாக்னன் மனிதன்' என்று பெயர்.

ஆகவே, இப்போது மனித குலத்தின் வளர்ச்சியைச் சுருக்கமாகக் கவனிப்போம்.

குரங்கினத்துடன் தோன்றியவன் தென் ஆப்பிரிக்கக் குரங்கு மனிதன். அவனுக்குப் பிறகு சிறிது வளர்ச்சி பெற்றவன் ஜாவா மனிதன். இவனுக்குப் பிறகு சிறிது வளர்ச்சி பெற்றவன் பிகிங் மனிதன்—சீன மனிதன். இவனுக்குப் பின் தோன்றியவன் பில்ட்டவுன் மனிதன். இவனுக்குப் பிறகு தோன்றியவன் ஹிடல்பர்க் மனிதன். இவனுக்குப் பின் தோன்றியவன் நிண்டர்தால் மனிதன். இவனுக்குப் பின் தோன்றியவன் குரோமாக்னன் மனிதன்.

## 13. எப்போது தோன்றினான்?

புவி இயல் அறிஞர்கள் என்ன சொல்கிறார்கள்? இந்த உலகத்தைப் பனி மூடியிருந்ததாகச் சொல்கிறார்கள். வடக்கே ஆர்க்டிக் பிரதேசத்திலிருந்து பனிக்கட்டியானது புறப்பட்டதாம். கொஞ்சம் கொஞ்சமாக நிலப்பகுதியை மூடிக் கொண்டே வந்ததாம். சைபீரியா முழுவதும் பனியில் மூழ்கியதாம். வட ஐரோப்பா, கிரேட் பிரிட்டன் முதலியனவும் மூழ்கின. இப்படியாக பிரான்ஸ் தேசம் வரை பனி மூடியது. கருங்கடல், காஸ்பியன் கடல் எல்லாம் பனிக்கட்டியால் நிரம்பியிருந்தன. ஆப்கனிஸ்தானம் வரையில் பனி வந்தது.

ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வரை நிலப்பரப்பானது இவ்விதம் பனி மூடப் பெற்றிருந்தது. பிறகு சிறிது சிறிதாகப் பனி விலகியது. இவ்விதம் சென்ற ஆறு லட்சம் வருஷங்களில் நான்கு முறை பனி மூடியது; விலகியது. ஒரு முறை பனி மூடி விலகிய காலத்துக்கு ஒரு பனி யுகம் என்று பெயர். அப்படியானால் மொத்தம் பனியுகங்கள் நான்கு. இந்த நான்கிற்கும் முறையே முதல் பனி யுகம், இரண்டாவது பனி யுகம், மூன்றாவது பனி யுகம், நான்காவது பனி யுகம் என்று பெயர். முதல் பனி யுகத்துக்கு 'குன்ஸ்' யுகம் என்று பெயர். இரண்டாவது பனி யுகத்துக்கு 'மிண்டல்' யுகம் என்று பெயர். மூன்றாவது பனி யுகத்துக்கு 'ரிஸ்' யுகம் என்று பெயர். நான்காவது பனி யுகத்துக்கு 'வூர்ம்' யுகம் என்று பெயர்.

ஒரு பனி யுகத்துக்கும், மற்றொரு பனி யுகத்துக்கும் இடையேயுள்ள காலத்துக்கு இடைப்பனி யுகம் என்று பெயர். ஆக, பனி யுகங்கள் நான்கு; இடைப்பனி யுகங்களும் நான்கு.

நான்காவதாகச் சொல்லப்பட்ட பனி, சுமார் இருபதாயிரம் ஆண்டுகள் முன்பு விலகியதாக அறிஞர்கள் சொல்கிறார்கள். அதன் பிறகு ஏற்பட்டது இடைப்பனி யுகம். நான்காவது இடைப்பனி யுகம், சுமார் இருபதாயிரம் ஆண்டுகள் முன்பு தொடங்கியது. அப்போது தான் குரோ மாக்னன் மனிதன் தோன்றினான் என்று கருதுகிறார்கள்.

மூன்றாவது பனி சுமார் இரண்டு லட்சம் வருஷங்கள் முன்பு விலகியது. அதன் பிறகு ஏற்பட்டது மூன்றாவது இடைப்பனி யுகம். அப்போதுதான் நிண்டர்தால் மனிதன் தோன்றினான் என்பது அறிஞர் கருத்து.

இரண்டாவது பனி சுமார் நான்கு லட்சம் வருஷங்களுக்கு முன்பு விலகியது. அதற்குப் பின் இரண்டாவது இடைப்பனி யுகம். அப்போது ஹிடல்பர்க் மனிதன் தோன்றினான் என்பது அறிஞர் கருத்து.

முதல் பனி சுமார் ஐந்து லட்சம் ஆண்டுகள் முன்பு விலகியது. அப்போது தான் ஜாவா, பிகிங் பில்ட்டவுன், மனிதர்கள் தோன்றினார்கள் என்பது ஆராய்ச்சியாளர் சொல்வது.

ஆனால் சமீப கால ஆராய்ச்சி என்ன சொல்கிறது? மனிதன் இவ்வளவு வயதானவன் அல்லன் என்று சொல்கிறது. மனித குலத்தின் வயதே மொத்தம் ஐம்பதாயிரம் வருஷம்தான் என்று சொல்கிறது. அது என்ன என்று கவனிப்போம்.

## 14. புதிய ஒளி

புளூரின் என்பது ஒருவித கியாஸ் (வாயு); பசும் பொன் நிறமுள்ளது; நீரிலே கலந்திருக்கும்; கடல் நீரிலுமிருக்கும்; ஊற்று நீரிலுமிருக்கும். எலும்பு, பல் முதலியவற்றில் பட்ட உடனே அப்படியே ஒட்டிக்கொள்ளும்.

இந்த கியாஸ், உலோகங்களை பஸ்மம் செய்யும் தன்மையுடையது. அப்படி பஸ்பமானவை இந்த கியாஸ் உடன் கலந்துவிடும். அதற்கு புளூரைட் என்று பெயர். இந்த புளூரைட் கலந்த நீர் மிக நல்லதாம். பல் சொத்தையாகாமல் தடுக்கக்கூடியது என்று சமீப கால ஆராய்ச்சியில் கண்டு படித்திருக்கிறார்கள்.

சென்ற இரண்டாவது மகாயுத்த காலத்திலே பிரிட்டன் இந்த ஆராய்ச்சியில் இறங்கியது. டாக்டர் கின்னத் ஒக்லி என்பவர் இதற்கு நியமிக்கப்பட்டார்.

டாக்டர் கின்னத் ஒக்லி இந்த ஆராய்ச்சியில் இறங்கியபோது அவருக்கு மற்றோர் உண்மை புலப்பட்டது. அதாவது என்ன?

பாஸில் ஆராய்ச்சியாளர்கள் எவ்வளவோ எலும்புகளைக் கண்டு பிடிக்கிறார்கள். அவை எந்த யுகத்தைச் சேர்ந்தவை என்பதுபற்றிய சர்ச்சை பிரமாதமாக நடக்கிறது. பல வருஷங்கள் வரை இந்த விவாதத்துக்கு முடிவு ஏற்படுவதேயில்லை. ஒரு குறிப்பிட்ட மண்டையோடு ஐந்து லட்சம் வருஷங்களுக்கு முந்தியது என்பர் சிலர். "இல்லை; இல்லை. அவை இரண்டு லட்சம் ஆண்டுகளுக்கு முந்தியவை" என்பர் மற்றும் சிலர்.

இந்தச் சிக்கலை எப்படித் தீர்ப்பது? புளூரின் இந்தச் சிக்கலைத் தீர்க்க உதவும் என்று கண்டார் அவர். எலும்பில் உள்ள புளூரின் அளவைக் கொண்டு அதன் காலத்தைச் சொல்லிவிடலாம் என்றார் அவர்.

1947–ம் ஆண்டிலே, பிரிட்டிஷ் விஞ்ஞான வளர்ச்சிக் கழகத்திலே இவ்விஷயத்தை அவர் விவாதித்தார். அதன் பிறகு பல சோதனைகளை நடத்தத் தொடங்கினார்.

ஜாவாவிலே டூபி என்பவர் ஜாவா மனிதனைக் கண்டு பிடித்தார் அல்லவா?



அதே இடத்தில் ஒரு தொடை எலும்பு கிடைத்தது.

இந்தத் தொடை எலும்பு யாருடையது? ஓக்லியிடம் சோதனைக்கு வந்தது. காந்த்ரோபஸ் உடையதா அல்லது வேறு மனிதனுடையதா?

இந்தப் பிரச்னையை எப்படித் தீர்ப்பது? ஓக்லியிடம் சோதனைக்கு வந்தது. பித்தகான்த்ரோபஸ் மண்டையோட்டையும், புதிதாகக் கிடைத்த தொடை எலும்பையும் சோதித்தார் அவர். இரண்டிலும் ஒரே அளவு புளூரின் இருந்தது. ஆகவே, அந்தத் தொடை எலும்பு பித்த காந்த்ரோபஸ் காலத்தைச் சேர்ந்ததே என்றார் அவர். ஆனல், இந்தத் தொடை எலும்பு அந்த மனிதனுடையதுதானு, இல்லையா என்று சொல்ல முடியாது.

பிரிட்டனிலே சார்லஸ் தாஸன் கண்டு பிடித்த மண்டையோடு ஐந்து லட்சம் வருஷங்களுக்கு முந்தியது என்று சொன்னர்கள் அல்லவா? அந்த மண்டையோட்டின் காலத்தைக் கணிக்கத் தொடங்கினர் டாக்டர் ஓக்லி.

தாஸன் கண்டு பிடித்த இயோன்த்ராபஸ் மனிதனுடன் வேறு சில எலும்புகளும் கிடைத்தன. சில, யானைகளின் எலும்புகள். மஸ்டோடன் என்று சொல்லப்படும் யானைகள் அவை. நீர் எலி ஒன்றின் எலும்பும் கிடைத்தது.

யானையின் எலும்புடன் கிடைத்தபடியால் இயோன்த்ராபஸ் மனிதன் ஐந்து லட்சம் வருஷங்களுக்கு முந்தியவன் என்று கூறிவிட்டார்கள். மஸ்டோடன் என்கிற யானை இரண்டாவது இடைப் பனி யுகத்தின்போது இங்கிலாந்தில் இருந்ததாம்.

டாக்டர் ஓக்லி இவற்றைச்சோதித்தார். இயோன்த்ராபஸ் மனிதனின் எலும்பிலே புளூரின் குறைவாயிருந்தது, யானை எலும்பிலே அதிகமிருந்தது. ஆனல், நீர் எலியின் எலும்பில் இருந்த அளவும் இயோன்த்ராபஸ் மனிதன் எலும்பில் இருந்த அளவும் ஒன்றுகக் காணப்பட்டன.

ஆகவே, ஓக்லி முடிவு சொன்னர்: "இயோன்த்ராபஸ் மனிதன் ஐந்து லட்சம் வருஷங்களுக்கு முந்தியவன் அல்ல. ஐம்பதாயிரம் வருஷங்களுக்கு முந்தியவனே" என்றார்.

1952-ம் ஆண்டு நியூயார்க் நகரிலே நடைபெற்ற சர்வதேச அரங்கிலே தமது முடிவைத் தெரிவித்தார் டாக்டர் ஓக்லி.

இதன் பயனக மனித குலத்தின் சரித்திரமே அடியோடு மாறிவிட்டது.

(தொடரும்)

---

## ஸ்வீகாரம்

ஸ்வீகாரம் அல்லது தத்து எடுத்தல் என்பது ஹிந்து சமுதாயத்திலும், சட்டத்திலும்தான் காணப்படுகின்றது. வேறு சட்டங்களில் ஸ்வீகாரம் என்பதேயில்லை.

முன் காலத்தில் ஸ்வீகாரத்தில் ஐந்து விதங்கள் இருந்ததாகத் தெரிய வருகிறது. ஆனல் இப்பொழுது இரண்டு வகைதான் நடைமுறையில் இருந்து வருகின்றன:—

1. தட்டகா—இது இந்தியாவில் எங்கும் நடைமுறையில் இருக்கின்றது.

2. கிர்த்திமா—இது மிதிலை முதலிய இடங்களில் நடைமுறையில் இருந்து வருகிறது.

கிரய கர்மாதிகள் செய்வதற்கும், தன் வழி மறையாமல் தன் குலத்தையும், தன் பெயரையும் நிலைநிறுத்துவதற்கும் ஏற்பாடு செய்வதுதான் ஸ்வீகாரத்தின் நோக்கம்.

ஸ்வீகாரத்திற்கு வேண்டிய முக்கிய அம்சங்களாவன:—

ஸ்வீகாரம் எடுப்பவர், ஸ்வீகாரம் எடுக்கச் சட்டப்படி தகுதியுள்ளவராக இருத்தல் வேண்டும்.

ஒரு ஆண் மகன் தனக்கு ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளலாம். ஸ்வீகாரம் எடுக்கும் பொழுது அவனுக்கு மகனே, பேரனே, பேரனுடைய மகனே இருக்கக் கூடாது.

ஒரு மனைவி அல்லது விதவை தன் கணவனுக்காக ஸ்வீகாரம் எடுக்கலாமேயொழிய, தனக்காக ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள முடியாது. தாயாரோ, தமக்கையோ ஒருவருக்காக ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ள முடியாது. மனைவி ஸ்வீகாரம் எடுக்கும்பொழுது கணவனின் அனுமதி பெற்றுக்கொள்ள வேண்டும்.

சென்னையில் விதவை தன் கணவனுக்காக, கணவனின் அனுமதி இல்லாவிடினும், ஸ்வீகாரம் எடுக்கலாம். ஆனல், கணவன் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளக் கூடாது என்று தெரிவித்திருந்தால், ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளக்கூடாது. ஸ்வீகாரம் எடுக்க அனுமதி தரும் அதிகாரம் வாக்குமூலமாகவோ, எழுத்துமூலமாகவோ இருக்கலாம். எழுத்துமூலமாக இருந்து, அது உயில் அல்லவாயின்,



அந்த அதிகாரம் ரிஜிஸ்தர் செய்யப்பட வேண்டும்.

சென்னையில் ஸ்வீகாரம் எடுக்கும் விதவை தன் மாமனருடைய அனுமதி பெற வேண்டும். மாமனர் காலமாகிவிட்டால், கணவனின் தாயாதிகளிடம் அனுமதி பெற வேண்டும்.

முறை தவறி நடக்கும் வித்வையும், மறு விவாகம் செய்து கொண்ட விதவையும் ஸ்வீகாரம் எடுக்கக்கூடாது.

ஒரு மகனின் தந்தையோ, தாயோ தான் ஒரு பையனை ஸ்வீகாரமாகக் கொடுக்கலாம். தந்தைக்கே முதல் அதிகாரம்.

ஸ்வீகாரம் எடுக்கப்படும் பிள்ளை, எடுப்பவர் ஜாதியைச் சேர்ந்தவனாக இருத்தல் வேண்டும்.

வங்காளம், காசி, சென்னை முதலிய இடங்களில் ஸ்வீகாரம் எடுக்கப்படும் பையனுக்கு உபநயனக் கல்யாணம் ஆகி இருக்கக்கூடாது. ஆனல், ஸ்வீகாரப் புத்திரனும், ஸ்வீகாரம் எடுப்பவரும் ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவராயின், ஸ்வீகார புத்திரனுக்கு உபநயனம் ஆன பின்பும் ஸ்வீகாரம் எடுக்கலாம். ஆனல், அவனுக்குக் கல்யாணத்திற்கு முன்பே தத்து எடுத்துவிட வேண்டும்.

பம்பாயில் ஒருவனுக்குக் கல்யாணமாகி, குழந்தைகள் இருப்பினும் அவனை ஸ்வீகாரம் எடுக்கலாம்.

தயமுஷ்ய வாகன அல்லது இரண்டு தகப்பனரின் பிள்ளை:—

அதாவது, ஸ்வீகாரம் எடுப்பவரிடம், சொந்தக் குடும்பத்தினின்றும் விலகவில்லை என்றஒப்பந்தத்துடன் ஸ்வீகாரம் கொடுப்பதற்கு இப்பெயர் பொருந்தும். இரண்டு குடும்ப சொத்திலும், இவ்விதம் தத்து எடுக்கப்படும் பையனுக்கு உரிமையுண்டு.

தேவதாசி குடும்பத்தினரிடையே பெண்களை ஸ்வீகாரம் எடுக்கும் வழக்கம் சட்டப்படி அனுமதிக்கப்படுகின்றது. ஆனல், வேசிக்கொட்டில் நடக்கும்

காக ஸ்வீகாரம் எடுக்கப்பட்டால், அந்த ஸ்வீகாரம் செல்லாது.

ஸ்வீகாரத்திற்கு வேண்டிய சடங்குகள் வருமாறு:—

1. ஸ்வீகாரம் எடுக்கும் நோக்கத்துடன் கொடுத்தல், வாங்குதல்.

2. தத்த ஹோமம், புத்திரேஷ்டி யாகம் முதலியன. நான்காவது வர்ணத்தைச் சேர்ந்தவர்களுக்கு ஹோமம் முதலியன தேவையில்லை.

ஸ்வீகாரம் எடுக்கப்பட்ட பின் ஒருவருக்கு ஒரு மகன் பிறந்து, அவர் காலத்திற்குப் பின் ஷெ ஸ்வீகார புத்திரனுக்கும் மகனுக்கும் பாகப் பிரிவினை ஏற்பட்டால், ஸ்வீகார புத்திரனுக்கு பாதிப் பங்கிற்கு உரிமையில்லை. சென்னையிலும், பம்பாயிலும் அவனுக்குத் தன் ஸ்வீகார தந்தையின் சொத்தில் 1/5 பாகத்திற்குத்தான் உரிமையுண்டு.

நான்காவது வர்ணத்தைச் சேர்ந்தவர்களாயின், பாகப் பிரிவினையில், பிறந்த மகனுக்கும் ஸ்வீகார புத்திரனுக்கும் இவ்வித வித்தியாசமில்லை. (சென்னையில்)

### கிர்த்திமா முறை

இதன்படி ஸ்வீகாரத்திற்கு முன்பாக ஸ்வீகாரம் எடுக்கப்படும் பிள்ளையின் அனுமதியைப் பெற வேண்டும். இரு தரப்பாரும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டும். சடங்குகளோ, தஸ்தாவேஜியோ தேவையில்லை. தன் கணவன் ஸ்வீகாரம் எடுத்திருப்பினும் மனைவியும் ஸ்வீகாரம் எடுக்கலாம். ஏனெனில் இம்முறைப் பிரகாரம் ஸ்வீகாரம் எடுப்பவர், அதைத் தன் சொந்த ஹோதாவில், தன் சொந்த வசதிக்காகவே செய்து கொள்கிறார். ஸ்வீகார தகப்பனின் சொத்துக்கு மாத்திரமேதான் ஸ்வீகாரப் பிள்ளை வார்சாவான். தன்னுடைய குடும்பத்தில் தனக்குள்ள உரிமையையும் அவன் இழக்க மாட்டான். இது, தனது சொந்த விருப்பத்திற்காக ஸ்வீகாரம் எடுக்கும் முறையாதலால், மனைவியோ, விதவையோ தனது கணவனுடைய அதிகாரம் அல்லது அனுமதியிருப்பின், இம்முறைப்படி தன் கணவனுக்காக ஸ்வீகாரம் எடுக்க முடியாது. இம்முறை ஸ்வீகாரம், மிதிலையில்தான் நடைமுறையில் இருந்து வருகின்றது.

# மோகமுள்

தி. ஜானகிராமன்



தொடர் நாவல்

பாபுவுக்கு உடல் வெட்வெடவென்று நடுங்கிற்று. அனல் வீசிற்று. ஜுரம் வருகிறது போல வந்த காங்கையில் நாக்கு ஒட்டிக்கொண்டது. உள்ளுதட்டையும், சுற்றையும் தடவி நனைத்துக்கொண்டது.

அவளுடைய புன்சிரிப்பில் விஷமமா, அனுதாபமா தெரியவில்லை. இரண்டும் போல்தான் இருக்கிறது.

"எப்படி வந்தே?" என்று கேட்டான்.

"மாடிக்கட்டையைத் தாண்டி வந்தேன்."

"எதுக்கு?"

"——"

"என்ன வேணும் உனக்கு?"

"வேணும்னுத்தான் வரணுமா? இல்லாட்டா வரப்படாதா?"

"——"

"உங்களுக்கு ஒண்ணும் வாண்டாமா?"

"அப்படீன்னு?"

"பதில் கேட்டேனே."

"எதுக்கு?"

"எதுக்கா? . . . அவ்வளவு ஞாபகம் வச்சிண்டிருக்கேளா? கடுதாசி எழுதினேளே. சுண்டைக்காயிலே சுற்றி எறிஞ்சேளே."

"ஆமாம்."

"கிழிச்சுப் போட்டுடுன்னுகூட நீங்க ஜாடை காமிக்கலியா?"

"கிழிச்சுப் போட்டுட்டியோல்லியோ"...

"இல்லை."

"நான் செஞ்சது தகாத காரியம். அதுக்குத்தான் கிழிச்சுப் போட்டுடுன்னேன். யோசிக்காமல் எறிஞ்சதுக்கப்புறம் எனக்குப் படபடன்னு வந்துது. கிழிச்சுப் போட்டுடுன்னு அதான் கெஞ்சினேன்."

"நான் கிழிச்சுப் போடுவேனா அதை? என்னை அவ்வளவு கிராதகின்னு நினைச்சுப்பிட்டேளா?"

"நான் செஞ்சது தப்புத்தானே?"

"இல்லை. அந்தக் கடுதாசைப் பொட்டிக்கு அடியிலே ஜாக்ரதையா வச்சிருக்கேன். அதை மத்யானம் எல்லாம் எடுத்து எடுத்துப் பாக்கறேன். என்னை யாரு எதுன்னு கேக்கறதுக்கு யார் இருக்கா? எனக்கு இருக்கற மனுஷா இப்ப அதுதான். எடுத்து எடுத்துப் பாக்கறேன். உங்களைத்தான் கண்ணிலேயே காண முடியலியே."

கடைசி வார்த்தைகள் விக்கலும், விசும்பலுமாகக் கலந்து வந்தன. பாபு திகைத்து நின்றான். அழுது கொண்டிருந்தவள் கண்ணைத் துடைத்துவிட்டு, தெருவைப் பார்க்கும் ஜன்னல் கதவுகளைச் சாத்திவிட்டு வந்தாள்.

"நான் பதில் போடலியேன்னு கோபமா?" என்று தோளைத் தொட்டாள். கையை எடுத்து அப்பால் விட்டான் பாபு.

"நீ இப்ப எதுக்கு வந்திருக்கே?"

"போடலாம்னுதான் நெனச்சேன். பயமாயிருந்துது. பத்துப் பதினைஞ்சு நாள் கழிச்சு எழுதிக்கூட வச்சேன். அப்பறம் நீங்க திரும்பிக்கூடப் பார்க்கலெ."

"நீ எதுக்கு வந்திருக்கே?"

"பதில் சொல்லத்தான் வந்தேன். போருமா? எதுக்கு வந்தே, எதுக்கு வந்தேன்னு காிக்கறேளே? . . . ஏன், பயமாயிருக்கா? உங்க வீட்டுக்காரர்தான் ஊரில் இல்லையே. அந்த மாமி, பாட்டியெல்லாம் கூடத்திலேதானே படுத்திண்டிருக்கா?"

"நீ போயிடு."

"ஏன் என்னைக் கண்டா பிடிக்கலையா? நான் அழகா இல்லியா?"

கிணிக் கிணிக் கிணிக் என்று அந்த சுவர்க்கோழி இன்னும் கத்திக்கொண்டிருந்தது. அக்கரையில் ஒரு கோட்டான் அலறிற்று. இக்கரையில் சாகுருவி ஹு...




என்று பாறையாகக் கட்டிப்போன தொண்டையில் அழுது கொண்டிருந்தது.

நடுக்கம்கூட நின்றுவிட்டது. வயிற்றில் மட்டும்—திடீரென்று வந்த அதிர்ச்சியின் கலக்கம் மட்டும் கனத்துக் கிடந்தது. யாராவது இதைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள் என்ற அச்சம். அதோடு இன்னதென்று தொியாத ஒரு அச்சம் வேறு.

ஜாதிப் பூவின் மணம் விட்டுவிட்டுக் கமழ்ந்தது. தெய்வீகமான வாசனை இது! அம்மா அரும்பு அரும்பாக இரவில் தொடுத்து படங்களுக்கெல்லாம் போட்டிருப்பாள். காலையில் அலமாரியைத் திறக்கும்போது குப்பென்று அந்த மணம் சற்று உஷ்ணமாக வீசும்—உள்ளே பட்டாபிஷேகத்தில் அமர்ந்த ராமனும், சீதையும், காமாட்சியும் விடும் மூச்சைப் போல. தெய்வீகமான மணம்.

இந்தப் பூவை மனிதர்கள் எப்படி மனதோடு சூட்டிக்கொள்கிறார்கள்! தெய்வத்துக்குரிய இந்த மணத்தை எப்படித் தலையில் தாிக்கத் துணிகிறார்கள்!

இந்த மணம் கூடத்தில் கமழ, அன்று அப்பா சொன்னதெல்லாம்—விஜயதசமியன்று அப்பா சொன்னதெல்லாம்! அந்தப் புனிதமான சொற்களின் மணம் அல்லவா இது!

நெஞ்சு படபடவென்று பறந்தது.

கட்டிலில் உட்கார்ந்தவன் படுத்து அப்பால் திரும்பிக்கொண்டான்.

"கௌரவத்துக்கே இழுக்கு இது. . . ."

அப்பா உடனே இங்கு வந்து குதித்து ஜன்னல் கம்பி வழியாலேயே இழுத்துக் கொண்டு போய்விட்டால் இவள் என்ன செய்ய முடியும்? முகத்தில் காியைப் பூசிக்கொண்டு இங்கேயே உட்கார்ந்திருக்க வேண்டியதுதான்.

ராஜூவுக்கு மனிதனுக்கெட்டாத சக்திகள் எல்லாம் இருந்தனவெனலாம். அப்படியானால் அவருடைய அழியாத ஆத்மா ஓடிவந்து என்னைத்தடவிக்கொடுந்து, அணுகமுடியாத, ஸ்பர்சிக்க முடியாத, நெருப்புத்துண்டமாக என்னைச் செய்துவிடும். ராஜூவுக்கு அந்த மண்டை வெடிக்கிற உச்சி வேளையில், காலில் பொடி ஒட்டுகிற அந்த வேளையில் ஒரு குளத்தையும் காண்பித்து, அமிருதமான அன்னத்தையும் கொடுத்தாளே ஒரு அம்மாள் குழந்தையுடன் வந்து! அவள் வந்தால்?

ஒரு வேளை அவள்தானோ என்னமோ இவள்?

பாபு மறுபடியும் எழுந்து உட்கார்ந்தான்.

"நான் சொல்றதை நம்பலியா நீங்க?" என்று சொல்லிக்கொண்டே அவள் இடுப்பிலிருந்து ஏதோ ஒன்றை எடுத்தாள். அந்த இருண்ட வெளிச்சத்தில் ஊன்றிப் பார்த்தபோது நன்கு தொிந்தது. தோடு, மூக்குத்தி மாதிாி நகை வைக்கிற சிறு பெட்டி. வெல்வெட்டால் உறையிட்டு வழவழக்கிற பெட்டி.

பாபு நிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

"என்னை நம்பலியா?"

"என்ன?"

அந்தச் சிறு புத்தானை அமுக்கித் திறந்தாள். உள்ளே ஒரு சிறு காகிதத் துண்டு.

"நீங்க எழுதிப் போட்டதுதான். நான் யாரு என்னன்னெல்லாம் கேட்டேளே. ஏன் திடீர்னு பாக்கக்கூட மாட்டேன்னுட்டேள். . . . கேட்டுக்கக்கூட இஷ்டமில்லியா? அப்பா, அம்மான்னு யார் கையிலாவது வளந்திருந்தா. . .?"

"அப்பா, அம்மா இல்லியா உனக்கு?"

"இல்லே. . . . இடி விழுந்து செத்துப் போயிட்டா. ஒண்ணுவிட்ட அத்தைதான் வளர்த்தா. . . . அதெல்லாம் இப்ப எனக்கு நெனச்சுக்கக்கூட வாண்டாம் போலிருக்கு. அப்பா, அம்மா வளர்த்திருந்தா, நான் இஞ்ச வந்து உங்களைப் பார்த்திருக்கப் போறேனா? . . . உங்களே நெனச்சு நெனச்சு இப்படி மத்யானமும் ராத்திாியும் தூக்கம் வராம ஏங்கிண்டிருப்பேனா? . . . . ஒண்ணே ஒண்ணு சொல்றேன், கேக்கறேளா?"

"———"

"நேத்திக்கு நீங்க பாடினேள் பாருங்கோ. இன்னிக்கிக்கூட பாடினேளே 'மனசு விஷய' வா? அதுதானே?"



"ஆமாம்."

"இனிமே என் காதுபட அதைப் பாடாம இருக்கேளா?"

"ஏன்?"

"நீங்க பாடினா நன்னாத்தான் இருக்கு. . . . பாட வாண்டாம்."

"ஏன்?"

"என் கல்யாணத்தும்போது யாரோ ஒரு பொண்ணு வந்து பாடினா அது" என்று மறுபடியும் அழ ஆரம்பித்துவிட்டாள் அவள்.

"அதை இனிமே பாட மாட்டேளே?"

"இல்லை."

"அதுக்குத்தான் நான் வந்தேன். . . நான் போய்ட்டு வரட்டுமா?"

"நான் பாடவில்லை."

"எனக்கு அதைக் கேட்டா பைத்தியம் புடிச்சுப்போயிடும் போலிருக்கு."

"சரி, பாடலை."

"நான் வரட்டுமா?"

"அதுக்குத்தான் வந்தியா?"

"ஆமாம் .நான் வரட்டுமா?"

"சரி."

"சரியா?"

"போயிட்டு வா."

"உங்களைப் பாத்தா நல்லவர் மாதிரி இருக்கு. இஞ்ச மாத்திரம் கல்லா இருக்கு" என்று மார்பைத் தடவினாள் அவள். "இந்த மார்பு மாதிரிதானே இருக்கும் உள்ளே இருக்கறதும். . . ஏன் கையை எடுத்து எடுத்து எறியறேள்? கன்றுக்குட்டியைத் தள்ளிவிடற மாதிரி....என் கண்ணுவுக்கு என்னைக் கண்டா பிடிக்கலியா? உனக்குக்கூடவா நான் பிடிக்காம போயிட்டேன்?"

இப்போது இரண்டு கைகளாலும் அவன் கழுத்தை கட்டிக்கொண்டு நிமிர்ந்து, மூச்சுக்காற்று அவன் மூக்கில்படப் பேசினாள் அவள். சற்று முன்பு அழுத வளா இவள்!

"என் கண்ணுவுக்கு என்னைக் கண்டா பிடிக்கலியா? . . . எங்கே, என்னமோ திமிர்றேளே, மிரள்ற கன்னுக்குட்டியாட்டமா? திமிருங்கோ பாப்பம். . . ."

"விடு என்னை."

"மாட்டேன்."

"இரைஞ்சு கத்துவேன்."

"கத்தேன் பாப்பம்."

"இப்ப நீ என்ன பண்ணணும்ங்கறே."

"நீங்க ஒண்ணும் பண்ண வாண்டாம்."

திமிர முடியாமல் நின்றான் அவன். அவள் புன்சிரிப்பு மலர, அவனைச் சிறு மூச்சு படும் நெருக்கத்தில் பார்த்துக் கொண்டிருந்தாள்.

"திமிரு பாப்பம்."

"______"

"ஏன் மூஞ்சி விளக்கெண்ணெய் குடிச்சாப்பல இருக்கு. . . ஜாதிப்பூ கமகமன்னு மணக்கலெ? . . . ஒரு பூவைப் பிச்சுக் கோயேன்."

பாபு இடிந்தாற்போல கட்டை மாதிரி நின்று கொண்டிருந்தான்.

"ஏன், பூ வண்டாமா? பிச்சுக்கோயேன்?"

"பூவைத்தான் பிச்சுப் பிச்சு நசுக்கிண்டிருக்கியே."

"ஒண்ணும் நசுங்கலே. சித்த நாழி படுத்திண்டிருந்தேன் அங்கே. கீழே எடுத்து வச்சுட்டுத்தான் படுத்திண்டிருந்தேன். வரும்போதுதான் வச்சிண்டு வந்தேன். ஒண்ணும் நசுங்கலே."

புரிந்துதான் இப்படிப் பேசுகிறாளா இவள்?

"ஹ்ம்."

"என்ன ஹ்ம்?"

"——"

"நான் ஒரு பூவை எடுத்து உம் மூக்கிலெ அடைப்பேன். அதுக்கு ஒரு கையைன்னா எடுக்கணும்."

"இல்லே, எடுத்துக்கொடு."

"உம். . . . நான் மாட்டேன். கையைப் பிச்சிண்டு ஓடறதுக்கா? . . . இந்தா நீ வேணும்னா எடுத்துக்கோ" என்று தலையைத் திருப்பினாள். மூக்கில் ஜாதிப் புஷ்பம் ஜிலுஜிலுவென்று தீயைப்போல் உராய்ந்தது.

"வாண்டாம்."

"ஏன், பிடிக்காதா?"

"வாண்டாம்."

"ஏன் சொல்லேன்."

"அது ஸ்வாமிக்கு வக்யறது."

"க்கும். . . நீதான் எனக்கு ஸ்வாமி."

"என்னே விடேன்."

"நீ என்னைப் பாரு முதல்லே...ஏன் இப்படி வருத்தமாயிருக்கே? உன்னே யாராவது ஏதாவது சொன்னாளா? . . . . மருந்து வச்ச மாதிரி இருக்கியே. . . . இதைப் பாரேன். . . நீ என்னைப் பாக்கறப்பல இருக்கு. ஆனா வேற எங்கோ பாக்கற மாதிரி இருக்கே...நீ என்ன பாக்கறேன்னு தெரியும். . . சொல்லட்டுமா? . . . ஒரே ஒரு ஊர்லே ஒரு ராஜா வாம். ஆனா அவன் ரொம்ப நல்லவனாம். எல்லோருக்கும் ஓடிஓடி ஒத்தாசை பண்ணுவனாம். பக்கத்து தேசம் ஒரு காட்டு தேசமாம். அங்க வந்து ஒரு ராணி ஆண்டுண்டிருந்தாளாம். அவளுக்கு ஒரு நாளைக்கு பாம்பு கடிச்சுடுத்தாம். மந்திரம், மாயம் எல்லாம் பண்ணிப் பாத்தாளாம். கண்ணுக்குக் கலிக்கன் போட்டாளாம். இறங்கவே இல்லியாம். இந்த ராஜா இருக்கானே, அவன் இப்படி வேட்டைக்கு வந்திருந்தானாம், அப்ப. காட்டிலே ராணி வீட்டிலே அமக்களமா யிருந்ததைப் பாத்துட்டு, என்னன்னு போனானாம். சேதியைச் சொன்னளாம் எல்லாரும். உடனே வெளியே ஓடிப்போய் ஒரு பச்சிலேயை எடுத்திண்டு வந்து நசுக்கி வாயிலே சாற்றைப் பிழிஞ்சானாம். உடனே கொஞ்ச நாழிக்கெல்லாம் அவ சிரிச்சிண்டு எந்துண்டு வெக்கப் பட்டுண்டு நின்னளாம். அப்பறம் அவன் மேலே ஆசை வந்துடுத்து அவளுக்கு. அவனே போயிட்டான். வேட்டைக்கு எப்ப வருவான்வருவான்னு பாக்கலாம்னு காட்டிலே தனியா நின்னுண்டு, கொளம்புச் சப்தம் கேக்கறதான்னு பாத்திண்டே நப்பாளாம். ஒரு தடவை வந்தானாம். திரும்பிப் பாக்காமயே போயிட்டானாம். அப்பறம் அவளுக்கு உடம்பு வந்துடுத்தாம். ஸ்வப்னத்திலே அந்த ராஜா பேரைச் சொல்லிப் பேத்தினாளாம். உடனே எல்லாருமாப் போய் அந்த ராஜா கிட்ட இந்த மாதிரி சமாச்சாரம். ராணி உங்களை நெனச்சு உருகி உருகித் தேஞ்சு போருன்னளாம். இந்தக் காட்டுப் பொண்ணையா நான் பண்ணிப்பேன். போங்கோ வந்த வழியைப் பாத்திண்டுன்னு இரைஞ்சானாம் அவன். காட்டு ராணி நாலஞ்சு தடவை ஆளனுப்பிச்சாளாம். ராஜா மசியலெ. நல்லவனயிருந்தாலும் காட்டு ராணிதானே என்று அலட்சியம். உடனே அவ ஒரு படையை எடுத்திண்டு வந்து தாக்கினாளாம். முற்றுகை போட்டாளாம். காட்டு சைன்யம்னா நல்ல பலம் உள்ளவன் சிப்பாய் எல்லாரும். கடைசியிலே கோட்டைக் கதவை இடிச்சு இப்படித் திறந்தாளாம்."

"இவ்வளவுதான் தெரியுமா?" என்று கோட்டைக் கதவுகளாகக் கற்பனை செய்யப்பட்டிருந்த தன் உதடுகளை அந்த உதடுகளினின்று இழுத்துக்கொண்டான் பாபு.

"உன் கதையும் நீயும்."

"ஏன் கதை நன்னயில்லியா? . . நீ முடிக்கறதுக்குள்ளியும் அவசரப்பட்டா. அப்பறம் அந்தக் கதவைச் சாத்திச் சாத்திப் பாத்தாங்க ராஜாவோட சிப்பாயெல்லாரும். ஆனால் ராணி அதைத் திறந்துவிட்டாள் இப்படி." இது என்ன சுவை! என்ன போதை இது!

மெல்லிய மூச்சும், பூவின் மணமும், இனிக்கும் ஈரமுமாக அந்த இளமை வந்து பாபுவைத் தாக்கிற்று. காரண காரியங்களை அலசிக் கொண்டிருந்த அறிவைக் கழுத்தைப் பிடித்துக் கீழே அமுக்கிற்று. ஜாதிப் பூ மனிதத் தலையில் தான் இப்போது கமழ்ந்தது.

கன்னத்தின் பூனை மயிர் மின்னிற்று. தளதளவென்ற அதன் மென்மையை மலரச் செய்தது. எவ்வளவு அழகான நெற்றி! காதின் முன் இந்த மயிர் எவ்வளவு இறக்கம்! அவன் கழுத்தில் அவள் கன்னமும், தலையை வலமும் இடமுமாக மாறி மாறித் தேய்ந்து கொண்டிருந்தது.

"இப்பகூட என்னைப் பிடிக்கலியா?"

"நீ போயிடேன்."

"என் மேலே கோபமா?"

"ம்."

அவள் கழுத்து பளபளவென்று பொலிந்தது. கழுத்திலிருந்து இறங்கிய தோள்பட்டையில் பழுக்கத் தொடங்கிய பழமாக, மென்மையும், அழுத்தமும் கலந்த அந்தக் கலவையை இளமையின் தேர்ந்த கைதான் கலந்திருக்க வேண்டும். வளைவுகளும், அழுத்தமும், மலரின் தண்மையும், புதிய கட்டின் உறுதியும் சேர்ந்து அவனைத் தாக்கின.

"நீங்க ஏன் திரும்பியே பார்க்கலே என்னை?"

"ம்."

"இப்பகூடப் பாக்க மாட்டேளா?"

"ஊஉம்."

"அப்படின்னுட்டு பாக்க மாட்டேங்கறேளே."

"க்கும்."

"நீங்க யார் கிட்ட பாட்டு கத்துக்கறேள்."

"ஆமாம்."

"சொல்லுங்களேன்."

"பேசாம இரேன்."

"உங்க அப்பா, அம்மா எல்லாரும் பாபநாசத்திலே இருக்காளாமே."

"க்கும்."

"எனக்கும் பாடத் தெரியும்."

"ம்ஹ்ம்."

"நீங்க யார் கிட்ட சொல்லுகிறேள்."

"ம்."

"சொல்லப்படாதா?"

"ம்ஹ்ம்".

"சொல்லாட்டா வாண்டாமே."

அமுத கலசம் போல உணர்வின் அலை மீது அந்த உடல் மிதந்தது.

"க்கும், திரும்பிக்கூடப் பாக்க மாட்டேன்னுட்டு அப்ப. . . என்னத்துக்காக போயிடு போயிடுன்னேள்."

"க்கும்.

"பயமாயிருக்கிறதா"

"ஆமாம்."

நீளச் சுரைக் காய்களைப்போல அந்தச் சிறு ஒளியில் கால்கள் பளபளத்தன.

"எதுக்கு வந்தே, எதுக்கு வந்தேன்னு ஏன் என் மேலே கோபமாய் பாஞ்சே நீ?"

"எப்ப?"

"எப்பவா!"

"பேசாம இரேன்."

"நீங்க ஏன் பேசவே மாட்டேங்கறேள் என்னோடே?"



தெருவில் போய்க்கொண்டிருக்கும் உபாத்தியாயர்:—டேய் மணி! எப்படிடா இருக்கு பேப்பர்?

மாணவன்:—வீசை எட்டணா ஒன்பதணாவாக இருக்கு சார்!

உபாத்:—அது இல்லேடா! நேற்று பரீட்சை எழுதினாயே, அது எப்படியிருக்குன்னு கேட்டேன்!

உறை கழற்றிய வீணை மாதிரி கிடந்த அந்த உடல், இருப்புக் கொள்ளாமல் அலை அலையாக எழுந்தது.

ஜாதிப் பூ மனிதத் தலையில்தான் கமழ்ந்தது.

வெளியே காக்காய்கள் இரண்டு மூன்று நிலவை வைகறையாகக் கண்டு கரைந்தன. கோட்டான் மட்டும் சுயபுத்தியுடன் கூவிற்று. சாகுருவி நடுநிசிதான் நடுநிசிதான் என்று சற்றைக்கொரு தரம் கரைந்தது. சினிமாப் பார்த்துவிட்டுப் போகிற ஒரு செருப்பு ஜோடி, வாசலில் டப்பிட்டு டப்பிட்டு ஒலி பெருகித் தேய்ந்து மறைந்தது. கிணிக் கிணிக் கிணிக் என்று சுவர்க் கோழி எதற்கோ தாளம் போட்டுக்கொண்டிருந்தது.

"பாத்தா சாது மாதிரி இருக்கு. . ."

பாபு எழுந்து ஜன்னலைத் திறந்துவிட்டான். ஜிலுஜிலுவென்று குளிர்ந்த காற்று முகத்திலும், மார்பிலும் வீசிற்று.

"அப்பாடா, நல்ல காத்து....எங்கே அந்த பொட்டி....இதோ இருக்கு, இதோ இருக்கு. . நான் வரட்டுமா?"

பாபு காவேரியைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்திருந்தான்.

"நான் வரட்டுமா?"

பாபு தலையசைத்தான்.

"என் மேலே கோபமா?"

இயந்திரம் போல திரும்பாமலேயே "இல்லே" என்ற பாவனையில் தலையை அசைத்தான் அவன்.

"ஏன் திருப்பிப் பாத்துப் போயிட்டு வான்னு சொல்லப்படாதா?"

பாபு திரும்பவில்லை.

"கொஞ்சம் எழுந்திரேன். . . . . எழுந்திரேன்."

ஜமக்காளத்தை எடுத்து கட்டிலில் போட்டு தலைமாட்டில் தலையணையை வைத்துவிட்டு, "போய்ட்டு வரட்டுமா?" என்றாள் அவள்.

"ம்."

"இஞ்ச பாரேன்."

பாபு திரும்பினான்.

"வரட்டுமா?"

"ம்."

"போக வாண்டாமா?"

"இல்லே. போயிட்டு வா."

"கோபமில்லியே."

"இல்லே."

"வரட்டுமாடா, கண்ணா."

நிலையில் தயங்கி, பக்கங்களில் பார்த்துவிட்டு மாடிக்கட்டையண்டை போயிற்று அந்த உருவம்.

பாபு திரும்பிக்கொண்டான்.

காவேரி புனிதமாக ஓடிக்கொண்டிருந்தது. இவ்வளவு வேகம் எதற்கோ? சொல்லைக் காப்பாற்றாதவர்களின் கண அவ்வளவு சுடுமா? அந்தச் சூடு தாங்காமலா தப்பித்து ஓடுகிறது இந்தப் பிரவாகம்? அகௌரவமான மனிதர்களைக் கண்டு தூர விலகுகிற விரைவா?

அதோ அந்தப் படிக்கட்டுத்தான். அங்குதான் அப்பா உட்கார்ந்திருக்கிறார். ராஜூவின் கதையைச் சொல்கிறார். நடுப் பொட்டலில் அமுதிட்ட அம்மாள்கூட அதோ வருகிறாள்.

பாபு வேறு திசையில் பார்த்தான். மனம் கூசிற்று.



பம்பாய் அமெச்சூர் டிரமாடிக் பார்ட்டியினர் நடித்த ஸ்ரீமான் சுதர்சனத்தின் பரமேஸ்வர மூலியாராகத் தோன்றும் ஸ்ரீ பி. வி. ராஜனும், சுதர்னையாக நடித்த ஸ்ரீ எஸ். ஆர். கஸ்தூரியும்.

இந்த மாதிரி வாழைத்தோட்டமாக, தூங்குமூஞ்சி மரமாகப் பிறந்திருந்தால்? எப்போதும் நிம்மதியுடன் இருந்திருக்கலாம். . . ஆ, அந்தத் துறையிலும் அப்பா தான் உட்கார்ந்திருக்கிறார்!

"குற்றத்தை நீயாக வந்து ஒப்புக்கொண்டால் ஆகிவிட்டதா? குற்றம் செய்தது இல்லை என்று ஆகிவிடுமா? முதல் குற்றவாளி நான்தான். உன்னிடம் நம்பிக்கை வைத்த குற்றம்தான் எல்லாவற்றிற்கும் காரணம். பூஜை உள்ளில் வைத்துக் காப்பாற்றப்பட வேண்டிய பொருளை தெருத் திண்ணையில் வைத்தால் மாடும், ஆடும் இழுத்துப் புழுதியில் புரட்டுகிறது. நாய் முகர்ந்து பார்க்கிறது. . . . நான் பேசாமலிருந்தால். . ." என்று சொல்லிக்கொண்டே அந்த உருவம் நீரில் குப்புற விழுந்தது.

சரேலென்று ஜன்னல் கதவைச் சாத்தினான். வெடவெடவென்று உடல் பதறிற்று.

அப்படியே படுத்தான். தலையணையை யார் மேற்கே வைத்தார்கள்? கிழக்கே யல்லவா இருப்பது வழக்கம்! . . . . . . அவளா! குடியைக் கெடுத்தவள்.

இல்லை. . . நம்மைச் சோதிப்பதற்காக, துப்புத்துலக்குவதற்காக அந்தத் தெய்வமே அனுப்பிய உளவாயிருந்தால்?...

இந்த அடுத்த வீடு ஏன் இங்கே இருக்கிறது? கட்டை உயரமாக இருந்திருந்தால் அந்த உளவாளி இங்கு வந்திருக்க முடியுமா? . . . இப்படி ஏமாற்றுவது தான் தெய்வத்தின் பிழைப்பா? இதுவா கருணை? இதுவா தெய்வத்தன்மை? மட்டமான போலீஸ்காரன் செய்கிற நீசத்தனம். அண்டிக் கெடுப்பதா தெய்வத்தின் வீரம்! . . .

இனி ராஜத்தின் முகத்தில் எப்படி விழிப்பது? ரங்கண்ணாவின் முகத்தில்? யமுனாவின் முகத்தில்? யமுனா இதையெல்லாம் கண்ணைப் பார்த்தே தெரிந்து கொண்டுவிடுவாள். நிலையின் வழியாக அந்த அறை தெரிகிறது. அந்தக் கிழம் எப்படித் தனியாக நம்பி ஊருக்குப் போயிற்று? நல்ல தண்டனை!

இந்த நிலையை மூடி வைத்திருந்தால்? மூடியிருந்த கதவைக்கூட காட்டு ராணியின் சிப்பாய்கள் வந்து தகர்த்தார்களாம்.

உண்மையாகவே பேதையா இவள்? ரத்னம் வைக்கிற பெட்டியில் அறியாமையின், அவசரத்தின் கிழிசல் ஒன்றைப் பத்திரப்படுத்தியிருக்கிற இவள் பொல்லாதவளா, குடியைக் கெடுக்கிறவளா! பாவம்!

நிலையை மூடியிருந்திருந்தால்? . . . எப்படி மோகினி மாதிரி வந்து நின்றாள்! உள்ளத்தை, உறுதியைக் குடிக்கிற மோகினி வந்த போது இந்த நிலை மூடியிருந்திருந்தால்? . . .

பாபு எழுந்து மொட்டை மாடி நிலைக் கதவைச் சாத்தித் தாழிட்டான்.

அந்த மொட்டை மாடியிலிருந்து இருமல் கேட்டது. . . . விழிப்பு இருமலா? தூக்க இருமலா?

கிணிக் கிணிக் கிணிக் என்று சுவர்க் கோழி துளைத்தது. உள்ளே உள்ள ஆதார சுருதிக்கு மேல் ரிஷபமாக ஒலித்தது அது.

"ஏண்டா நேத்திக்கி வரலே? . . . . . அண்ணா வந்திருந்தானா? உனக்கு ஒரு அண்ணா இருக்கிறானா? . . . . ஒன்றுவிட்ட அண்ணாவா? . . . அவனையும் அழச்சிண்டு வரப்படாதோ? . . . மூஞ்சி ஏன் என்னமோ போலிருக்கு? . . . . என்னது? 'அந்த'க் கனைன்னா சொட்றது? சங்கீதத்துக்கு முழுக்குப் போட்டுட்டேன்னு சொல்லு. . . மூஞ்சியிலே கொலை பண்ணின களை கூத்தாடறதேடா? யாரைக் கொலை பண்ணினே? எதைக் கொலை பண்ணினே? . . . சீ, தர்மஹத்தி, எந்துண்டு தொலை. . . என் மூஞ்சியிலே முழிக்காதே. . . உனக்குத் தேவடியா வீடுதாண்டா லாயக்கு? அவளை மடியிலே போட்டுக்கோ. . . தம்புரா என்ன மடியிலே? துன்மார்க்க தரித்திரம் . . ."

பாபு இறுக்கிக் கண்ணை மூடிக்கொண்டான். ரங்கண்ணா வெய்யத் தொடங்கினால் எதிராளியின் உடல் வாடிச் சாம்பிமட்க வேண்டும்.

"அப்பா பேரைக் கெடுக்க வந்திருக்கியாடா, பாவி? அப்படி உடம்பு கெட்டுதுன்னா எங்கியாவது தேவடியா வீட்டுக்குப் போறது? இப்படி ஏன் நிலையிலே சேத்தை வாரிப் போட்டுக்கறே"-அம்மா தான். ஓலை ஆட, குங்குமம் பளீர் என்று மின்ன, அவள் வார்த்தைகளில் எவ்வளவு நிஷ்டூரம், எவ்வளவு கோட்டையிடிந்த நிராசை!

வக்கீல் குமாஸ்தா கிழம் நீட்டப் பல்லுடன், உடைந்த உடலுடன், வீல் எலும்பு ஊத ஊத அழுகிறது. . .

பாபு எழுந்து விளக்கைப் பொரி பண்ணினான்.

உதிர்ந்து கிடந்த ஜாதிப்பூவைக் காலால் தள்ளி எடுத்து வீசி எறிந்தான்.

வாசலில் சாணி தெளிக்கும் ஓசை கேட்டது. இந்த வீட்டு வாசலில்தான். மணி நான்கு ஆகியிருந்தது.

நடுவில் எழுந்து உட்கார்ந்தோமே, அப்பொழுது எழுந்து கீழே ஓடியிருந்தால். . . ஏன் ஓடவில்லை?

ஏன் ஓடவில்லை? கீழே எழுந்துவிடுவார்கள் என்ற பயமா?

இவளைக் கைவிட்டுப் போகிற பயம் தான்.

இன்னும் அவள் உருவம் முன்னால் நிற்கிறது. எதையோ திருடிக்கொண்டு நிலையைக் கடந்து, மாடிக் கட்டைச் சுவரை ஏறிக் குதித்து ஓடுகிறாள்.

பாபு எழுந்தான். நான்கு மணி தான். இருள் பிரிய வெகு நேரம் இருக்கிறது. குளிர் காற்றாக வீசிற்று. உள்ளே அனல் அடித்தது.

பாபு கதவைப் பூட்டிக்கொண்டு கிளம்பினான். வேகமாக நடந்தான், கிழக்கே பார்க்க. பக்தபுரித் தெருவில் திரும்பி தெற்கே நடந்துகொண்டிருந்தான்.

பாணதுறைப் பக்கம் போகும்போது, ஒரு நாய் பெரிய உறுமலாக உறுமிற்று. பின்னாலேயே வந்தது. அதிகமாகக் குரைக்கக்கூட இல்லை. கன்னத்தில் முள் படர்ந்தது அவனுக்கு. பயத்தில் ஒடுங்கி,

ஒடுங்கி வேகம் என்று தெரியாமல், அதைத் திரும்பிப் பாராமல் நடந்தான்.

கூடவே வந்த நாய் ஏதோ எல்லே தாண்ட மறுப்பது போல் சட்டென்று நின்று பொரிதாகக் குரைத்தது.

"கடியேன். பத்து நிமிஷம் முன்னுலேயே உனக்குப் பலியாகிறேனே. . . . ஆனால் நீ என்ன சாகச் சாகக் கடிப்பாயா? . . . நீ என்ன பாம்பா? . . . பிடிச்சோற்றுக்கு வாலைக் குழைத்து அடிமையாக இளிக்கிற நாய்ப் பிழைப்பு. . ."

நாயின் குரைப்பு அதுவாக வகுத்துக் கொண்ட எல்லையில் கேட்டது. சிறிது சிறிதாகக் குறைந்தது. பாபு நடந்து கொண்டே திரும்பிப் பார்த்தான். தெற்கே பார்த்த நாய் முகத்தை வடக்கே திருப்பி மெதுவாக நடந்து படுத்துக் கொண்டது.

ஃ ஃ ஃ

மகாமகக் குளத்தின் வட கிழக்கு மூலை இது. பாசியை ஏவி வழுக்கவிட்டுப் பலருக்கு மோட்சம் கொடுத்திருக்கிற மூலை.

நீந்துகிறவனுக்கு நீரில் சாக முடியுமா? . . . ஏன், முடியாது? . . . கை சளைக்கிற வரையில் நீந்துகிறது. நடுக் குளத்திலேயே சுற்றிச்சுற்றிச் சோர்கிற வரையில் நீந்தினால்? . . . நிச்சயம் காவேரியை நம்ப முடியாது. எங்காவது ஆளை உயிரோடு உலகத்தின் கரையில் கக்கி ஒதுக்கிவிடும். இது நிச்சயம் நம்பிச் சரண் அடையக்கூடிய இடம்.

வர்தய்யர்கூட இங்கேதான் விழுந்தாராம். வீட்டில் ஏதோ தகராறாம். சாஸ்திரிகள் அன்று சொன்னது நன்றாக ஞாபகமிருக்கிறது.

இந்த ஊரில் செய்த பாபம் இந்த ஊரிலேயே தொலைந்துவிடுமாம். எவ்வளவு நம்பிக்கை! அப்படியானால் இன்னொன்றும் முடியுமா? இந்த ஊரில் பாபம் செய்த உடலை அழிக்க முடியுமா இதற்கு!

மாலையில் வந்து ஒரு கூட்டம் கரையில் நின்று இதைப் பார்த்துக்கொண்டு நிற்கும். போலீஸ்காரன்வந்து இழுத்துப் போடுவான். ஆஸ்பத்திரி. . . . அப்பா, அம்மா, ராஜம், ரங்கண்ணு, யமுனு. . . . ஊரில் அடி வாங்கின பட்டப்பாவும் தான் இதைக் கேட்டுச் சிரிக்கப் போகிறான். என்ன சொல்வானே!

பாசி வழுக்காமல் ஜாக்கிரதையாகக் காலை ஊன்றி வைத்து இறங்கினன் பாபு. எதற்கு இந்த ஜாக்கிரதை! . . . நீர் வெடவெடவெடவென்று காலை நடுக்கிக் குத்திற்று.

சிரிப்பு வந்தது.

ராஜுவின் நினைவு, பொட்டலில் அழுதிட்ட அம்மாள், அப்பா, யமுனு—இவர்கள் இருக்கிற உலகிலா இவ்வளவு அதைரியம்! இவ்வளவு பலஹீனம்! இவ்வளவு கோழைத்தனம்.

புழுதி மண்டியிருந்த காலை நன்றாகத் தேய்த்து அலம்பினன் பாபு.

இது தண்டனை இல்லை. தப்பித்துக் கொண்டு ஓடி ஒளிகிற கோழைத்தனம். ஓடி ஒளிந்து கொள்வதற்கு மரணத்தைப் போல் பத்திரக் குறைவான இடம் இருக்க முடியாது! சிரிப்புகளும், நகைப்புகளும் எழுந்து மானத்தை வாங்குகிற இடம்.

பாபு காலை நன்றாகக் கழுவினன். மெதுவாகக் கரையேறினன். கரையோடு மேற்கு நோக்கி நடந்தான்.

கடலங்குடித் தெருவில் ஒரு வீடும் எழுந்திருக்கவில்லை. சில வீடுகளில் சலசலவென்று சாணி தெளிக்கும் ஓசை கேட்டது. இரண்டு, மூன்று வாசல்களில் மாடுகள் கட்டியிருந்தன. அரிக்கேன் வெளிச்சத்தில் பால் பீர் விழுந்து வெறும் பாத்திரத்தில் பாதி நிரம்பிய செம்பிலுமாக விழுந்து கொண்டிருந்தது.

ராஜத்தின் வீடு சாத்தியிருந்தது. அவனிடம் போய்ச் சொல்ல முடியுமா இதை? முடியாது. . . கதவைத் தட்டிப் பார்ப்போமா. . . வேண்டாம். . .

இன்னும் நடந்து கடைத் தெரு திரும்பி துக்காம்பாளையத் தெருவில் தான் போக முடிந்தது.

யமுனு வீட்டு வாசலில் சாணி மட்டும் தெளித்திருந்தது. கோலத்தைக் காணவில்லை. வாசல்படி ஏறினன் பாபு.

கொல்லையில் பார்வதி பல் தேய்த்துக் கொண்டிருந்தாள்.

"யாரது?" என்று உள்ளே விசிறிக் கொண்டே நடையில் யாரோ வருவதைப் பார்த்த யமுனுவின் குரல் எழுந்தது.

பாபு பேசாமல் ஊஞ்சலுக்கருகில் வந்து நின்றான்.

"என்ன பாபு? வா, உட்காரு."

பதில் பேசாமல் உட்கார்ந்தான்.

யமுனு பார்த்த பார்வை உள்ளே போய்த் துளைப்பது போலிருந்தது. தலையைக் குனிந்து கொண்டான் அவன்.

"எங்கேருந்து வரே பாபு?"

"சும்மா இப்படி உலாவிப்பிட்டு வரேன்?"

"உலாவிப்பிட்டா? அதுக்குள்ளாரவா?"

"எதுக்குள்ளார?"

"இவ்வளவு காலமேயா?"

"ஆமாம். . . பாக்கணும்போலிருந்துது. வந்தேன். வரலாமோல்லியோ?"

"என்னது?"

பாபு அவளை ஒரு முறை பார்த்தான் நிமிர்ந்து, அடிபட்ட நாய் போல.

"எப்ப எழுந்திண்டே?"

"நான் எழுந்திருக்கவேல்லெ, யமுனு."

"என்னது?"

"ஆமாம்" என்று விக்கி விக்கி அழ ஆரம்பித்துவிட்டான் அவன். யமுனு வேகமாக அருகில் ஓடிவந்தாள்.

"பாபு, பாபு, என்ன உடம்பு? எங்கேருந்து வரே?...என்னத்துக்கு அழறே?"

பாபு குழந்தை மாதிரி வாய்விட்டு அழுது கொண்டிருந்தான். அடைந்து கிடந்த வேதனை பீறிக்கொண்டு வந்தது.

"என்னத்துக்கு அழறே? எங்கேர்ந்து வரே? அப்பா உடம்பு சரியாத்தானே இருக்கார்."

"அதெல்லாம் ஒன்றுமில்லை" என்ற பாவனையில் தலையாட்டினன் பாபு.

"பின்னே என்ன"

"ஒண்ணுமில்லே" என்று சட்டென்று அழுகையை அடக்கிக்கொண்டான் பாபு.

"என்ன பாபு?"

"ஒண்ணுமில்லே. . . நான் வரேன்."

"எங்கே வரே? . . . போயிண்டே இருக்கியே என்ன?"

"ஆமாம் யமுனு, அம்மாகிட்ட ஒண்ணும் சொல்லாதே" என்று மெதுவாகக் கெஞ்சிவிட்டு வாசலில் இறங்கிவிட்டான் பாபு.

"பாபு, பாபு."

பாபு திரும்பினன்.

"இங்க வாயேன்."

"எதுக்கு?"

"எதுக்கா?"

"அப்பறம் வரேன்" என்று, அவள் வாயடைத்துக் குழம்பி நிற்க, வாசலில் வேகமாக நடந்து ஆனேயடி திரும்பினன் அவன்.

(தொடரும்)



திருவல்லிக்கேணி கலாசாரக் கழகத்தின் மூன்றாவது ஆண்டு விழா வைபவம் ஸ்ரீ வி. பி. ராமஸ்வாமி அய்யர் தலைமையில் நடைபெற்றபோது டாக்டர் வே ராகவன் மேற்பார்வையில் 'சங்கராசாரியாரும், சீடர்களும்' என்ற நாடகம் நடிக்கப்பெற்றது.








## சர்வோதயக் காட்சிகள்

1. (மேல்) காஞ்சீபுரத்தில் நடைபெற்ற சர்வோதய மகாநாட்டில் ஸ்ரீ அப்பா சாகிப் பட்டவர்த்தன் தலைமை தாங்கிப் பேசுகிருர். 2. (நடு) சர்வோதயபுரம் அகில இந்திய கதர் கிராமக் கைத்தொழில் போர்டு கூட்டத்தில் விநோபாஜி, ராஜாஜி, ஜெயப்பிரகாஷ்நாராயண் ஆகியோர். 3 (கீழே) விநோபாஜி தங்குவதற்காக அமைக்கப்பட்ட எழில் மிக்க பர்ணசாலை பக்கத்தில் சர்வோதய மகாநாடு நடைபெற அமைக்கப்பட்ட பிரும்மாண்டமான பந்தல்.





# சாரணர்  உலகம்



ஜினீவாவில் நடக்கும் சர்வ தேச தொழில் ஸ்தாபன மகா நாட்டுக்கு இலங்கை தொழிலாளர் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ டி. ராமானுஜம்.

## சமிக்ஞைகள்

★

இது வரையில் முதற் சிகிச்சையைப் பற்றி படித்திருப்பீர்கள். எந்த சமயத்தில் எவ்விதம் முதற் சிகிச்சை செய்ய வேண்டுமென்பதை நன்கு அறிந்திருப்பீர்கள். எல்லா சமயங்களிலும் ஒரேவித முதற் சிகிச்சை செய்ய முடியாது. சமயத்திற்கேற்றவாறு அதைச் செய்ய வேண்டும்.

முதற் சிகிச்சையின்போது நம் மூளையையும் உபயோகிக்க வேண்டும். எந்த முதற் சிகிச்சை செய்தால் உடனே பலனளிக்குமென்பதை சீக்கிரம் நிச்சயிக்க வேண்டும், அமுலிலும் நடத்த வேண்டும்.

சாதாரணமாக புஸ்தகத்தைப் படிப்பது சுலபம். அதிலிருப்பதை பின்பற்றுவதுதான் கஷ்டம். இந்த விதிக்கு முதற் சிகிச்சை விலக்கல்ல. புஸ்தகத்தில் கண்டவாறு முதற் சிகிச்சையளிப்பது சிரமம். அப்படி முடிந்தாலும் அதை சமயத்திற்கேற்றவாறு செய்வதுதான் மிகவும் கஷ்டம். இதுவரையில் படித்ததைக் கொண்டு நீங்கள் எந்த சமயத்திலும் சமாளிக்க முடியும்.

முதற் சிகிச்சையில் இன்னும் கொஞ்சமிருக்கிறது. ஆனால் அதை சாரணர்களும் மற்றவர்களும் அறிய அவ்வளவு அவசியமல்ல. ஆதலால்தான் அதைப்பற்றி மேலும் விஸ்தரிக்கவில்லை.

நாம் இனி அறிய வேண்டியது சமிக்ஞைகள்தான். பிறத்தியாருக்கு ஒரு விஷயத்தை தெரியப்படுத்துவதுதான் சமிக்ஞை. நாம் வாய் திறந்து பேசுவதும் ஒரு வித சமிக்ஞைதான். சிலரால் பேச முடியாது. அவர்கள் கையை உபயோகப்படுத்தி பிறருக்கு புரியும்படியாக சைகை செய்கிறார்கள். இதுதான் சமிக்ஞை.

சமிக்ஞைகளின் உபயோகமென்ன? பிறத்தியாருக்கு விஷயத்தை தெரியப்படுத்துவதுதான் முக்கியமான உபயோகம். இதில் சில வேறுபாடுகளிருக்கின்றன. பிறருக்கு புரியாமல் தங்களுக்கு மட்டும் புரியும்படியான சமிக்ஞைகளையும் சிலர் உபயோகப்படுத்துவார்கள்.

சமிக்ஞைகளில் பலவிதமுண்டு. யுத்த காலத்திலும் சரி, சமாதான காலத்திலும் சரி, இராணுவ அதிகாரிகள் தங்களுக்கு பிரத்தியேகமான சமிக்ஞைகளை உபயோகிப்பார்கள். ஏன்? பிற நாட்டைச் சேர்ந்தவர்கள் நம்முடைய இராணுவ ரகசியத்தை அறிய முயற்சி செய்வார்கள். அவர்களை அதை அறியவிடாமல் செய்ய ரகசிய சமிக்ஞைகள்தான் தேவை.

இதேபோல் வேவு பார்ப்பவர்களும் தாங்கள் அறிந்த ரகசியத்தை சமிக்ஞைகள் மூலம்தான் தெரிவிப்பார்கள். சாதாரண பாஷையில் தெரிவித்தால் அவர்கள் வேவு பார்ப்பது அம்பலமாகி அதனால் அவர்கள் ராஜாங்க விருந்தாளிகளாகயிருக்க நேரும். இதைத் தவிர்க்கவே தான் அவர்கள் சமிக்ஞைகளை உபயோகப்படுத்துகிறார்கள்.

லார்ட் பேடன் பவல் யுத்தத்தின்போது சிறுவர்களின் உதவியுடன் எதிரியின் பலத்தை அறிந்தார். எப்படி? மரங்களிலும், புதர்களிலும் சிறுவர்கள் வேஷமணிந்து திரிவார்கள். எங்கு? எதிரியின் கூடாரங்களின் அருகில்தான். இவ்வாறு திரிந்து அவர்கள் எதிரியின் பலத்தை அறிவார்கள். தங்கள் தலைவருக்கு அறிந்த செய்திகளை எப்படி அனுப்புவது? இவர்களும் சமிக்ஞைகளைதான் உபயோகித்தார்கள். இவர்கள் பட்சிபோல் கூவுவார்கள். மிருகங்கள்போல் கத்துவார்கள். நீரில் சலசலப்பு உண்டாக்குவார்கள். இந்த சமிக்ஞைகளில் வெவ்வேறு அர்த்தமிருந்தது. அந்த அர்த்தம் அவர்களுடைய தலைவரான லார்ட் பேடன் பவலுக்கும் மற்ற சகாக்களுக்கும் நன்கு தெரி

**சித்தார்த்தன்**

யும். எதிரிகள் இவைகள் காட்டில் ஏற்படும் சப்தமெனக் கருதி சும்மாயிருந்தனர். இதுவே அவர்களுக்கு ஆபத்தை உண்டாக்கியது.

இராணுவத்தினர் மட்டும்தான் சமிக்ஞைகள் உபயோகிக்கிறார்கள் என்று நினைக்க வேண்டும். சமிக்ஞைகளை உபயோகிப்பதில் வியாபாரிகளுக்கும் பங்கு உண்டு. சமான்களை விற்கவோ, அல்லது வாங்கவோ தங்களுடைய ஏஜெண்டுகளுக்கு இவர்கள் சமிக்ஞைகள் மூலம்தான் தெரிவிப்பார்கள். இதனால் அவர்களுக்கு இரு வித லாபமுண்டு. மற்ற வியாபாரிகளுக்கு இவர்கள் எந்த சரக்கை வாங்கப் போகிறார்களென்று தெரியாது. இதேபோல் சாமான்களை என்ன விலையில் வாங்குகிறார்கள் என்றும் தெரியாது. இதுதான் இப்பெரு வியாபாரிகள் பண்ணும் லாபத்தின் முக்கிய காரணம்.

சமிக்ஞைகளில் பல விதமுண்டு. சிலர் கோடுகளைக்கொண்டே சமிக்ஞைகளைத் தயாரிப்பார்கள். சிலர் சாதாரண பாஷைக்கு வேறு அர்த்தம் கொடுத்து அதையே சமிக்ஞையாக உபயோகிப்பார்கள். இன்னும் சில பேர்கள் கட்டம் போட்டு அதில் புள்ளி முதலியவற்றை வைத்து சமிக்ஞைகளை உபயோகிப்பார்கள். இன்னும் எத்தனையோ விதமிருக்கிறது. இவர்களுக்கு அந்த சமிக்ஞையின் அர்த்தம்தான் புரியவேண்டியது.

எவ்வளவோ சமிக்ஞைகளிருந்தும் சாரணர்களுக்கும் மற்றவர்களுக்கும் தெரிய வேண்டியது இருவகைதான். இவைகளுக்கு 'மோர்ஸ் கோட்' என்றும், 'சேமா போர்ஸ்' என்று பெயர். சாரண உடையில் ஊதலுக்கும் ஒரு பங்கு உண்டல்லவா? இந்த ஊதலைத்தான் 'மோர்ஸ் கோட்'டின்போது உபயோகிப்பார்கள். 'சேமா போர்ஸ்' உபயோகிக்கும்பொழுது துணியால் செய்யப்பட்ட கொடிகளை உபயோகிப்பார்கள்.

அடுத்த கட்டுரையில் 'மோர்ஸ் கோட்' எந்த சமயத்தில் உபயோகிக்கப்படுமென்றும், 'சேமா போர்ஸ்' எந்த சமயத்தில் உபயோகிக்கப்படுமென்றும் விஸ்தரிக்கப்படும்.

## பம்பாய் நிகழ்ச்சிகள்

பம்பாய்த் தமிழ்ச் சங்கத்திற்கென சுமார் 2½ லட்ச ரூபாய் செலவில் நிர்மாணிக்கப்பட்டுள்ள புதிய கட்டடத்தின் திறப்பு விழா ஜூன் 2-ந் தேதியன்று நடைபெறவிருக்கிறது. தமிழர்களுக்கே பெருமை தரும் வகையில் தலை நிமிர்ந்து நிற்கும் மணி மண்டபத்தை சென்னை முதலமைச்சர் ஸ்ரீ கே. காமராஜ் திறந்து வைக்கிறார். பம்பாய் ராஜ்ய பாலர் ஸ்ரீ ஹரே கிருஷ்ண மேதாப் தலைமையில் நடைபெறவிருக்கும் இவ்விழாவில், ஸ்ரீ சி. சுப்ரமண்யம், ஸ்ரீ எம். பக்தவத்ஸலம் ஆகிய சென்னை அமைச்சர்கள் கலந்து கொள்கின்றனர்.



பம்பாய்த் தமிழர்களின் நீண்ட நாள் கனவு நனவாகும் இப்பொன்னாளை கோலாகலமாகக் கொண்டாடும் வகையில், 'அகத்தியர் முதல் பாரதி வரை' தமிழகத்தின் வளர்ச்சியை இசை நாடகத்தில் காண்பிக்கவும், நடனம், இன்னிசை, கவியரங்கம் முதலிய பல நிகழ்ச்சிகள் நடைபெறவும் ஜூன் 2, 3 தேதிகளில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

# கலா மண்டபம்

## சினிமாச் செய்திகள்

தென்னிந்திய பிலிம் வர்த்தக சபையின் வருடாந்திரக் கூட்டம் கடந்த ஞாயிறன்று நடைபெற்றபோது, 1956–57–ம் வருட நிர்வாகிகளாக கீழ்க் கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர் :தலைவர்: டி. ஆர். சுந்தரம் (மாடர்ன் தியேட்டர்ஸ்); உப தலைவர்: ஜி. கே. மங்கராஜு (பூர்ணா பிக்சர்ஸ், விஜயவாடா); கௌரவ காரியதரிசிகள்: பி. எஸ். ராமகிருஷ்ண ராவ் (பரணி), டி. ராமானுஜம் (பிரகாஷ் டாக்கீஸ், அரக்கோணம்); பொக்கிஷதார்: கே. எஸ். நாராயண ஐயங்கார் (நாராயணன் கம்பெனி); கமிட்டி மெம்பர்கள்: எஸ். எஸ். வாஸன், கே. பி. நாகபூஷணம், ஏ. ராமய்யா, வி. ஸி. சுப்பராமன், என். ஆர். ஸ்ரீநிவாஸன் (பக்ஷிராஜா), பி. என். குப்தா (பங்களூர்), வி. ஸ்ரீநிவாஸன் (பெல் பிக்சர்ஸ்), ஸுந்தர்லால் நஹாதா (ராஜ்ஸ்ரீ), டி. வி. எஸ். மணி (மிட்லண்ட் தியேட்டர்), வி. சுப்ரமணிய ஐயர் (நாகை), டி. ஸத்ய நாராயணா (விஜயவாடா), டி. வெங்கடபதி ராவ் (ஸன் தியேட்டர்), கே. விஸ்வநாதன் (சித்ரா டாக்கீஸ்), மஜீத் ஏ. கே. காஜி (விஜயா ஸினி லாபரடரி), ஜி. ராமஸ்வாமி (மதுரை), கே. சுப்ரமண்யம், கே. வெங்கடராமன் (சென்னை).

சபையில் இப்போது மொத்தம் 296 மெம்பர்கள் இருப்பதாக அவ்வமயம் சமர்ப்பிக்கப்பட்ட ஆண்டறிக்கையில் கூறப்பட்டுள்ளது; சென்ற வருடம் இத்தொகை 268 தான்.

ஃ ஃ ஃ

சினிமா விளம்பரத் துறையில் சிறப்பெய்தியுள்ள ஸ்ரீ வி. நமசிவாயம், சினிமா மோஸ்தாில் எவரும் படமெடுத்துக்கொள்ளச்சிறிதுகாலமாகதமதுபாரத் ஸ்டுடியோவில் வசதிகள் செய்து தருவது வாசகர்கள் அறிந்ததே. இப்போது சென்னையின் மற்றுமொரு நெடுநாளையத் தேவையைப் பூர்த்தி செய்துவிட்டார் இவர், பாரத் பப்ளிஸிடி பிலிம்ஸ் என்ற ஸ்தாபனத்தைத் துவக்கியிருப்பதன் மூலம். விளம்பரதார்கள் தங்கள் பண்டங்கள் குறித்து துண்டுப் படங்கள் எடுத்து தியேட்டர்களில் திரையிடுவதற்காக ஏற்பட்டதாகும் இது. பாரத் ஸ்டுடியோவில் இதற்காகவென்றே 35 மில்லிமீடர் காமிராக்களுடனும், கலைப்பிரிவு,ப்ரிவ்யூ தியேட்டர் முதலான வசதிகளுடனும் ஒரு தனி இலாகா துவக்கப்பட்டுள்ளது.

இந்தப் பிரிவினுல் தயாரிக்கப்பட்ட சாகுந்தல நடன–நாடகப் படம் சென்ற வாரம் ப்ளாஸா தியேட்டரில் பத்திரிகையாளருக்குப் போட்டுக் காட்டப்பட்டது. இந்திய கலாசார கோஷ்டியுடன் சீனா சென்று வந்த ஸ்ரீ கோபால கிருஷ்ணன்

சங்கர், கோபிநாத் ஆகியோரின் சிஷ்யையான குமாரி வி. சாந்தியும் தோன்றும் இப்படத்துக்கான நடனங்களை அமைத்திருப்பதோடு விச்வாமித்ரர், துர்வாஸர், கண்வ மகரிஷி, செம்படவன் முதலான பல பாகங்களையும் ஏற்றுள்ளார் நடன ஆசிரியர் ஸ்ரீ விச்வம். பாடல்களை சேலம் ராமஸ்வாமிப் பாவலர் தொகுத்திருக்கிருர்; ராதா–ஜயலக்ஷ்மியும், கொத்தமங்கலம் சீனுவும்தான் பின்னணிப் பாடகர்கள். சங்கீத டைரக்ஷனை ஸி. என். பாண்டுவும், படப்பிடிப்பு, டைரக்ஷனை மதுரும் கவனித்துகொண்டுள்ளனர்.



பாரத் ஸ்தாபனத்தின் திறமைக்கு ஏற்றவாறே அமைந்திருக்கிறது இந்தத் துண்டுப்படம். விளம்பரதார்களுக்கு யாதொரு சிரமமுமின்றி, படத்தயாரிப்பு, வினியோகப் பொறுப்பு யாவற்றையும் மேற்படி ஸ்தாபனமே ஏற்றுக்கொண்டு விடுகிறபடியால் இப்புதிய விளம்பர சாதனம் விரைவில் பிரபல்யமுறுமென எதிர்பார்க்கலாம்.

ஃ ஃ ஃ

தென்னுட்டில் முதல் முழுநீள கேவா கலர்ப் படமெடுத்த சேலம் மாடர்ன் தியேட்டர்ஸார் மற்றுமொரு கலர்ப் படத்தையெடுக்கப் புகுந்திருக்கின்றனர். ஜெமினி ஸ்தாபனமோ டெக்னிகலரில் சினிமாஸ்கோப் படமே தயாரிக்க முற்பட்டிருக்கிறது. இந்நிலையில், ஏவி. மெய்யப்பன் மட்டும் பின்தங்குவாரா? அவரும் கலர்ப் படம் பிடிப்பதற்கான முயற்சிகளில் இறங்கிவிட்டார். குப்பி ப்ரொடக்ஷன்ஸ், சங்கர் ப்ரொடக்ஷன்ஸ், கர்னுடகா பிலிம்ஸ் ஆகியவற்றுடன் கூட்டுச் சேர்ந்து ஏவி. எம். ஸ்டுடியோ இதை எடுப்பதற்காக தற்போது பேச்சுவார்த்தைகள் நடந்து வருகின்றன. இவை வெற்றி பெற்ருல் தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மூன்று பாஷைகளிலும் இந்த கலர்ப் படம் எடுக்கப்படுமாம்.

இதனிடையே ஹிந்திப் படங்கள் எடுப்பதிலும் ஏவி. எம். ஸ்தாபனத்தின் ஜரூர் குறையவில்லை. அதன் 'பாய் பாய்' வடநாட்டில் நூறுக்கு மேற்பட்ட இடங்களில் வெளியாகி சக்கைப் போடு போட்டு வருகிறது. அடுத்த படமான 'சோரி சோரி'யும் கிட்டத்தட்ட முற்றுப் பெற்றுவிட்டதெனலாம். எனவே அதற்கும் அடுத்த படமான ஹிந்தி 'மிஸ்ஸியம்மா'வில் இப்பொழுது கவனம் பூராவும் திரும்பியிருக்கிறது. அநேகமாக அடுத்த வாரம் படப்பிடிப்பு துவங்கக்கூடும். இப்படத்தை பிரஸாத் டைரக்ட் செய்வாராம். வசனங்களை ராஜேந்திர கிருஷ்ணுவும், சங்கீதத்தை ஹேமந்தகுமாரும் தொகுத்துள்ளனர். வட இந்திய நடிக, நடிகையரே பிரதான பங்கு வகிப்பராயினும் சில தென்னுட்டு நட்சத்திரங்களும் இப்படத்தில் தோன்றக்கூடுமாம்.

இது தவிர 'நால்வர்' படத்தையும் ஹிந்தியில் எடுக்க ஏவி. எம். முற்பட்டிருப்பது நேயர்கள் அறிந்ததே. இப்படத்தைத் தெலுங்கிலும் தயாரிக்கப் போகிருராம் பிரஸாத். அதில் அவர் இரு புது முகங்களைப் புகுத்தக்கூடுமாம்.

ஃ ஃ ஃ

வாகினி ஸ்டுடியோவில் வீனஸ் பிக்சர்

படத்துக்காக ஈ. வி. சரோஜா முதலானோரோடு பத்மினி ஆடும் நடனக் காட்சியொன்று படமெடுக்கப்பட்டது. . . . . .

'பாயல்' என்னும் ஜோஸப் பள்ளிபாட் படத்தில் தற்போது நடித்து வரும் பத்மினி 'ஆலம்பாரு' என்ற மற்றொரு ஹிந்திப் படத்திலும் தோன்றப்போகிறாராம். அதில் அவர் கதாநாயகியாக நடிக்கச் சமீபத்தில் ஒப்பந்தம் பூர்த்தியாகியது.

ஃ ஃ ஃ

பி. எஸ். ரங்கா உருவாக்கி வரும் விக்ரம் ஸ்டுடியோவில் 'மார்க்கண்டேயா' வேலைகள் மும்முரமாக நடந்து வருகின்றன. புஷ்பவல்லியும் அவரது குமாரனும் ஒன்று சேர்ந்து நடிக்கும் இந்த மும்மொழிப் படத்துக்காக சமீபத்தில் சில பாடல்கள் பதிவாகின. . . ரங்கா டைரக்ஷனில் ரிபப்ளிக் ப்ரொடக்ஷன்ஸார் எடுத்துவரும் தெலுங்குப் படத்தில் கதக் நிபுணர் கோபிகிருஷ்ண நடனங்களை அமைப்பதோடு நடிக்கவும்போகிறார்.

ஃ ஃ ஃ ஃ

புத்தா பிக்சர்ஸ் என்ற புதியதொரு படப் பிடிப்புக் கம்பெனி சென்ற வாரம் உதயமாகியது. நடிகர் நாகையா தலைமையில் நியூடோன் ஸ்டுடியோவில் நடந்த ஆரம்பவிழாவின்போது அதன் முதல் படமான 'பதி பக்தி'க்கும் அங்குரார்ப்பணம் நடைபெற்றது; ஏவி. எம். காமிராமேனை மாருதி ராவ் காமிராவை முடுக்கி வைத்தார். பீம் சிங் டைரக்ஷனில் தயாராகவிருக்கும் இப்படத்தில் சிவாஜி கணேசன், பாலையா, தங்கவேலு முதலானோர் தோன்றலாமெனத் தெரிகிறது. கதை, வசனங்களை சோலைமலை எழுதுகிறார். சங்கீதத்தை விச்வநாதனும், ராமமூர்த்தியும் கவனித்துக்கொள்கின்றனர்.

எஸ். ஆர். எல். பிக்சர்ஸ் என்ற மற்றொரு புதுக் கம்பெனி 'அவள் கண்ட இன்பம்' என்ற படத்துக்கு ரேவதி ஸ்டுடியோவில் ஆரம்பவிழா நடத்தியது; என். எஸ். கிருஷ்ணன் தலைமையில்எம்.ஜி. ராமச்சந்திரன் காமிராவை முடுக்கினார்.

ரேவதி ஸ்டுடியோவிலேயே ஜெய்சக்தி பிலிம்ஸின் 'அலாவுதீனும் அற்புத விளக்கும்' உருப்பெறத் துவங்கிவிட்டது. தெலுங்கிலும், தமிழிலும் தயாராகும் இப்படத்தில் மந்திரவாதியாகத் தோன்றுகிறார் ரங்க ராவ். நாகேச்வர ராவ் போன்று மற்றும் பல முன்னணி நட்சத்திரங்கள் நடிக்கின்றனர் இப்படத்தில்.

'சத்தியவான்—சாவித்திரி' கதையைத் தமிழில் எடுக்கும் யோசனையை கஸ்தூரி பிலிம்ஸார் கைவிட்டுவிட்டதாகத் தெரிகிறது. ராஜாராஜேஸ்வரி பிலிம்ஸார் இதைத் தெலுங்கில் எடுத்து வருவதும், கன்னடத்தில் பண்டாரி பாய் எடுக்க விருப்பதுமே இதற்குக் காரணமாம். இதற்குப் பதில் சமூகப்படமொன்றை கஸ்தூரி பிலிம்ஸ் தயாரிக்கக்கூடுமாம்.

ஃ ஃ ஃ

இவ்வாரம் சாதனா பிலிம்ஸின் 'சந்தானம்', திரிவேணி பிக்சர்ஸின் 'ஒன்றே குலம்', பஸந்த் பிக்சர்ஸின் 'ஹாதிம் தாய்', நாகூர் ஸினி ப்ரொடக்ஷன்ஸின் 'குடும்ப விளக்கு' ஆகிய படங்களை



'தாய்க்குப் பின் தாரம்' தான் சகலமும் என்பதை எம். ஜி. ராமச்சந்திரனிடம் அழுத்திச் சொல்கிறார் போலிருக்கிறது சுரபி பாலசரஸ்வதி.



பாரத் பப்ளிஸிடி பிலிம்ஸின் 'சாகுந்தலம்' நடன-நாடகப் படத்தில் ஒரு காட்சி.



# நகர அரங்கம்



ஸ்ரீமதி கமலா லக்ஷ்மண்.

பரதநாட்டியக் கலையில் தனிச் சிறப்புடன் திகழும் ஸ்ரீமதி கமலா லக்ஷ்மணை அறியாதவர் அநேகமாக இல்லையென்றே சொல்லலாம். அவர் இக்கலையில் பிரவேசித்து இப்போது இருபது ஆண்டுகள் முடிந்துவிட்டதையொட்டி அவருக்கு இம்மாதம் 10-ந் தேதி திருவல்லிக்கேணியில் பாராட்டு விழா ஒன்று நடத்த மும்முரமாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. 'கலா ரசிக சிகாமணி' ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரி தலைமையில் இதற்காக கமிட்டியொன்றும் அமைக்கப்பட்டுள்ளது. டில்லி, கல்கத்தா, பம்பாய், நாகபுரி, பங்களூர், தமிழ் நாடு சங்கீத சபைகள், கலா ரசிகர்கள், பத்திரிகை ஆசிரியர்கள், விமர்சகர்கள், சங்கீத வித்வான்கள், சினிமாப்படத் தொழிலதிபர்கள், பிரமுகர்கள் கொண்ட கமிட்டியாகும் அது.

கலா ரசிகர்கள் சார்பாக ஸ்ரீமதி கமலாவுக்கு "நாட்டிய கலா ராணி" என்கிற் கௌரவப் பட்டம் அன்று வழங்கப்படும். 'பொன்னாடை' வழங்கி, பண முடிப்பும், பாராட்டுப் பத்திரங்களும் அவருக்கு அளிக்கப்படும். கமலாவின் படங்கள் நிறைந்த பாராட்டு விழா மலர் ஒன்றும் ரஸிகர்கள் சார்பாக அவரிடம் கொடுக்கப்படும்.

விழா வெற்றிகாமாக நடைபெற அன்பர்கள் தாராளமாக நன்கொடை தந்து உதவ வேண்டுமென கமிட்டியினர் கேட்டுக் கொள்கின்றனர்.

ஃ ஃ ஃ

ஸ்ரீமதி சுந்தரி தம்பியின் புதல்வி குமாரி பத்மினி பிரியதர்சினி பாரத்பைன் ஆர்ட்ஸ் சங்க ஆதாவில் கடந்த மாதம் 26-ந் தேதி செயிண்ட் மேரீஸ் ஹாலில் பரதநாட்டிய மாடினர். குறிப்பாக "நல்ல சகுனம் நோக்கி" என்கிற பதத்துக்கு அவர் நேர்த்தியாக அபிநயம் பிடித்தார். 'நடன மாடினர்', "கிருஷ்ணா நீ பேகனே பாரோ" இரண்டும் தேவலை. 'மார்வாரி', 'குறத்தி' டான்ஸ்கள் ஜனரஞ்சகமாக விளங்கின. "அழகான பொண்ணு நான்; அதற்கேற்ற கண்ணு தான்" என்கிற சினிமா நடனம் ஒன்றை லாகவமாக ஆடிக்காட்டி நல்ல 'அப்ளாஸ்' வாங்கினர் அவர்.

ஃ ஃ

ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் மாணவர் இல்லத்தின் நிதி உதவிக்காக அமரர் கல்கியின் "பார்த்திபன் கனவு" எனும் சரித்திரக் கதையை ஸ்ரீ ராமகிருஷ்ண கிருபா அமெச்சூர்ஸ் சென்ற ஞாயிற்றுக் கிழமை மயிலை ரஸிக ரஞ்சனி சபை ஹாலில் நாடகமாக நடித்தனர். நாடகமாக்கியவர் ஸ்ரீ வி. கே. பார்த்தசாரதி அய்யங்கார்.

கிருபா அமெச்சூர்ஸாரின் நடிப்பைப் பற்றிக் கேட்கவா வேண்டும்! வழக்கம் போல் ஒவ்வொருவரும் தம்தம் பாத்திரத்தில் அப்படியே பூரணமாக லயித்து நின்று நடித்தனர். முதல் தடவை போட்டதை விட இது இன்னும் நன்முக சோபித்தது. காட்சி ஜோடனைகள் மிகவும் பொருத்தமாகவும், ரம்மியமாகவும் இருந்தது குறிப்பிடத்தக்கது.

ஃ ஃ ஃ

புத்த பரிநிர்வாண ஜயந்திக் கண்காட்சியை போன 28-ந் தேதி ஜனதிபதி டாக்டர் ராஜேந்திர பிரஸாத் எழும்பூர் மியூஸியம் தியேட்டரில் திறந்து வைத்தார். "பழங்கால சரித்திரப் பெருமைகளை எடுத்துக் காட்டும் இக் கண்காட்சியிலிருந்து நாம் புது உத்வேகம் பெற்று, பாரத நாட்டை மேலும் புகழ் வாய்ந்ததாக்க வேண்டியது நமது கடமையாகும்" என்று ராஜன் பாபு அவ்வமயம் குறிப்பிட்டார்.

ஸென்டினரி ஹாலில் அமைக்கப்பட்டிருக்கும் இக் கண்காட்சியில் மிகவும் அபூர்வமான புத்த சிற்பங்களையும், அவர் காலத்திய சின்னங்களையும் காணலாம். புத்தரின் வாழ்க்கை வரலாறைச் சித்திரிக்கும் சுமார் நாற்பது ஓவியங்களும் இடம் பெற்றுள்ளன. பௌத்த மதம் பரவியுள்ள நாடுகளிலிருந்து எடுக்கப்பட்டிருக்கும் ஏராளமான புகைப் படங்கள் வேறு.

கல்வி மந்திரி ஸ்ரீ சுப்பிரமணியமும், மியூஸியம் சூபரிண்டு டாக்டர் ஏ. ஐயப்பனும் ஜனதிபதியை வரவேற்று கண்காட்சியைச் சுற்றிக்காண்பித்தனர்.

—ஸஞ்சாரி.



சென்னை சங்கீத கலாசாலையின் பத்தாவது ஆண்டு விழா சர்வகலாசாலை ஸம்ஸ்கிருத இலாகாத் தலைவர் டாக்டர் வே. ராகவன் தலைமையில் மே 21ல நடந்தது.



# மைசூர் வாசுதேவாச்சார் கீர்த்தனைகள்

ராகம் : பைரவி] [தாளம் : சதுரச்ர த்ரிபுடை

ஆ. ஸரிகமபதநிஸ்
அ. ஸ்நிதபமகரிஸ



### பல்லவி

நின்னுவினா நன்னு ப்ரோசேவா ரெவருரா ரகுவரா
நீ பதாம்போஜமு நே விடஜால (நி)

### அநுபல்லவி

பன்னகாரி வாஹன பாலித வாரண
பதிதபாவன வாஸுதேவ பன்னக சயன (நி)

### சரணம்

பூமிஜா ரமண நீகெந்துகு நிர்தய
நீ மஹிமலு நேனேமனி பொகடுது
சமதனநுதாச்ரித காமித தாயக
கமலஸம்பவாதி பூஜித நின்னே நெரநம்மிதி (நி) (39)

### பல்லவி

உன்னைத் தவிர என்னைக் காப்பாற்றுபவர் யார்? ரகுவம்சத்தில் உயர்ந்தவனே! உன் பாதாரவிந்தங்களை நான் விட முடியாது.

### அநுபல்லவி

கருடனை வாகனமாகக் கொண்டவனே! கஜேந்திரனுக்கு மோக்ஷத்தைக் கொடுத்தவனே! பாவிகளையும் கரையேற்றுவிப்பவனே! எல்லாருடைய ஹ்ருதயங்களிலும் இருப்பவனே! பாம்பின் மேல் பள்ளி கொண்டவனே! (உன்னைத்தவிர என்னைக் காப்பாற்றுபவர் யார்?)

### சரணம்

ஸீதையின் மணாளனே! இப்படி நீர் தயையில்லாதிருப்பது ஏனோ? உன்னுடைய மஹிமைகளை நான் என்னவென்று புகழ்வேன்?! புலன்களை அடக்கிய பெரியோர்களால் புகழப்பெற்றவனே! தன்னை அண்டியவர்களுக்கு வேண்டிய இச்சைகளைப் பூர்த்தி செய்பவனே! பிரம்மா முதலியவர்களால் பூஜிக்கப்பெற்றவனே! உன்னையே முழுதும் நம்பினேன். (உன்னை விடமாட்டேன்.)

